# தமிழகம்

யாழ்ப்பாணத்து நவாலியூர்

திரு. ந. சி. கந்தையா பிள்ளை

இயற்றியது

ஒற்றுமை ஆபீஸ்,

சைதாப்பேட்டை, மதராஸ்.

1934 [விலை ரூ. 2¼

# பொருளடக்கம்


TAMILAHIAM
FIRST CENTURY. A.D
VENKADAM
EYILPATTINAM
ARUVA
KANCI
R. PALAR
VADATHALA
KOVAL
R KAVIRI
POOLI NADU
THONDI
MALADU
ARU VANADU
KOVA
R PENNAI
KUDANADU
R. KAVIRI
KARUR
PUNAL NADU
KAVIRIPATTINAM
MUSRIRI
KARKA NADU
R. PERIYAR
PALANI
NAGAPATTINAM
PANRI NADU
VAIKKARAI
MATHURAI
KUTTA NADU
PANDI NADU
R. VAIGAI
SALIYUR
MANIPPALLAVAM
VENADU
PANDI
KORKAI
THEN
KUMARI
LANKA
ARABIAN SEA
குணகடல்
குடகடல்

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 6 | 12 | கோட்டுக் | கோட்குக் |
| 6 | 25 | கொண்டதுணும் | கொண்டது |
| 10 | 22 | புராண்காரர் | புராணகாரர் |
| 2[illegible] | 11 | பயிலோனியர் | பபிலோனியர் |
| 33 | 15 | காணப்படும். பஃறுளி | காணப்படும் பஃறுளி |
| ,, | 16 | ஏள்தெங்கநாடு | ஏழ்தெங்கநாடு |
| 34 | 21 | areano | arians |
| 36 | 15 | moral | mural |
| 44 | 12 | uniform | cuniform |
| 46 | 24 | இண்ணொரு | இன்னொரு |
| 60 | 9 | கட்வென் | கட்வெல் |
| 62 | 15 | திடமுறத்திய மொழிக | திடமுறத்தியம் மொழிக் |
| ,, | 16 | மடம்மகட் | மடமகட் |
| ,, | 17 | நாடன்றே | நாடன்றோ |
| 63 | 7 | நூற்றளவிற்றான் | நூற்றாண்டளவிற்றான் |
| 64 | 3 | செறை | சென்ற |
| 68 | 8 | conspcuous | conspicuous |
| 77 | 11 | மந்தமிழே | மத்தமிழே |
| 78 | 11 | வெளளாறது | வெள்ளாறது |
| 83 | 16 | ஓந்கவிடை | ஓங்கவிடை |
| ,, | 22 | தரந்கநீர் | தரங்கநீர் |
| 103 | 9 | வொரு சிறை | வொரு சிறை |
| 104 | 11 | தனியாளாய் | தனியளாய் |
| 106 | 26 | ஆண்டுகளும் | ஆண்டுகளுள்ளும் |
| 117 | 20 | பாவணார் | வாணணார் |
| 119 | 17 | ஜள்ய | ஜன்ய |
| 120 | 17 | மாலை | மலை |
| 122 | 9 | குடக்கை | குடுக்கை |
| ,, | 23 | துனைக்கருவி | துளைக்கருவி |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 127 | 1 | யியல் நிலய | யிலய நிலய |
| 130 | 26 | கார்த்த | கூர்த்த |
| 135 | 4 | பண்டதேந | பணடிதே |
| ,, | 6 | முத்திரனல் | புத்திரனல் |
| ,, | 20 | நூல்களுள்ளும் | நூல் |
| 137 | 7 | பரண்டரங்கனும் | பாண்டரங்கனும் |
| 138 | 27 | நவழில் | நல்வழி |
| 167 | 5 | which long | which was long |
| 172 | 10 | தன்னீர் | தண்ணீர் |
| 174 | 19 | முதலியவற்றுடன் | முதலியவற்றுட் |
| 176 | 1 | வழிபாடென்று | வழிபாடென்றுஞ் |
| 180 | 27 | சிவத்தியாநாநந்த அமர சிம்ஹமும் | அமரசிம்ஹமும் |
| 182 | 19 | பெற்றுதலாலே | பெற்றுய்தலாலே |
| 183 | 1 | வாற்றுக்கு | வற்றுக்கு |
| 194 | 7 | வீரத்தாய் | வீரத்தாய்மார் |
| 198 | 1 | காவல் மரமென்பது பண்டை | பண்டை |
| 206 | 3 | படா-முலை | படா அமுலை |
| 208 | 7 | ஆடவர் அணிகவகை | ஆடவர் அணிவகை |
| 225 | 19 | தளிம்பு | தழும்பு |
| 226 | 14 | பேனை | பானை |
| 228 | 8 | பார்கள் | பாள் |
| ,, | 10 | ,, | ,, |
| 237 | 12 | அவேளை | அவளை |
| 260 | 11 | நறவுல | நறவு |
| 262 | 9 | சர அய் | சா அய் |
| 265 | 17 | முதலைத் | முதலை |
| 280 | 7 | அரண்மணை | அரண்மனை |
| ,, | 9 | வெண்கே | வெண்கோ |
| 281 | 5 | வீழ்த்து | வீழத்து |

# தமிழகம்.

## கடவுள் வணக்கம்

" அரியசடை முடிபோற்றி யருள்பொழிசெம் முகம்போற்றி
விரையிதழி மலரணிநூல் விளங்கியமார் பகம்போற்றி
மருவுமுயர் பேரழகு வளருதா ளிலேபோற்றி
திருவளர் செந்தமிழ்ச் சொக்கன் திருவடித்தா மரைபோற்றி."

" தவளத் தாமரைத் தாதார் கோயி
லவளைப் போற்றுது மருந்தமிழ் குறித்தே."

## தமிழ்த் தெய்வ வணக்கம்

" மறைமுதற் கிளந்தவாயான் மதிமுகிழ் முடித்தவேணி
இறைவர்தம் பெயரைநாட்டி யிலக்கணஞ் செய்யப்பெற்றே
அறைகடல் வரைப்பிற் பாடையனைத்தும் வென்றாரியத்தோ
டுறழ்தருதமிழ்த் தெய்வத்தை யுண்ணினைந் தேத்தல் செய்வாம்"

—சீகாளத்தி புராணம்

" பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினும் ஓர்
எல்லையறு பரம்பொருள் முன்னிருந்தபடி யிருப்பதுபோல்
கன்னடமும் களிதெலுங்கும் கவின்மலையாளமும் துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே யொன்றுபல வாயிடினும்
ஆரியம்போ லுலகவழக் கழிந் தொழிந்து சிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே."

—மனோன்மணீயம்

## இயல்—க.

## தமிழ்நாட்டின் தொன்மை நிலை

### 1. குமரி கண்டம்

இந்நிலவுலகம் இன்று நமக்கு எப்படிக் காணப்படுகின்றதோ அப்படிப் பல்லாயிர மாண்டுகளுக்குமுன் காணப்பட்டிலது; அப்படியே பல்லாயிரம் ஆண்டுகளுக்குப் பின்னும் காணப்படாது. பல்வேறு ஊழிகளிற்றோன்றிய கடற்பெருக்குகளால் நிலப்பரப்பு நீர்ப்பரப்பாகவும், நீர்ப்பரப்பு நிலப்பரப்பாகவும் மாறுதலடைந்ததுண்டு. இம்மண்ணகம் பல்வேறு காலங்களில் அடைந்திருந்த வடிவங்களை நிலநூலார் தமது ஊகைகளைக்கொண்டு படங்களமைத்துக் காட்டியிருக்கின்றனர்.

ஸ்கட் எலியட் (W. Scott Elliot) என்பவர் இவ்வுலகில் ஐந்து பெருங்கடற் பெருக்குகள் உண்டாயின வென்றும், அவற்றுள் முதலாவது பதினையிரம் நூற்றாண்டுகளுக்கு முற்பட்டதென்றும், இரண்டாவது எண்ணூறாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதென்றும், மூன்றாவது இருநூறாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதென்றும், நாலாவது எண்பது ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதென்றும் ஐந்தாவது கி. மு. 9564-ல் உண்டானதென்றும் குறிப்பிட்டிருக்கின்றனர். இப்போது அட்லாண்டிக் சமுத்திரம் அலைகொழிக்கின்ற இடத்தில் முன் ஒரு பூகண்டம் விளங்கியது. அப்பூகண்டம் கடலுள் மூழ்கிப்போக அதின் மிச்சமாக விளங்கிய பொசிடோனிஸ் (Posedonis) என்னும் தீவு கி. மு. 9564-ம் ஆண்டில் உண்டான வெள்ளத்தால் மறைந்ததெனச் சொல்லப்படுகின்

றது. இதற்குச் சான்று லண்டன் நூதனசாலையிலே உள்ளதும் 3500 ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்டதுமாகிய (Troano M. S ) என்னும் கையெழுத்துப் பிரதியில் இருப்பதை ஸ்கட் எலியட் என்பவர் எடுத்துக் காட்டியிருக்கின்றனர். அது வருமாறு :—

" In the year 6 kan, on the 11th muluc in the month Zac there occurred terrible earthquakes which continued without interruption until the 13th chuen. The country of the hills of mud, the land of mu, was sacrificed: being twice up-heaved it suddenly disappeared during the night, the basin being continually shaken by volcanic forces. Being confined, these caused the land to sink and to rise several times and in various places. At last the surface gave way and ten countries were torn asunder and scattered. Unable to stand the force of the convulsions, they sank with their 64,000,000 of inhabitants 8060 years before the writing of this book."

இவ்வுலகில் ஒன்பது கண்டங்களும் ஏழு கடல்களும் ஏழு தீவுகளும் உண்டெனப் புராணங்கள் அறைகின்றன. இது ஒருகாலத்து இவ்வுலகம் அடைந்திருந்த வடிவினைக் குறிப்பதா யிருக்கலாம். தயிர்க்கடல் பாற்கடல் எனச் சொல்லப்பட்ட பெயர்கள் இக்காலம் கருங்கடல் (Black sea) செங்கடல் (Red sea) வெண்கடல் (White sea) என வழங்கும் பெயர்களை மாறுதல் கூடும். மேலே காட்டியன

இவ்வுலகம் காலத்துக்குக் காலம் பல்வேறு மாறுதல்களடைந்து வருகின்றதென்பதை வலியுறுத்தும்.

இந்தியா நாடு இன்று காணப்படும் வடிவினை முன் அடைந்திருக்கவில்லை. கன்னியா குமரிக்குத் தெற்கே காணப்படும் இந்துமா கடல் முன் ஒரு பெரிய நிலப்பரப்பாக விளங்கியது. அது கிழக்கே பர்மா தொடக்கம் தெற்குச் சீனு வரையிலும் மேற்கே ஆபிரிக்காவின் கிழக்கு தெற்குக் கரைகள் வரையிலும் வடக்கே விந்தியவரை வரையிலும் விசாலித்திருந்தது * அந்நிலப்பரப்புக்கு ஆங்கில பௌதிக நூலார் லெமூரியா, (Lemuria) என்னும் பெயர் இட்டனர். தமிழ் முன்னோர் இதனை குமரி கண்டம் என வழங்கினர்.

ஒருகாலத்துக் கடல் பொங்கியெழுந்து அதன் பல பாகங்களைத் தன்னகப்படுத்திக்கொண்டது. முன் ஒன்றாயிருந்த ஆஸ்திரேலியா, சீனு, ஆபிரிக்கா, இந்தியா முதலிய நாடுகள் அக்காலத்திலேயே பிளவுபட்டிருத்தல் வேண்டும். ஸ்கொற் எலியெட் கூறும் ஐந்தாவது கடற்கோட் காலமே அவ்வெள்ளப் பெருக்கின் காலமெனக் கருதப்படுகின்றது.

குமரி கண்டம் அழிவெய்தியபின் தென்னிந்தியாவின் தொடர்ச்சியாக இலங்கை சுமத்திரா யாவா முதலிய நாடுகளை உள்ளடக்கிய ஒரு பெருந் தீவு விளங்கியது. அதன்கண்

---

* "There is Geological evidence to prove that in very early time south India formed part of a huge continent which extended from Burma and south China in the east" to east and south Africa on the west and from the Vindya hills on the north to Australia on the south" (Rig Vedic India P. 91.)

நாவன் மரங்கள் செழித்தோங்கி வளர்ந்தமையான் அது நாவலந் (சம்புத்) தீவு என்னும் பெயரை பெறுவதாயிற்று. 'குமரித்தீவு' 'குமரி நாடு' என்றும் அது வழங்கப்பட்டது. குமரி நாட்டின் வடக்கெல்லை விந்திய மலையாக விருந்தது. இமய மலையும் சிந்து கங்கைச் சமவெளிகளும் அக்காலத்திற் தோன்றவில்லை. ஆகவே, குமரிநாடு அல்லது பழைய தமிழகம் ஆசியாக் கண்டத்தின் பகுதியாக இருக்கவில்லை. தெற்கே கிடந்த நிலப்பரப்புகளிற் பெரும்பாகம் கடலுள் மறைந்தது. அப்போது இமயமலையும் சிந்து கங்கைச் சமவெளிகளும் கடலாழத்தினின்றும் மேற்கிளம்பின. இமயமலைச் சாரல்களில் நீர்வாழ் உயிர்களின் என்புக்கூடுகள் காணப்படுகின்றன. அதனால் இமய மலை ஒரு காலத்தில் நீரின் மூழ்கிக் கிடந்ததெனத் துணியப்படுகின்றது. இமயமலையும் அதனைச் சார்ந்த நிலங்களும் மேற்கிளம்பிய பின்னும் விந்திய மலைக்கு வடக்கே நிலவிய கடல் முற்றாக மறைந்து விடவில்லை. அதன் ஒரு சிறு பாகம் வட இந்தியாவைத் தென் இந்தியாவினின்றும் பிரித்தது. சில நூலார் அதன் ஒரு பகுதிக்குக் கிழக்குக் கடலென்றும், மற்றப் பகுதிக்கு இராசபட்டினக் கடலென்றும் பெயரிட்டனர். *

குமரி நாட்டின்கண் வடக்கே குமரியாறும் தெற்கே பஃறுளி (பல + துளி) ஆறும் ஓடிக்கொண்டிருந்தன. பஃறுளியாறு வடிம்பலம்ப நின்றபாண்டியனுக்கு உரியதாக புறம் 9-ம் பாட்டால் விளங்குகின்றது. குமரியாறு கன்னியா குமரிக்குத் தெற்கே சிறிது தூரத்தில் இருந்திருத்தல் கூடும்.

---

* "The result of Geological investigation shows that in a remote age a sea actually covered a large portion of Modern Rajaputana extending as far as South and East as Aravalli mountain which Geologists have designated by the name of Rajaputana sea" (Rig ved India P. 7.)

அதனை யடுத்து அதன் பெயரால் ஓர் மலைத்தொடரும் விளங் கியது. பிற்காலத்தோர் அதற்கு மகேந்திரம் எனப் பெயரிட் டனர். இரண்டு ஆறுகளுக்கு மிடையே எழுநூறு காவதம் நிலப்பரப்பிருந்தது. * ஒரு காவதமென்பது எண்ணாயிர முழங்கொண்ட தூரம். எழுநூறு காவதம் நிலப்பரப்பும் நாற்பத்தொன்பது சிறு நாடுகளாக பகுக்கப்பட்டிருந் தது. இவ்வாறு விளங்கிய பஃறுளி குமரி என்னும் ஆறு களையும் அவற்றினிடையே கிடந்த நாற்பத்தொன்பது நாடு களையும் கடல் கொண்டமையை, "பஃறுளியாற்றுடன் பன் மலை யடுக்கத்துக் குமரிக்கோடுங் கொடுங்கடல் கொள்ள" என்று கூறுவதுடன் அமையாது "வடிவேலறிந்த வான்பகை பொறாது" என்று இக்கடல் கோட்டுக் காரணமுங் கூறுவர் ஆசிரியர் இளங்கோவடிகள். சிலப்பதிகாரத்துக்கு உரைகண்ட அடியார்க்கு நல்லார், 'நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும் என்புழி," அக்காலத்து அவர் நாட்டுத் தென்பாலி முகத்திற்கு வடவெல்லையாகிய பஃறுளி யென்னும் ஆற்றுக் கும் குமரி யென்னும் ஆற்றுக்குமிடையே எழுநூற்றுக்காவத ஆறும் அவற்றின் நீர் மலிவானென மலிந்த (1) ஏழ் தெங்க நாடும் (2) ஏழ் மதுரை நாடும் (3) ஏழ் முன்பாலை நாடும் (4) ஏழ்பின்பாலை நாடும் (5) ஏழ் குன்ற நாடும் (6) ஏழ்குண காரை நாடும் (7) ஏழ் குறும்பனை நாடுமென இந் நாற்பத் தொன்பது நாடும் குமரி கொல்லம் முதலிய பன்மலை நாடும் காடும் நதியும் பதியும் தடநீர்க் குமரி வடபெருங்கோட்டின் காறும் கடல் கொண்டொழிதலால்" எனக் கூறிய உரையில்

* விரற் பன்னிரண்டு கொண்டது சாணும் சாண் இரண்டு கொண்டது முழமாம். முழம் நாலு கொண்டது கோலாம்; கோல் 500 கொண்டது கூப்பீடாம். கூப்பீடு நான்கு கொண்டது காத மாம் (யாப்பருங் கலவிருத்தி ப-473.

கடல் கொண்ட நாடுகளும் பிறவும் இவை இவை என விரித்துரைத்தார்.

இனி குமரி யாற்றிற்கும், பஃறுளி யாற்றிற்கும் இடையேயுள்ள பெருவள நாட்டரசனாகிய செங்கோலை முதலூழித் தனியூர்ச் சேந்தன் பாடிய 'செங்கோன் தரைச் செலவு' என்னும் ஒரு சிறு நூல் உளது. இந்நூலினும் உரையினும் உள்ள ஏழ்தெங்க நாட்டு முத்தூரகத்தியன், பேராற்று நெடுந்துறையன் முதலிய புலவர் பெயர்களும் பெருவள நாடு மணிமலை முதலிய இடப்பெயர்களும் அடியார்க்கு நல்லார் உரையிற் கண்ட நாடுகள் கடல் கொள்ளப்படுவதற்கு முன் உள்ளன என்பதை வலியுறுத்தும்.

## குமரி நாடு என்னும் பெயர்க் காரணம்

மனு என்பவன் ஓர் தமிழ் வேந்தன். இவனுக்கு இழை என்னும் ஒரு பெண் மகவும் இயமன் என்னும் ஒரு ஆண் மகவும் இருந்தனர். மனு தான் ஆண்டுவந்த நாட்டின் தென் பாகத்தை யமனுக்கும் வடபாகத்தை இழைக்கும் அளித்தான். இயமன் ஆண்ட தென்னாடு கடல்வாய்ப்பட்டது. இதுபற்றியே இயமனுடைய உலகம் தெற்கில் உள்ளது என்னும் ஐதீகம் இன்று வரையும் உள்ளது. கூற்றுவனாகிய இயமனும் இவனும் ஒருவனாகப் பிற்காலத்திற் கருதப்பட்டமையினாற்போலும் இறந்தவர்கள் இயமனாட்டில் (தெற்கில்) வாழ்கின்றார்கள் எனக் கருதப்பட்டு அவர் தென் புலத்தார் என வழங்கப்படலாயினர். வடக்கே இருந்த நாடு பெண்ணால் ஆளப்பட்டமையின் குமரி நாடு என்று வழங்கப்பட்டது. தமிழகத்தின் ஒரு பகுதியாகிய மலையாளத்தில் பெண்களுக்கே ஆண்களிலுங் கூடிய அதிகாரமுண்டு. அரசுரிமையும் சொத்

துரிமையும் பெண் வழியையே சாருகின்றன. தமிழ் நாட்டில் பெண்களே நெடுங்காலம் ஆட்சிபுரிந்திருக்கிறார்கள். தீர்த்த யாத்திரையிற் சென்ற அருச்சுனன் பாண்டி நாட்டில் பெண்ணரசு செலுத்திக்கொண்டிருந்த சித்திராங்கதை (அல்லி)யை மணந்து பப்புரவாகனைப் பெற்றான் என்று பாரதம் கூறுகின்றது.

" The puranas relate that Manu, the Lord of the Dravidas divided the country into two halves giving southern portion to his son Yama and the northern where his capital was situated to his beloved daughter Ela. To this day the southern land now submerged under the sea is known to the masses as the dominion of Yama the Lord of the south. The land of Ela was kumari nadu, ruled and presided by queens. Even today in Malabar a portion of the Tamilagam the queen is the owner of the kingdom and the brother who governs the people is her representative. The succession descends in the female line; and women in Malabar are heiresses and owners of property and are treated with greater regard and consideration than men. (Tamilian Antiquary No. 1.)

" ஆராய்ச்சியில் இத்தரை (குமரிநாடு) குமரிக்கு நேர் தெற்காகக் காணப்படவில்லை. சற்று சரிந்து தென்கிழக்காகவிருக்கலாம். ஆசியாக்கண்டத்தின் ஓர்படம் எடுத்துப் பார்த்தால் நான் கூறுவது எளிதிற் புலப்படும். குமரிக்கும் இலங்

கையின் வடபாலுக்கு மேர்வரைகீறி அவ்வரையிலிருந்து தென்கிழக்காகப் போகிறதாயிருந்தால் இலங்கை, மலேய துவீபகற்பம், சாவா, சுமத்திரா, பண்டா, செலிபிஸ், போனியோ புதுக்கினி நியுசீலண்ட் முதலான எண்ணிறந்த தீவுகளைக் காணலாம்.

" தெளிந்த வானத்தில் உடுக்கூட்டங்கள் விளங்குவன போல் நீருக்கிடையில் இவ்விதமாக ஆங்காங்கு நிலத்துண்டுகள் பல அளவினும் இருப்பதைப்பற்றி எண்ணும்போது, தென்னிந்தியா முதல் நியுசீலண்ட் வரைக்கும் ஒருகாலத்தில் கடுந்தரையிலிருந்ததாகவும் ஏதோகாரணத்தால் அது பிளப்புண்டு, பலவிடத்திலும் பள்ளம்விழுந்து கடலுடன் சம்பந்தப்பட்டு கடல் நீர் ஏறினதாகவும் கருதவேண்டியிருக்கின்றது. இக் கருத்தை ஐரோப்பிய கலைஞர்களும் சரித்திர ஆசிரியர்களும் உறுதிப்படுத்துகின்றார்கள். கடலின் கண்ணுள்ள, மண் கல் முதலியவற்றை மேற்படி சாத்திரிகள் ஆராயும்போது மேற்குறித்த கருத்தை நிலைநாட்டுகின்றார்கள்.

" இக்கொள்கையை நிலைநிறுத்த வேறு காரணங்களுண்டோவென ஆராய்வாம்: மேற்கூறிய யாவா முதலிய தீவுகளில் நடைபெற்றுவரும் மொழிகள் தமிழ் மொழிக்கு அதிக உறவுள்ளனவாகக் காணப்படுகின்றன.

" ஐரோப்பிய பாதிரிமார் தமது கவனத்தை நியுசீலண்டில் செலுத்திய காலத்தில் அவர்களுடைய நாட்டம்'மேஒரிஸ்' (Maoris) என்னும் பண்டுள்ள அத்தேசத்தவரின் மொழியிற் சென்றது. அதை அவர்கள் ஆராய்ந்து பார்த்ததில் அது தமிழுக்கு எவ்வளவோ அடுத்ததாகக் காணப்பட்டது. அது பற்றி 'Taylor' என்னும் பாதிரியார் முப்பது வருடங்களுக்கு முன்னே வெளியிட்டிருக்கின்றார்.

"மேற்கூறிய காரணங்களால் தென்னிந்தியாவின் மேற்குக் கரையிலிருந்து நியுசீலண்டு வரைக்கும் பண்டு ஓரே மொழி நடைபெற்று வந்ததாகக் காணப்படுகின்றது. இதில் ஆஸ்திரேலியாவும் உட்பட்டிருக்கலாம்."

(திருவாளர் T. பொன்னம்பல பிள்ளை M.R.A.S.)

"Geology and Natural History make it alike certain at a time within the bounds of human knowledge, southern India did not form part of Asia. A large continent of which this country once formed part has ever been assumed as necessary to account for the different circumstances. The Ceylon Budhists and the Puranic writers and the local tradition of the west coast all indicate a great disturbance of the point of the Peninsula and Ceylon within recent times" (Topinard)

"மனிதனுடைய அறிவு எட்டிய ஒரு காலத்தில் தென்னிந்தியா ஆசியாவின் பகுதியாக விளங்கவில்லை யென்பதை நில நூல் சீவப்பிராணிகள் சரித்திரம் முதலியன உறுதிப்படுத்துகின்றன. பல நியாயங்களால் தென்னிந்தியா தெற்கேயிருந்த பெரிய கண்டத்தின் மிச்சமெனக் கருதப்படுகின்றது. இலங்கைப் புத்தர், புராணகாரர் முதலியோர் எழுதியுள்ள வரலாறுகளும் மேற்குக்கரையில் உள்ளவர்களின் கன்ன பரம்பரையும் இலங்கையும் தென்னிந்தியாவும் சமீபத்தில் பல குளப்பங்களுக்குள்ளாயின வென்பதைக் குறிப்பிடுகின்றன.

India, South Africa and Australia were connected by an Indo-oceanic continent in the Permian Epoch" (H. F. Blanford)

"முதலாம் காலப் பகுதியின் கடைக்கூறில் இந்து சமுத்திரத்தினூடே விளங்கிய ஒரு கண்டம், இந்தியா தென் னாபிரிக்கா, ஆஸ்திரேலியா முதலிய நாடுகளை இணைத்துக் கொண்டிருந்தது."

"Peninsular India or the Deccan (literally, the country to the south) is geologically distinct from the Indo-Gangetic plain and the Himalaya. It is the remains of a former continent which stretched continuously to Africa in the space now, occupied by the Indian ocean. The rocks of which it is formed are among the oldest in the world and show no traces of having ever been submerged. In many parts they are overlaid by a sheet of black 'trap' rock or basalt, which flowed over them as molten lava. In the Deccan we are therefore, in the first days of the world. We see land substantially as it existed before the beginning of life.

"The Indo-Gangetic plain stretches without a break from the Indus on the west to the Delta of the Ganges on the east, a distance of twelve hundred miles. When the world was still in the making and before the elevation

of the Himalaya, the space now occupied by this plain was a sea. The southern shore of this sea was what is peninsular India. With the rise of the Himalaya the sea disappeared and the rivers draining the Himalaya flowed, into the depression bringing with them the silt which is now the soil of the plain.

(Sir T. W. Holderness, G.C.B.
Peoples and Problems of India P 23, 24.)

" இந்தியாவின் தென்பகுதி கங்கையாறு பாயும் நிலப்பரப்புக்கும் இமயமலைக்கும் வேறானது. இது இப்போது இந்து சமுத்திரம் இருக்கின்ற இடத்தில் ஆபிரிக்கா வரையில் தொடர்ச்சியாக நீண்டிருந்த பழய கண்டத்தின் மிச்சமாயிருக்கின்றது. இதிலுள்ள குன்றுகள் உலகத்திலுள்ள மிகப் பழையவற்றுட் சேர்ந்தன. இவை ஒருகாலத்திலும் நீருள் மூழ்கியிருந்த குறிகள் இல்லவேயில்லை. இக்குன்றுகளின் பலவிடங்களிற் கருங்கற்பாறை தகடாகப் பாவியிருக்கின்றது. ஆகையால் அஃது உலகில் முற்காலத்தில் உயிர்கள் தோன்றும் முன்னர் இருந்தபடியே தெற்கில் இருக்கின்றது. சிந்து கங்கைச் சமவெளி சிந்துநதி தொடங்கிக் கங்கைக் கழிமுகம் வரையில் ஆயிரத் திருநூறு மைல் தூரம் இடைவெளியின்றி நீண்டிருக்கின்றது. மண்ணுலகு வளர்ந்துகொண்டிருக்கும்போது இமயமலை கிளம்பும் முன்னர் கங்கை நிலவெளியிருக்கும் இடம் கடலாயிருந்தது. அந்தக் கடலின் தெற்குக்கரையில் தென்னிந்தியா விருக்கிறது. இமயமலை கிளம்பியபோது கடல் மறைந்தது. இமயமலையிலிருந்து ஓடும் ஆறு

கள் வாரிக்கொண்டு வந்த மண்ணினால் இப்போதுள்ள வெளி நிலம் உண்டானது."

"தென்னிந்தியா ஆபிரிக்கா தொடக்கம் இந்தியாவரையும் அகன்றிருந்த ஒரு பூகண்டத்தின் கிழக்குப் பகுதியாகும். மக்கட் கூட்டத்துக்குப் பிறப்பிடமாகிய அக்கண்டத்தினின்றும் மக்கள் வேற்றிடங்களுக்குச் செல்லத்துவங்கியபோது தென்னிந்தியா மேற்கே மடகாசிகரோடும், கிழக்கே மலாயாத் தீவுகளோடும் இணைக்கப்படாமல் இருக்கவில்லை. மக்கள் தென்னிந்தியாவினின்றும் பெயர்ந்து பிறவிடங்களுக்குச் செல்லத் தொடங்கிய காலத்தில் மாத்திரமன்றி அதற்குப் பின்னும் இந்தியா ஆசியாவின் வடமேற்கு நாடுகளோடு இணைக்கப்பட்டிருக்கவில்லை. அக்காலம் மத்திய ஆசியாவில் நிலவிய கடல் இந்தியாவின் வடமேற்கெல்லையாயிருந்தது. முன் பிறநாடுகளிற் குடியேறிய மக்கள் (தமிழர்) வட இந்தியாவை அடையவில்லை. அக்காலத்து இந்தியாவின் தென்பாகம் வடபாகத்தோடு முற்றாக இணைக்கப்பட்டிருக்கவில்லை. தமிழர் வடக்கேயுள்ள சாதியாரில் (Tribes of Northern countries) வேறுபட்டவர்களாகக் காணப்படுகின்றனர். அவர்கள் (தமிழர்) தாம் இப்போ வாழ்வதும் தமது முன்னோர் பல தலைமுறைகளாக வாழ்ந்ததுமாகிய தென்னிந்தியாவுக்குத் தொடர்பில்லாதவர்கள் எனக் கூறுதல் பொருந்தாது. ஒருகாலம் வங்காளத்தின் கீழ்ப்பாகம் தமிழர் அதிகாரத்தின்கீழ் இருந்தது. புத்தருடைய காலத்துக்குமுன் தமிழர் அனம் (Annum) என்னும் நாட்டை வென்று அதற்கு பொங்லொங் (Bong Long) என்னும் பெயரிட்டார்கள். வங்காளாத்தில் 'லக்லம்' உடைய சந்ததியார் கி. மு. ஏழாம் நூற்றுண்டு தொடங்கி கி. பி. 258 வரை நீண்டகாலம் அரசுபுரிந்

திருக்கிறார்கள். சரித்திர காலத்தில் இந்தியாவுக்குப் புதிதாக வந்தவர்கள் எனச் சொல்லப்படும் ஆரியர், மக்கள் இனத்தைக் குறித்த ஆராய்ச்சியால் தமிழரிலிருந்து வித்தியாசப்படவில்லை. திராவிடர் முற்காலத்தில் தோற்றத்திலாவது மனவலிமையிலாவது ஆரியருக்குக் குறைந்தவரல்லர். தமிழர் பழமைதொட்டு தென்னிந்தியாவில் வாழ்ந்தார்கள் என்று ஒப்புக்கொண்டால் புதிதாக வேறு சாதியார் கூட்டங் கூட்டமாக வந்தபோது முன்னிருந்த மக்கள் என்ன செய்தார்கள் என்னும் கேள்வி எழுவது இயல்பு. அக்காலத்தில் வட இந்தியாவுக்கும் தென் இந்தியாவுக்கும் இடையே கிடந்த கடல் தரையாக மாற இருநாடுகளும் தொடுக்கப்பட்டன. தெற்கே இருந்தவர்கள் வடக்கே சென்றார்கள். இந்தச் செழிப்பும் செல்வமும் பொருந்திய நாட்டை அடைய முடியாதவர்களாயிருந்தால் அவர்கள் (தமிழர்) புதிதாக வந்தவர்களைத் துரத்தியிருப்பார்கள். தெற்கே இருந்த தமிழர் இயற்கைக்கு மாறாக நடந்துகொண்டார்களென்று சொல்வதற்கு இடமில்லை.

—B.C. mazumdar. The Madras Review July 1922

இந்திய வானசாத்திரப்படி இலங்கையில் இராவணனுடைய இராசதானிக் கூடாகச் சென்றதாகச் சொல்லப்படும் நிரட்சரேகை (meridian) இலங்கைக்கு மேற்கே 400 மைல் தூரத்திலிருக்கும் மாலை தீவுக்கூடாகச் செல்கின்றது.

“இக்கரைப்பாகத்தில் அமிழ்ந்திப்போய்க் காட்டின் பகுதிகளாகக் கண்டுபிடிக்கப்பட்ட குறிகள் இன்னும் இருக்கின்றன. இப்பகுதி அமிழ்ந்திப்போன லெமூரியாக் கண்டத்தின் பகுதியோ அல்லது பிந்திய காலத்ததோ என்பது மயங்கக் கிடக்கின்றது”—கதிர்காமவேலவர்–Sir P. அருணாசலம்.

" இலங்கையிலே இருந்த தெய்வங்கள் வெகுண்டு ஒரு கடல்கோளை உண்டுபண்ணின. 400,000 தெருக்களும் 25 அரண்மனைகளும் இராவணனுடைய கோட்டைகளும் இருந்த தூத்துக்குடி முதல் மன்னார் வரையுமுள்ள நிலத்தைக் கடல் அடித்துக்கொண்டு போய்விட்டது. இது துபாவர யுகத்தில் நிகழ்ந்தது. அப்படியே களனி இராசாவாகிய திசராசன் காலத்தில் 100,000 பட்டணங்களையும் 970 மீன் பிடிகாரர் குப்பங்களையும் 400 முத்துக்குளிகாரர் குறிச்சிகளையும் கடல் விழுங்கிவிட்டது." —இராசாவளி

* "பாஸ்கராசாரியர் எழுதிய வான நூற்குறிப்பில் மத்திய ரேகை (Equator) பழைய இலங்கைக் கூடாகச் செல்கின்றது. இதனால் இராவண இலங்கை இப்போதுள்ள சுமத்திரா வாக இருக்கலாமெனக் கருதுகின்றனர்."

—Ravana of Lanka by N S. Adhikari.

" The Lemurian or Sclater's Theory. இக் கொள்கையின்படி தமிழரின் உற்பத்திஸ்தானம் இமயமலை உண்டாவதன்முன் இந்து சமுத்திரத்தில் மூழ்கிப்போன லெமூரியாக் கண்டமாகும். இப்பூகண்டம் மேற்கே மடகாசிகர் வரையும் கிழக்கே மலாய தீவுகள்வரையும் பரந்து தென்னிந்தியா ஆஸ்திரேலியா என்னும் நாடுகளையும் தொட்டுக்கொண்டிருந்தது. அப்படி யிருந்தால் இந்நிலப்பரப்பு நீருள் மறைவதன்முன் தமிழர் தெற்கினின்றும் இந்தியாவை அடைந்திருத்தல் வேண்டும். —Tamil Studies P. 21

'சாவா' என்னும் தீவின் வடகரையில் மதுரை நீரிணை யென்னும் ஓர் சிறிய நீரிணை உளது. அதற்கு வடக்கே மதுரை

* இவர் கி. பி. 1114-ல் பிறந்து 1150-ல் சித்தாந்த சிரோமணி என்னும் நூல் இயற்றியவர்.

பென்னும் ஒரு சிறு தீவும் உண்டு. போணியோவின் கிழக்குக் கரையிலும் மேற்படி பெயருடன் ஒரு தீவு இருக்கின்றது. இது முற்றாக அல்லது சிறிதாகக் கடலாற் சூழப்பட்டது. இவ் விடங்களிலொன்று பழைய மதுரையாயிருத்தல் கூடும்"

—திருவாளர் T. பொன்னம்பல பிள்ளை M. R. A. S.

"Madura—(Dutch madorea) an island of the Dutch East Indies separated by the shallow strait of Madura from the N. E. Coast of Java.

—Encyclopaedia Britannica

"மூன்றும் காலப் பகுதியின் பெரும்பகுதியில் இலங்கையும் தென்னிந்தியாவும் வடக்கே கடலை எல்லையாகப் பெற்றிருந்தன. தெற்கேயிருந்த கண்டம் அல்லது பெரிய தீவின்பகுதியாக அவை இருந்திருத்தல் கூடும்."

—Alfred Russel Wallace

"At one time the Himalaya mountains were at the bottom of the sea and were slowly lifted out of it - 'once with the whales now with the eagle skies" "and at one time there was almost certainly a great continent in the middle of the Atlantic ocean.

(Book of Knowledge Page 518.)

"In the light thrown by recent researches on the structure and the origin of mountain chains the explanation of these facts is no longer difficult. From early 'Palaeozic times the peninsula of India has been dry land, a part, indeed of a great continent which in mesozoic

times extended towards the Indian ocean towards South Africa. Its Northern shores were washed by the sea of Tethys, which at least in Jurassic and cretaceous times, stretched across the old world from west to east, and in this sea were laid down the marine deposits of the Himalaya."

"In the Himalaya the geological sequence, from the ordovician to the Eocine, is most entirely marine." —Encyclopaedia Britannica

"தற்கால ஆராய்ச்சி அறிவினால் மலைத்தொடர்களின் உற்பத்தி அமைப்பு முதலியவற்றைக் குறித்த உண்மைகளை அறிந்து கொள்ளுதல் வில்லங்கமல்ல; இரண்டாம் காலப் பகுதியில் தென்னிந்தியா கடுந்தரையாக விருந்தது. அது மூன்றாம் காலப் பகுதியில் இந்து சமுத்திரத்துக் கூடாக தென் ஆபிரிக்கா வரையில் அகன்றிருந்த கண்டத்தின் பகுதியாகும். அதன் வடக்குக் கரையில் Tethys கடல் இருந்தது. அக்கடல் யூறாசிக், கிறிரேசஸ் காலங்களில் கிழக்கு மேற்காக ஆசியாவுக் கூடாகப் பரந்திருந்தது. இங்கேதான் இமயமலையின் தளம் இருந்தது.

'ஓடோவிசியன்' தொடக்கம் 'ஈஓசின்' காலம் வரை இமயமலை இருக்கும் இடம் கடலாயிருந்தது"

---

'நில நூலார் பூமியின் வயசை* ஐந்து காலப் பகுதிகளாகவும் பின் ஒவ்வொரு காலப் பகுதியையும் பல கூறுகளாகவும் பிரித்திருக்கின்றனர்.

## குமரி கண்டம் கடல்வாய்ப்பட்டதன் காரணம்

" இது (ஆஸ்திரேலியா) விந்தை மிக்க நாடு; இங்குள்ள மரஞ்செடிகளிற் பல இயற்கையாய் வேறெந்த நாட்டிலும் வளர்வதில்லை. அவ்வாறே வீணைப்பறவை, சுவர்க்கப்பறவை, ஏமு முதலிய பறவைகளிற் பலவும், கங்காரு முதலிய விலங்குகளிற் சிலவும் உலகில் வேறெங்கும் இயற்கையிற் காணக் கிடைப்பனவல்ல. மக்களும் அவ்வாறே. இவற்றால் கொள்ளக்கிடப்பது யாதெனில், ஆஸ்திரேலியா முதலில் உலகொடு சார்பு பெற்றிராத ஒரு நில உருண்டை என்பதே. உண்மை

---

*அவை வருமாறு :—

| Eras. | Epochs. |
|---|---|
| Archaean or Eozoic | Fundamental Genessis |
| Primary or Palaeozoic | Cambrian<br>Silurian<br>Devonian and old red Sand stone<br>Carboniferous<br>Permian |
| Secondary or meso zoic | Triassic<br>Jurassic<br>Cretaceous |
| Tertiary or Cainozoic | Eocene<br>Oligocene<br>Miocene<br>Pliocene |
| Post Tertiary or quaternary | Pleistocene (glacial)<br>Recent (Post glacial) |

யில் இதுவோர் விண்வீழ்மீன் (Comet). இது விசும்பினின்று யாதோ காரணத்தால் இம் மண்ணுலகின்மீது வீழ்ந்திருக்க வேண்டும். இருவகை இயக்கத்தோடு கூடிய உலகின்மேல் வீழ்ந்தபோதுதான், லெமூரியா கடல்வாய்ப்பட்டது; சிந்து, கங்கைவெளி, இமயமலை, மத்திய ஆசியா முதலிய நிலப்பகுதி கள் வெளிக்கிளம்பின. ஆஸ்திரேலியாவின் வரலாற்றை இவ் வாறு கொள்ளுமிடத்து இப்போது பூகோள நூலாராய்ச்சி யில் காரணங் காட்ட முடியாவாறு நம்மை மலைவுறுத்தும் இரு பத்து மூன்று இடையூறுகள் விலகிவிடுகின்றன. அத்தடை கட்கெல்லாம் தக்க விடை ஏற்படுகின்றன. இவற்றையெல் லாம் இங்கு விரித்துரைக்க இயலாது. ஒன்றுமட்டும் கூற லாம். விரைவாய்ச் சென்றுகொண்டிருக்கும் பம்பரத்தின்மீது ஒரு கல் தாக்குமாயின் அது வளைவாய்ச் சாய்ந்து சுற்றிப் பின் னர் ஓய்ந்துவிடும். அதுபோன்ற இவ்வுலகம் பண்டை நாளில் செங்குத்தாய்ச் சுழன்றுகொண் டிருந்திருக்க வேண்டும். அது காலை மேற்குறித்த வண்ணம் ஆஸ்திரேலியா வானத்தினின் றும் தவறிப் பூமியின்மேல் தாக்கி யிருக்க வேண்டும். அத னல் மேற்குறித்த நில நீர் மாறுதல்கள் உண்டானதோடு, பூமி யும் சாய்ந்து சுழலலாயிற்று. இற்றைக்கு நூறுண்டுகளுக்கு முன்னர் 26 டிக்கிரி சாய்வோடு சுழன்றது. அதற்கு முன்னர் இன்னும் அதிக சாய்வுற்றிருந்திருக்க வேண்டும். இப்போ துள்ள சாய்வு $23\frac{1}{2}$ டிக்கிரிகளுக்கு மேலில்லை. இவ்வாறு சென்றால் நாளடைவில் இச்சாய்வு அடியோடு மறைந்தொழிய லாம். அந்நாளில் இருவகை அயனங்களும் பட்டொழியும்; பருவ வேறுபாடுகளும் சுருங்கிவிடும். உயிர்த்திரள்களின் வாழ்க்கை நிலையும் பெரிய மாறுதலடையும். இன்னும் தொடர் ந்து இது குறித்து நாமிப்போது எண்ணிப் பார்க்கவேண்டிய

தில்லை. இங்கு குறிக்கத்தக்கதெல்லாம் ஆஸ்திரேலியா இப்புவியின்மீது வீழ்ந்து தாக்கிய ஒரு விண்மீனு மென்பதே.

திருவாளர் பா. வே. மாணிக்க நாயகரவர்கள் B. E. M. C. I.—செ.செல்வி. சிலம்பு 1. பரல் 3.

முன் கடலாயிருந்த சகரா வனாந்திரத்திலிருந்த நீர் வற்றத் தொடங்கி நிலனாக மாறியதே குமரிநாட்டின் அழிவுக்கு ஏது என்பது பிறிதோர் கொள்கை.

"சகரர் வேள்விக் குதிரை நாடித் தொட்டகலகந்துட்பட்டு குமரியாறும் பனிநாட்டோடு கெடுவதற்கு முன்" என குமரியாற்றுக்கும் அதனை அடுத்த நிலத்தின் அழிவுக்கும் காரணங் கூறுவர் பேராசிரியர். சகரகுமாரர் தோண்டிய தாற் கடலுண்டானதென இராமாயணங் கூறுகின்றது. இது ஒரு காலத்து நேர்ந்த எரிமலைக் குளப்பத்தைக் குறிப்பதாயிருக்கலாம். புராணகாரர் அதனைக் கற்பனைக் கதையால் புனைந்து கூறியிருத்தல் வேண்டும்.

## 1. இந்தியா.

இந்தியா என்பது சிந்து நதிக்கு இரு பக்கங்களிலுமுள்ள நாடுகள் என்று பொருள்படும். இது பரசீகரால் (Persians) சிந்து நதிப்பக்கங்களிலுள்ள நாடுகளுக்குக் கொடுக்கப்பட்ட பெயர். இப் பெயர் † கெரடோரஸ் (Herodotus) என்னும் சரிதாசிரியராலும் அலெக்சாந்தர் படையெழுச்சிக் காலத்திலி

"The Indian ocean formed a continent which extended from Sunda Islands along the coast of Asia to the east coast of Africa. This

† கி. மு. 5-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் விளங்கியவர்.

றுந்த சரிதாசிரியர்களாலும் கிரேக்க தேசத்துக்குக் கொண்டு போகப்பட்டது. இப்போது இந்தியா என்பது இமயமலைக்கும் கன்னியா குமரிக்கும் இடையிலுள்ள நாட்டைக் குறிக்கின்றது. இது பிறநாட்டார் பரத கண்டத்துக்குக் கொடுத்த பெயராகும்.

## 2. மக்கள் தோற்றம்.

மக்கட்படைப்பு முதற்றோன்றிய இடம் இப்போது இந்து சமுத்திரத்துள் மூழ்கிக் கிடக்கும் கண்டமாகுமென ஐரோப்பிய பண்டிதர்கள் பலர் ஆராய்ந்து கூறுகின்றனர்.

"இந்து சமுத்திரம் ஆசியாவின் கரையை ஒட்டிச் சந்தாத் தீவுகள் முதல் ஆபிரிக்காவின் கரைவரை நீண்ட ஒரு பூகண்டமா யிருந்தது. இந்தப் பூகண்டம் ஆதியில் மக்கள் முதலிற் றோன்றிற்றென்னுஞ் சிறப்புடையதாயிருக்கின்றது". (ஹேக்கல்) புதிய ஆராய்ச்சிகளால் மக்களினம் முதற்றோன்

---

large continent is of great importance from being the possible cradle of the human race."

"There are a number of circumstances (specially chronological facts) which suggest that the primeval home of man was a continent now sunk below the surface of the Indian Ocean which extended along the South of Asia as it is at present (and probably in direct connection with it) towards the east as far as further India and the Sunda Islands, towards the west as far as the Madagascar and the south shores of Africa.

றியவிடம் இப்போது இந்து சமுத்திரத்தில் மூழ்கிக் கிடக்கும் நிலமெனத் தெரிகிறது. (மக்கனூல்)

"மக்கள் இனத்தைக் குறித்த ஆராய்ச்சியால் வடக்கே உள்ள சாதிகளும் மத்தியதரைக் கடற்பக்கங்களிலுள்ள சாதிகளும் தென்னிந்தியாவினின்றும் சென்றனவாகக் காணப்படுகின்றன. கிழக்குக் கரைகளில் மக்கள் என்பு முதலிய சின்னங்கள் கண்டெடுக்கப்பட்டன. அவை இவ்வளவு காலத்துக்கு முற்பட்டனவென்று அறிந்து சொல்லமுடியாத பழமையுடையன வாயிருக்கின்றன. தென்னிந்தியாவிலிருந்த பெரிய சாதியார் தமது அறிவையும் உயர்ந்த குணங்களையும் மாத்திரமல்ல, தமது தோற்றம், வடிவம் (Physical qualities) முதலியனவற்றையும் உலகம் முழுவதிலும் பரப்பியவர்களாகக் காணப்படுகின்றனர்" என Dr. மக்லீன் என்பவர் கூறுகின்றனர்.

"ஆதி மாலமல நாபிக் கமலத்த னுதித்
தவன் மரீசி யெனு மண்ணலை யளித்த பரிசும்
காதல் கூர்தருமரீசி மகனாகி வருமகன்
காசிபன் கதிரருக்கனை யளித்த பரிசும்

---

"This large continent of former times Sclater, an English man has called Lemuria from the monkey like animals which inhabited it and it is at the same time of great importance from being the probable cradle of the human race which in all likelihood here first developed out of anthropoidapes" (Prof. Ernest Haeckel.)

அவ்வருக்கன் மகனாகி மனுமே தினிபுரந்
தரிய காதலனை யாவினது கன்றுநிகரென்
றெவ்வருக்கமும் விப்ப முறை செய்த பரிசும்
மிக்கு வாகுவின் மைந்தனென வந்த பரிசும்"

---

*The locality of the origin of the earliest race from recent researches appears to have been on lands now submerged beneath the Indian Ocean (science of man Australia Dec. 1900.)

"Investigations in relation to race show it to be by no means impossible that southern India was once the passage ground by which the ancient progenitors of northern and mediterranean races proceeded to the parts of the globe which they now inhabit. Human remains and traces have been found on the east coast of an age which is indeterminate but quite beyond the ordinary calculations of history. Antiquarian research is only now beginning to find means of supplementing the deficiency caused by the absence of materials constructed or collected by usual historical methods. These results are specially to be regretted as without doubt, the people who have for many ages occupied this portion of the peninsula are a people influencing the whole world not perhaps

by moral and intellectual attributes to a great extent by superior physical qualities."

(Dr. E. Maclean.)

என்னும் கலிங்கத்துப் பரணி மக்கட் படைப்புத் தமிழகத்தில் உற்றதாகவே கூறுகின்றது. இங்கு கூறப்பட்ட இராச பரம்பரையிலுள்ளோர் தமிழ் மக்களாகவே காணப்படுகின்றனர்.

"வழங்குவதுள் வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி, பண்பிற்றலை பிரிந்தற்று" என்னும் திருக்குறள் உரையில் பரிமேலழகர் "பழங்குடி தொன்றுதொட்டு வருகின்ற குடி; தொன்றுதொட்டு வருதல் சேர சோழ பாண்டியரென்றாற்போலப் படைப்புக்காலந்தொட்டு மேம்பட்டு வருதல்" எனப் பொருள் கூறினர்.

தமிழர் தென்னிந்தியாவை வென்று குடியேறினார்களோ அல்லது பூர்வமே அங்கு வாழ்ந்து வருகின்றார்களோ என்று அறியக்கூடாத அவ்வளவு பழமை தொட்டு இந்தியாவில் உறைகின்றார்கள் என்றும், அவர்களுடைய உற்பத்தி மதுரை அல்லது தஞ்சாவூருக்குச் சமீபத்தில் இருக்கலாமென்றும் அவர்கள் பிறநாடுகளிலிருந்து இந்தியாவை அடைந்தார்களென்பதற்கு யாதும் வரலாறு காணப்படவில்லையென்றும் Dr. வெர்கூசன் என்பவர் கூறுவர். †

---

†Their ('The Dravidans') settlements in India extend to such prehistoric times that we cannot even feel sure that we regard them as immigrants or, at least, as either conquerors or colonists on a large scale but rather as abcriginal in the sense in which that term is usullay understood.

"விவிலிய நூலின் கூற்றை நம்பி பலஸ்தீன் நாட்டிற் றான் மக்கட்படைப்பு முதற்றோன்றியதென்பது சிலர் கருத்து. யெகோவாவால் ஒரு ஆண் மகனும் பின் அவன் என்பு கொண்டு ஒரு பெண்மகளும் திடீரென்று உண்டாக்கப் பட்டமை விவிலிய நூலிற் சொல்லப்படுகிறது. இத்தகைப் படைப்பு வரலாறு உடல் வளர்ச்சி முறை நன்கு ஆராய்ந்து காட்டப்பட்ட இந்நாளில் அறிஞரால் ஒத்துக்கொள்ளப்பட மாட்டாது. நடுக்கோட்டுப் பகுதியிலேயே முதல் உயிர்கள் தோன்றுவதற்கேற்ற வசதிகள் உண்டு என்பது ஆராய்ச்சி யாளர் துணிபு" 'புரோடாஜ (Protozoa) என்னும் (வருணமும் உருவமுமற்ற) நொய்ய நீர்வாழுயிர்களிலிருந்து பஞ்சைப் போன்ற (sponges) பிராணிகள் தோன்றுகின்றன. அவைகளிலிருந்து பவளக்கொடி யாக்கும் (Coral Builder) பிராணிகள் தோன்றுகின்றன. அவைகளிலிருந்து வெள்ளி

---

The hypothesis, that would represent what we know of their history most correctly, would place their original seat in the extreme south, somewhere probably not far from Madura or Tanjore and thence spreading fan-like towards the north. They have no traditions which point to any seat of race out of India, or of their having migrated from any country whose inhabitants they can claim any kindred so far as they know they are indigenous and aboriginal. —Dr. Fergussion quoted in Tamilian antiquary No. 1.

மச்சங்களும் (Star fish) நத்தை நண்டு புழு பூச்சிகளும் தோன்றுகின்றன. அவைகளிலிருந்து பட்சிகளும் வௌவால்களும், அவைகளிலிருந்து மிருகங்களும், அவைகளிலிருந்து வானரங்களும், அவைகளிலிருந்து வாலில்லாக் குரங்குகளும் தோன்றின. கடைசியில் மனிதர் தோன்றினர் என்றும் குரங்குக்கும் மனிதனுக்கு மிடையில் உள்ள ஒரு வகைப் பிராணி இருந்திருக்கவேண்டுமென்றும் கருதப்படுகிறது. இதுவே தொல்லுயிர் நூலார் படைப்புக் கிரமங்களைக் குறித்துக் கூறும் முறையாகும். இச்சாத்திரிகள் கொள்கையோடு விவிலிய நூற் கூற்றுச் சிறிதும் ஒத்துப்போகவில்லை. மக்கட்படைப்பு இவ்வுலகில் 300,000 வருடங்கள் வரையில் தோன்றியிருக்க வேண்டுமென சாத்திரிகள் கருதுகின்றனர். மனுவின் காலத்தில் ஒரு சலப் பிரளயம் உண்டானதென்றும், அச் சலப்பிரளயத்துக்குப் பிழைத்திருந்த மனுவினின்றும் மக்கட் சந்ததி உலகில் பெருகிய தென்றும் புராணங்கள் நுவல்கின்றன.

சலப்பிரளயத்துக்குப் பின் மக்கட் சந்ததி இந்தியாவிலேயே பல்கியது என சேர்வால்டர் றலி என்னும் மேல் நாட்டறிஞர் கூறுகின்றனர். *

மனு கிருதமாலை என்னும் ஆற்றங்கரையில் தவஞ்செய்து கொண்டிருந்த ஒரு முனிவரென மச்சபுராணங் கூறுகின்றது. மனு சத்திய விரதனென்னுமோர் தமிழ் வேந்தனெனப்

*According to Sir Walter Raleigh India was the first planted and peopled country after the flood. (Dravidian India.)

பாகவத புராணம் புகலும். வைகைநதிக்குக் கிருதமாலையென்னும் பெயர் ஆலாசிய மான்மியத்திற் காணப்படுகிறது*

தமிழ்நாட்டுப் பழைய வேந்தர்களாகிய முசுகுந்தன், சிபி முதலானோர் மனுவழித் தோன்றியவர்களெனச் சொல்லப் படுகின்றனர்.

பழைய புராண வரலாறுகளிற் சொல்லப்படும் அரசர் முனிவர்களும் தென்னாட்டினராகவே எண்ணப்படுகின்றனர். காசிபர் பழைய இலங்கையை ஆண்ட சூரபன்மாவுக்குப் பிதா. இவர் தக்கன் புதல்வியர் பதின்மூவரை வதுவை அயர்த்து அவர்கள்பால் அசுரர், அமரர், கருடர், முனிவர், யக்கர், பூதர், நாகர், கந்திருவர், சித்தர் முதலிய பதினெண் கணங்களுட் பலரைப் பிறப்பித்தவராகக் காணப்படுகின்றனர். பதினெண் கணங்களெனப் பகரப்படுவோர் பழந்தமிழருக்குட் காணப் பட்ட பதினெண் குழுவினர் எனக் கருத இடமுண்டு. கி. மு. 543-ல் விசயன் இலங்கையை அடைந்தபோது அங்கு வாழ்ந் தோர் இயக்கர் நாகர் என்னும் சாதியார்களே. இலங்கையை சூரன் முதலிய அசுரரும், குபேரன் முதலிய தேவரும், இரா வணன் முதலிய இராக்கதரும் ஆண்டார்கள்.

---

*Manu is spoken of in Bhagavada-purana as the Lord of Dravida."

"In the XII Chapter of the alasya mahatmya a portion of the Skandha purana where Suta-muni addressing Rishis says as follows:—'I have described to you the origin of the river Vaigai. This river is also named as Siva-Gangai, Vegavathi, Siva Gnanam vilambiti and Kritamalai." (Tamilian antiquary No. 1.)

இந்திரன் வருணன் யமன் இராமன் கண்ணன் அருச்சுனன் முதலானோர் கார்நிற முடையவர்களாகக் கூறப்படுகின்றனர். தருமபுத்திரனை கௌதமனார் என்னும் புலவர் பாடி மகிழ்வித்த பாடலொன்று புறநானூற்றில் காணப்படுகின்றது. அதில் தருமபுத்திரர் அறன்மகன் எனக் கூறப்படுகின்றனர். அறன்மக னென்பதே பிற்காலத்தில் தருமபுத்திரன் எனச் சமஸ்கிருதத்தில் மொழிபெயர்க்கப்பட்டிருத்தல் கூடும். தருமன் யமன் தருமபுத்திரன் முதலானோருக்குரிய மொழி தமிழென்பது புலனாகின்றது. வருணன் தென் தேசத்தின் ஒரு பகுதிக்கிறை. மாருதி (அனுமந்தன்) பிதா. நெய்தல் நிலத்துத் தெய்வத்துக்கும் பெயர் வருணன். இவ்வருணனே வடக்கே உள்ளவர்களின் வழிபாட்டுக் குரியவனாகவும் இருந்திருத்தல் கூடும். மால்கரிய மேனியன்; முல்லைநிலத் தெய்வம். இந்திரன் தென்னாட்டு அரசன் அருச்சுனனுக்குப் பிதா. இவன் இராசதானி கிருஷ்ணாநதியின் முகத்துவாரத்திலுள்ள அமராபதி யென்ப. சிவபெருமான் வீரஞ்செலுத்திய எட்டு இடங்களும் தென்னாட்டிலுள்ளன. பிரம விட்டுணுக்கள் அடிமுடி தேடியது திருவண்ணாமலையில். புராணங்களில் திரிலோ

---

"வடமதுரை ஏறுமுன்னே வந்த வடிவென்றது திருமாலின் மச்சாவதாரத்தை. சத்தியவிரதன் என்னும் பாண்டியன் வையை நதியில் அர்க்கியங் கொடுத்தற்காக நீரைக் கையில் எடுத்தலும் திருமால் அந்நீரில் மீன் வடிவமாக அவதரித்து வளர்ந்தனர். இவ்வரலாறு ஸ்ரீபாகவதம் 8-ம் கந்தம் மச்சாவதாரமுரைத்த அத்தியாயத்தால் நன்கு விளங்கும். பாண்டியர்களுக்கு மீன்கொடி யமைந்தது இதுபற்றிப் போலும்" (தமிழ் விடு தூது பக். 24. குறிப்புரை)

கங்கள் என்று சொல்லப்படுவன தமிழகத்துள்ள சேர சோழ பாண்டிய மண்டலங்களென்று கருதப்படுகின்றன.

மனுவை மீன் வடிவினதாகிய ஓர் தெய்வம் சலப்பிரளயத்தினின்றும் தப்பவைத்தது என்றும் அம்மனுவின் மரபினின்றும் 'பண்டையர்'களாகிய தாம் (பாண்டியர்) தோன்றினோர்களென்னும் பொருள்பட அவர் மீன் வடிவினதாகிய இலச்சினையை தமது கொடியிற் பொறித்து வந்தனர். மீன் பிடிக்கும் பரதவர் குலத்திற்றோன்றின படியாற்றான் அவர்கள் மீன் கொடியை யுடையவர்களா யிருக்கின்றன ரென்பது சில ஆராய்ச்சியாளர் கருத்து. அது பொருந்துவதாகத் தெரியவில்லை

* சால்டியர், பயிலோனியர், எகிப்தியர், கிரேக்கர், அசீரியர் முதலிய எல்லாச் சாதியாரும் ஒரு சலப்பிரளயத்தைக் குறித்த வரலாற்றைக் கூறுகின்றனர். எபிரேயர் நாற்பது நாள் விடாமழை பொழிந்து நேர்ந்ததாகச் சொல்லும்

---

* The marvellous uniformity of the flood legends of all parts of the globe, alone remains to be dealt with. Whether these are some arctic versions of the story of the lost Atlantis and the submergance or whether they are echoes of a great cosmic parable once taught and held in reverence in some common centre whence they have reverberated throughout the world, does not immediately concern us. Sufficient for our purpose it is to show the universal acceptation of these legends.

சலப்பிரளய வரலாறும் மனுசம்பந்தமானதே. மக்கள் வெவ்வேறிடங்களிற் பிரிந்து சென்று தங்கினபோது ஒரு சலப்பிரளய வரலாற்றினையே சிறிது வேறுபடுத்தி வழங்குவாராயினர்.

இந்தியர், பாரசிகர், கிரேக்கர், ரோமர், சிலாவியர், கெல்திடர் சேர்மனியர் முதலானோர் ஒரு காலத்தில் ஒரே இடத்தில் வாழ்ந்தவர்கள் என மாக்ஸ் மூலர் என்னும் பண்டிதர் கூறுகின்றனர்.

நாங்கள் பூர்வகுடிகள் என்பதில் குறைவான எண்ணம் வைத்திராவிட்டாலும் நாகரிகத்தை எல்லா திசைகளிலும் பரப்பியதும் மக்கட் சாதியார் தோன்றிப் பெருகி வேறு நாடுகளிற் செல்வதற்கு ஏதுவாயிருந்ததுமாகிய ஒரு கண்டம் கன்னியா குமரிக்குத் தெற்கே இருந்ததெனு நம்பினாலும் தமிழர் ஊழிக்காலத்துக்கு முற்பட்டவர்கள் என்பதில் சந்தேகம் தோன்றமாட்டாது.

இப்போதுள்ள நூல்கள் மூன்றுமுறைகளில் தமிழகத்தின் தென் பகுதியை கடல்கொண்டதாகக் கூறுகின்றன. பழைய சாலடியா பபிலோனியா முதலிய நாடுகளில் பழைய நாகரிகத்தின் அறிகுறிகள் பழய நூல்களில் காணப்படுவன போல தென்னிந்தியாவிலேன் காணப்படவில்லை யென்பதற்குச் சமாதானஞ் சொல்லவேண்டியிருக்கிறது. தமிழர் எழுதுவதற்கு உபயோகித்த பனையோலை காலத்தில் ஒடிந்து அழிந்து போவதற் கேதுவா யிருந்தது என்பதை அதற்கு ஒரு சமாதானமாகக் கூறலாம்.

(Prof. சுந்தரம் பிள்ளை M. A)

தமிழர் தோன்மை அகவல்

"ஒண்மை யறிவு மோர்வு மிக்கோரே
உண்மை கேண்மின்! உண்மை கேண்மின்!!
மீன்கொடி படைத்த மேன்மை மனுக்கள்
ஆன்ற பாண்டிய ரனைவருந் தமிழர்.
தெற்கட் பஃறுளி யாறு சீர்சால்

---

"It would be needless waste of time and space to go over these flood stories one by one; suffice to say, that in India, Chaladia, Babylon, Media Greece, Scandinavia, China among the Jews and the Keltic tribes of Britain the legend is absolutely identical in all essentials. Now turn to the west and what do we find? The same story presented in its every detail—presented among the Mexicans (each tribe having in its version) the people of Gualemala, Honduras, Peru and amongst every tribe of north American Indians; it is puerile to suggest that mere coincidence can account for this fundamental identity.—(The story of Atlantis—W. Scott Elliot p-16.)

"When the ancestors of the Indians, the Persians, the Greeks, the Romans, the slaves, the Celts and the Germans were living together within the same enclosures nay under the same roof" (Lectures on the science of languaage delivered in 1861 Maxmuller.)

நற்புகழ் வடக்கண் ணளிர்மை யார்மலை
உரைதமிழ் நாடா வயங்கிய முற்கால்
திருவிட மெனும் பேரதற்குச் சிறந்தது
பின்னா ரியர்கள் பிறங்கின் னாட்டில்
உன்னி வந்து குடிபுறமுன மிங்குத்

தமிழ்மொழி வழங்குந் தகையொண் ணாலும்
இமிழிசை யைந்திணை இனமுந் தேவும்
போற்றவர் யார்க்கும் பொதுச்சிவக் கோளும்
ஆற்றருந் தனிபு மகத்தெண் ணெழுத்தும்
நயமிகு மொழுக்கமும் நனிச்சீர் தேற்றமும்

உயிர்த்திருந் தனவற முயற்றர சிருந்தது
மற்றிவை யாவும் வான்றமிழ்ப் புலவர்
சொற்ற மொழிகள் தொகைப்படு வேதம்
ஆகமம் புராணம் மவரிதி காசம்
வாகயலார் சொல் மருளி லாங்கிலங்

கற்றவர் கற்பொறி கவின்பந் தாக்கர்
தத்தர் முன்னையர் தம்முறை வழியால்
துணியப் பட்டன—தோன்றி ரினத்தில்
இணங்கா நாற்குல மியற்றினர் பின்னோர்
என்று மொருதலை விவையுண்
மன்னியுணர்ந்து மயக்கொழி வீரே."

(விருதை. சிவஞான யோகிகள்.

3. குமரி நாட்டில் தமிழ் வழங்கியதென்பது.

"முன்னிருந்த பாலி மொழியுங் கீர்வாணமும்
துன்னுங் கருப்பையிலே தோய்வதற்கு-முன்னரே

பண்டைக்காலத்தே பரவைகொண்ட முன்னூழி
மண்டலத்திலே பேர்வளநாட்டின்-மண்டுநீர்ப்
பேராற் றருகில் பிறங்கு மணிமலையில்
சீராற்றுஞ் செங்கோற்றிறற் சேங்கோ-னோராற்றும்
பேரவையிலே நூற்பெருமக்கள் சூழ்ந்தேத்தப் .
பாரரசு செய்த தமிழ்ப் பைந்தேவி"

என்னும் தமிழ்விடு தூதினால் பாலிகீர்வாணம் (ஆரியம்) முதலிய மொழிகள் தோன்றுவதற்குமுன் குமரி நாட்டில் சீரும் திருத்தமும் பெற்று விளங்கியது செந்தமிழ் மொழியெனப் புலனாகின்றது. இறையனார் அகப்பொருளுரை சிலப்பதிகாரத்துக்கு அடியார்க்கு நல்லாரெழுதிய உரை குமரிநாடு கடல் வாய்ப்படுவதன்முன் பாடப்பட்ட சில புறநானூற்றுச் செய்யுட்கள் பஃறுளியாற்றிற்கும் குமரியாற்றிற்கும் இடையேயுள்ள பெருவள நாட்டரசனாகிய தனியூர்ச் சேர்ந்தன் பாடிய செங்கோன் தரைச்செலவு அதன்கண் காணப்படும். பஃறுளியாற்றுத் தலைப்பாய்ச்சல் ஏள்தெங்க நாட்டு முத்தூர் அகத்தியன் பாட்டு முதலியனவும் குமரி நாட்டகத்தும் பண்டு வழங்கிய மொழி தமிழ் என்பதை வலியுறுத்துகின்றன.

---

## 4. தமிழர் பிறநாடுகளிற் குடியேறுதல்.

இந்துசமுத்திரத்தினூடே விளங்கிய பெரிய கண்டத்தின் பலபகுதிகள் கடல்வாய்ப் படுதலும் அங்கு வாழ்ந்து கொண்டிருந்த மக்கள் பலதிசைகளைநாடிச் செல்வாராயினர். இங்ஙனம் ஓரிடத்தினின்றும் பிரிந்துசென்று ஆசியா ஐரோப்பா ஆபிரிக்காமுதலிய நாடுகளிற்றங்கிய ஓரின மக்களே தமிழர் தொடர்பும் கூட்டுறவும் இல்லாமற்போக தாமுறைந்த நிலத்தியல்பு வெப்பம் குளிர் நடை உடை ஊண் தொழில்

வேற்றுமை முதலியவற்றால் பழக்கவழக்கங்களும் அவைபற்றிய சமயக்கோட்பாடுகளும் மாறி நாளடைவில் வேற்றுமொழியினர் போலவும் வேறு கூட்டத்தினர்போலவுங் கருதினர். தாம் சென்று உறையும் நாடுகளின் வெப்பதட்பங்களுக்கேற்ப கறுப்புநிறமுள்ள சாதியார் வெண்ணிறமாகவும் வெண்ணிறமுள்ளசாதியார் கறுப்பு நிறமாகவும் மாறுதல்கூடும்.[1]

இவ்வுலகில் ஆங்காங்கு நாகரீக வாழ்க்கையிற் சிறந்து விளங்கிய பண்டைமக்கட்சாதியாரின் சமயம், பழக்கவழக்கம் முதலியன பெரும்பாலும் ஒத்திருத்தலின் அச்சாதியார்களின் முன்னோர் ஓரிடத்தினின்றுஞ் சென்று வெவ்வேறிடங்களிற் குடி யேறினார்களென்பது தெற்றெனத் துணியப்படுகின்றது.

எகிப்திய நாட்டில் தெறல்பஃறி (Der-el-Bahri) என்னும் ஊரின் கண்உள்ள அஷ்தாப் (Hastap) அரசியின் கோயிற் சுவரிற் பொறிக்கப்பட்டிருக்கும் ஓவிய எழுத்துக் கல்வெட்டுகளில் இவ் எகுப்தியர் தென்கடலைகந்துக் குமரிநாட்டிலிருந்த பாண்டி [2] (Punt) தேயத்திலிருந்து சென்று நீலாற்

---

[1] It is believed that under certain circumstances fair races may become dark, and dark races bright, the enticle however being effected sooner than the hair or the iris of the eyes." (Origin of the Ariano-Taylor.)

மொழிநூல் - மாகறல் கார்த்திகேய முதலியார்—பக்கம்-33.

[2] This part of India could have been no other than the Malabar coast peopled by the Pandias which was probably called the land of the Pandias afterwards corrupted in Egypt into

றங்கரைக்கட் குடியேறினர் என விளக்கமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. (see Olcot's lecture on India; and Prof. G. Ramalson's ancient Egypt) அமரிக்காவிலும் தென்னமரிக்காவிலும் ஏழாயிரமாண்டுகட்குமுன் உயிர் வாழ்ந்த மக்களும் தமிழ் நாட்டிலிருந்து சென்றவர்களே என்பதற்கு வேண்டுஞ் சான்றுகள் புலனாய் வருகின்றன. (See Prof. Konrod Heable's article in Harmsworth History of the world)[3] எகிப்தில் முதல் இராச பரம்பரையைத் தாபித்து அரசு செலுத்திய 'மேன்ஸ்' என்பவர் கி. மு. 4,400 வரையில் இருந்தவர். எகிப்து அமரிக்கா முதலிய நாடுகளிலுள்ள பழைய கோயிற் சுவர்களிற் காணப்படும் சித்திர வேலைப்பாடுகள் இந்தியாவிலுள்ள கோயிற்சுவர்களிலுள்ள சித்திர வேலைப்பாடுகளுடன் ஒத்திருக்கின்றன. வட அமரிக்காவிலுள்ள ஜனங்கள் தம்முன்னோர் சூரியன் உதயமாகும் ஒரு தீவினின்றும் வந்தார்களெனக் கூறுகின்றனர். [4]ஞாயிற்றுக்குப் பகலவன் என்னுஞ் சொல்லும் மாந்

---

the land of Punt. It would be interesting to note here that among the earlier students of the subject of the origin of the Egyptians [3]Heeran was prominent in pointing out an alleged analogy between the form of the skull of the Egyptians and that of Indian races he believed in the Indian origin of the Egyptians. (Rigvedic India.)

ஞானசாகரம்

[4] The vast remains of cities and temples in Mexico Yucaton also strangely resemble those

தர் வாழுமிடத்திற்கு 'ஊர்' என்னுஞ் சொல்லும் இவை போன்றபிறவும் பாபிலோனியர் அசீரியர் [5]சால்டியர் என்னும் பண்டைத் தமிழ்மக்களில் ஒரு சாரார் அந்நாடு கடல் கொள்ளப்பட்ட ஞான்று ஆண்டினின்றும்போய் பாபிலோனியா சாலடியா முதலான நாடுகளில் குடியேறினர் என்பதூஉம் புலனாகாநிற்கும். அஃதன்றியும் சாலடியர் வழங்கிய மற்றொரு கடவுட் பெயரான முருகன் என்னுஞ் சொல்லும் தமிழ்க்கடவுளான முருகன் என்பதனோடு ஒற்றுமையுடையதாய்க் காணப்படுதலும் உற்றுணர்தற் பாலதாம். அல்லதூஉம் பகலவனை வழிபட்டுவந்த ஏதுவானே அந்நாடு பபிலோனியா என்னும்பெயர் பெறுதலானும் அது பண்டைத் தமிழர் உறைந்தநாடு என்பதைப் புலப்படுத்தும்.

---

of Egypt. The very carving and decoration of the temples of America, Egypt and India have much in common; which some of the moral decorations are absolutely identical. Amongst the Indians of North America there is a very general legend that their fore-fathers came from a land 'toward the sunrise.' Iowa and Dacola Indians according to Major J. Lind believed that all the tribes of Indians were formerly one and dwelt together on an island toward the sunrise.—(The story of Atlantis.)

[5] அலக்சாந்தர், ஆசியாவுக்குச் சென்றபோது சாலடிய குருக்கண்மார் 'டயடோரஸ்' (Diadoras) என்பவருக்கு தங்கள் நாகரீகம் 470,000 ஆண்டுகளுக்கு முற்பட்டதெனக் கூறினர். அலக்சாந்தரின் காலம் கி. மு. 350 வரையில்.

*" பினீசியாது பழயகடவுள் வழிபாடும் தமிழரது சிவ வழி பாட்டோடு மிக ஒற்றுமையுற்றிருக்கின்றது. அவர் ஞாயிற்றுக்குச் சாலப் பழயபெயராக இட்டுவழங்கிய, 'எல்' என்னுஞ் சொல் செந்தமிழ்ப் பழஞ்சொல்லாதல் கவனிக்கற்பாலது. அவர் சிவலிங்கம்போன்று நீண்டு தலைகுவிந்த கற்களை மலைமுகடுகளில் வைத்து வழிபட்டுவந்தனர். மகமதியர் தம் கடவுளுக்கு இட்டு வழங்கும் பெயராகிய "அல்லா" என்னுஞ் சொல்லும் 'எல்' என்னும் தமிழ்ச்சொல்லின் திரிபே யாகுமென இதனுண்மையை ஆராய்ந்து கண்டார் கூறுகின்றனர். கிரேக்கர் ஒலிம்பஸ் என்னும் மலைமுகட்டின்மேல் வைத்து வணங்கிய சியஸ்என்னும் தெய்வம் சிவபிரானோடு பெரிதும் ஒத்திருக்கின்றது. சியஸ் என்பது சிவம் என்பதன் திரிபு என்பது ஆராய்ச்சி வல்லோர் கருத்து. சடைமுடி யுடையராயும் முத்தலை வேல்கையில் ஏந்தியவராகவும் சியஸ் என்னுங் கடவுள் கூறப்படுதல் இவ்வுண்மையை நிறுவும். அவர்கள் அமைத்த கோயில்களின் வடிவமும் இத் தென்தமிழ் நாட்டிலுள்ள கோயில் வடிவத்தைப் பெரிதொத்து நிற்றலும் கருத்தில் பதித்தல் வேண்டும்.

வரிசை வரிசையாகக் கற்றூண்கள் நிறுத்தி அமைத்த அவர்கடம் கோயிலுள் கிணறு குளங்களும் கோயிலின் வெளியே ஒரு பலிபீடமும் (வேள்வி மேடையும்) உள்ளே திருவுருவங்களினெதிரே ஒரு பலிபீடமுமாக இரண்டு தெற்றி

---

* கி. பி. மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதியில் விளங்கிய "யூலியஸ் அபிரிகானுஸ்" (Julius Africanus) என்னும் சரிதாசிரியர் "பொனீசியரின் 30,000 வருடங்களின் சரித்திரத்துக்கு ஆதாரமாகிய நூல்களிருந்தன" வென்று கூறியிருக்கின்றனர்.

கள் தமிழ்நாட்டுத் திருக்கோயில்களிலுள்ளவாறே அமைத்திருக்கின்றனர். ரோமருடைய சூபிதர்வழிபாடும் தமிழர்களது சிவவழிபாட்டையே பெரும்பாலும் ஒத்திருக்கின்றது. "ஆங்கிலர் யர்மனியர் என்னும் இருதிறத்தாருக்கும் முன்னோரான மக்கள் செய்துபோந்த தெய்வவழிபாடும் தமிழ்மக்கள் செய்துபோதரும் வழிபாட்டோடு ஒப்புடைத்தாதலும் ஒருசிறிது ஆராய்ந்துணர்தல் இன்றியமையாதாகின்றது. ஆங்கிலர் யர்மனியர்களுக்கு முன்னோர் தியுதோனியர் (Teutons) இவர் 'woden' எனப் பெயரிய கடவுளை இறைஞ்சிவந்தனர்.......... இக்கடவுள் எல்லாக் கடவுளர்களுக்குந் தாயான ஒரு பெண் தெய்வத்தைத் தமது பக்கத்தே வைத்திருப்பவ ரென்றும் ஞாயிற்றினைக் கண்ணாகவுடையராயும் உள்ளவரென்றும் சொல்லப்படுகின்கனர்............." இனித் தெய்வங்களை அவர்கள் காடுகளிலும் தோப்புகளிலும்வைத்து வணங்கி வந்தனர். அவ்வாறு வழிபடுங்கால் முழுமுதற் கடவுளின் குறியாக ஒரு பெரிய மரத்தூணை திறந்தவெளியிலே நிறுத்தி அதனெதிரிற் பலிபீடமமைத்து தீவளர்த்து வழிபாடாற்றிவந்தன ரென்பதூஉம் அவர்தம் பழைய வரலாறுகளாற் புலனாகின்றது. இங்ஙனமே நம் முன்னோரும் திறந்தவெளியாகிய அம்பலத்தே இறைவனருட் குறியாகிய தூண்வடிவான ஒருதறியை நிறுத்தி அதினெதிரே ஒருபலிபீட மெழுப்பி வழிபட்டுப் போந்தா ரென்பதற்கும், நம் முன்னோரும் காடுகளிலும் தோப்புகளிலும் இத்தகையவாம் பலஅம்பலங்களில் இறைவனைப் பண்டு தொட்டுத் தொழுது போந்தாரென்பதற்கும் திருமறைக்காடு, திருவாலங்காடு, தில்லைவனம், கடம்பவனம், திருவானைக்கா என்னும் பெயர்களும் உறுசான்றாமென்க. தூண் வடிவு தறிவடிவு கற்குழவி வடிவு குவிந்த புற்றின் வடிவு முதலியனவெல்லாம் சிவலிங்கவடிவமே யாதலு முணரற்பாற்று.

"கிறித்த மறையின் முதற்புத்தகத்தில் எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளுக்கு, 'எலோகிம்' என்னும்பெயரே நனி சிறந்ததாய் சாலப்பழையதாய் எடுத்தாளப்பட் டிருக்கின்றது. இச்சொல் 'எல்' என்னுஞ் சொல்லிலிருந்து வந்ததெனக் கிறித்துவேத ஆராய்ச்சி வல்லபுலவோர் உரைகூறுகின்றனர். .........கிறித்து சமயத்துக்கு முன்னோரும் முதல்வனை 'எல்' என்றும் எலோகிம் என்றும் எல்சடையென்றும் ஓரோவிடங் களில் எல்எலியன் என்றும் வழங்கிவந்தமையினை உற்றுநோக் குங்கால் அவருங் கடவுளை ஒளிவடிவினன் என்றே கருதிவழி பட்டமை புலனாகாநிற்கும்.........ஈண்டு காட்டிய இவ்வரலாற் றில் 'எல்சடை' என்னும் பெயரிற்கண்ட சடையென்னுஞ் சொல்லுஞ் சிவபெருமாற்குச் சிறப்புப்பெயராகத் தமிழ்நாட் டில் வழங்கும் சடையன் என்னுஞ் சொல்லும் ஒன்றாயிருத் தல் பெரிதும் நினைவுகூறற் பாலதாகும்".

"மேலும் யாக்கோப்பு என்னும் அடியவர் இறைவனருளை நேரே பெற்று அவனைத் தொழுகுறியாக ஒரு குவிந்த கல் லினை நிறுத்தி அதன்மேல் எண்ணெயைச் சொரிந்து அத னைப் 'பீத் தெல்' அல்லது முதல்வனிருக்குமிடம் (கோயில்) என்று பெயரிட்டு வழிபாடாற்றி வந்தமையும், ஆன் என் னும் ஊரிலிருந்த பகலவன் கோயிலின்கண் ஆன் கன்றினை (நந்தியை) இரசவேல் மரபினர் வழிபட்டமையும், பலிபீடங் களின்மேலே குன்றுத் தீவேட்டு வழிபட்டமையும் இரசவேல் மரபினர் குமாரர் ஒளிவடிவின் அடையாளமான குவிந்த மணிக்கற்களை மார்பிற் கட்டிக்கொண்டு இருந்தமையும் (சிவ லிங்கதாரணம்) ஆராய்ந்துபார்க்கும் நடுநிலையாளரெல்லாம் கிறித்துவ சமயத்தினர் தம் முன்னோர் செய்து போந்த முதற்

கடவுள் வழிபாடும் தமிழ்நாட்டினர் செய்து போதரும் சிவ வழிபாடும் ஒன்றேயாமென்பதும் உணராமற்போவரோ ?*

"ஒரு காலத்தில் நமது தமிழ்மொழி ரோமாபுரி முதலான தேசங்களிலும் பரவியிருந்தது போன்று சைவசமயமும் அன்னிய நாடுகளிலெல்லாம் பரவியிருந்ததாகத் தெரிகின்றது. கீழ்க்காணும் தேசங்களில் சிவாலயங்கள் இன்னுங் காணக் கிடைப்பதால் தகுந்த சாட்சியமாகின்றது.

வட ஆபிரிக்காக் கண்டத்துள்ள ஈஜிப்ட் தேசத்திலுள்ள மெம்பிஸ் நகரத்தில் நந்திவாகனன் திரிசூலன் சாம்பவாக்ர சர்ப்பாம்பரதாரியான பரமேசுர விக்கிரகமும், பாபிலோன் பட்டணத்தில் 1200 அடி உயரமுள்ள சிவலிங்கமும், ஹைறட்டோ போலீஸ் என்னும் பட்டணத்தில் 600 அடியுள்ள சிவலிங்கமும், மெக்காவில் ஸகமக்கேஸ்வர நாமமுள்ள ஒரு சிவலிங்கமும் ஸம்ஸம் என்னும் கிணற்றில் ஒரு சிவலிங்கமும் இருக்கின்றன. ப்ரஜில் (பிரேசில்) தேசத்தில் அநேக சிவலிங்கங்களும், விக்னேசுர மூர்த்தங்களும், காரிந்த் பட்டணத்தில் பார்வதி தேவியின் ஆலயமும், கிளாஸ்கோவில் சுவர்ண கவசத்தினுல் போர்க்கப்பட்ட ஒரு சிவலிங்கமும், பிரிஜியன் தேசத்தில் ஏடன் என்னும் சிவலிங்கமும், வினியா, யகோதி, சிதரால், காபூர், பலக்புகார் முதலான இடங்களில் அநேக சிவலிங்கங்களும் இருக்கின்றன. அங்குள்ள சனங்கள் பஞ்சாட்சர பஞ்சவீர என்னும் பெயரால் அழைத்தும் அர்ச்சித்தும் வருகின்றுர்கள் என்று வீர சைவம் என்னும் மாதாந்தப் பத்திரிகை கூறுகின்றது." (சித்தாந்தம் மலர் - 3. இதழ் 3.)

---

* சிவஞானபோத ஆராய்ச்சி—ஆசிரியர் மறைமலை அடிகள்.

"Passing through the Churches and Cathedrals of London and meditating on the many semblances and traces of saivaism that present before me in every nook and corner of England, it is impossible to think of England as anything else except a saivite country."—(Siddanta Depika.)

இங்கிலாந்திலுள்ள கிறித்த ஆலயங்களையும் மூலை முடுக்குகளையும் கவனித்து நோக்கும்போது அது ஒரு சைவ நாடு அல்ல என்று கருத இடம் தரவில்லை என்று சித்தாந்த தீபிகை என்னும் பத்திரிகையில் ஒருவர் எழுதியுள்ளார்.

லிடியா என்னும் நாட்டில் ஓர் சமாதியின்மேல் ஒன்ப தடிக் குறுக்களவுள்ள ஒரு சிவலிங்கம் இருக்கிறது. தமிழ் நாட்டில் சமாதியின்மேல் லிங்கம் தாபிக்கும் வழக்கினையே அந்நாட்டவரும் கைக்கொண்டனர்போலும்.

பாபிலோனிலே உள்ள கோயில்களில் தமிழ் நாட்டில் ஆலயங்களிலே காணப்படுவதுபோலத் தேவதாசிகள் இருந் தார்கள் எனச் சரித்திராசிரியர்கள் கூறுகின்றனர், தமிழகத்தி னின்றும் பெயர்ந்து சென்று பபிலோனிற் குடியேறிய தமிழர் இவ்வழக்கத்தையும் உடன்கொண்டு சென்றார்கள்போலும்.

வட அமெரிக்காவின் ஒரு பகுதியாகிய மெக்சிகோ நக ரத்தில் சந்திர சூரியர்களுக்கு ஆலயங்கள் இருந்தனவென் றும் மொண்டி சூமா அரசன் காலத்திலும் அக்கோயில்களில் ஆராதனை, திருவிழா முதலியன நடந்து வந்தனவென்றும் சரித்திரங்களிற் படிக்கின்றோம்.

"சுமேரியரின் உடற்கூறு முதலியன அவர்களைச் சூழ இருந்த மக்கட்சாதியாரினும் வேறுபாடுடையதா யிருந்தன.

அப்படியே அவர்களுடைய மொழியும் செமெடிக்ஸ் ஆரியர் அல்லது மற்றவர்களுடைய மொழிகளோடு சம்பந்தமில்லா திருந்தது. அவர்கள் தீர்மானமாக இந்தியரின் இனத்தைச் சேர்ந்தவர்கள். பொதுவாக தற்கால இந்தியனின் முகவெட்டு இற்றைக்கு ஆயிரக்கணக்கான வருடங்களுக்கு முன்னிருந்த திராவிட சாதி முன்னோரின் வடிவை ஒத்திருக்கின்றது. இன் றும் தக்கணத்தில் திராவிட மொழிகளைப் பேசுகின்ற இந்தி யரை சுமேரியர் ஒத்திருக்கின்றனர். இந்தியாவினின்றும் தரை மார்க்கமாக அல்லது கடல்மார்க்கமாகச் சென்று பார சீகத்துக்காடாக ('டைகிரஸ் யூபிருரஸ்') என்னும் இரு நதி களின் பள்ளத்தாக்குகளை அடைந்த மக்களே சுமேரியராவர். இந்தியாவிலேயே அவர்களது நாகரிகம் வளர்ச்சியுற்றது. அங்கே அவர்கள் எழுதும் முறையை அறிந்திருத்தல் கூடும். முதல் சித்திர முறையாகவும் அதிலிருந்து இலகுவாகவும் சுருக்கமாகவும் எழுதும் முறையை அவர்கள் பயின்றனர்.

அவர்கள் பபிலோன் நாட்டை யடைந்தபோது சதுரமா கிய எழுதுகோலினால் மிருதுவானகழிமண்ணில் எழுதிவந்தார் கள். இதனால் எழுத்துக்கள் கூர்நுதி வடிவினவாகக் காணப் பட்டன. மக்கள்முதலில் நாகரிகம் அடைந்தவிடம் இந்தியா என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. சுமேரியர் இந்தியரினத்தைச் சேர்ந்தவர்களாகக் காணப்படும்போது கிழக்கிலிருந்து மேற்கை நாகரிகப்படுத்துவதற்குச் சென்ற செமட்டிக்ஸ், ஆரியர் அல் லாத சாதியார் இந்திய உற்பத்தியினுள்ளவர்களே யெனத் தெரிகின்றது. இந்திய நாகரிகம் ஆரியருக்கு முற்பட்டது ; ஆகவே இந்திய நாகரிகமென்பது ஆரியருடையதல்ல' * என

*The ethnic type of Sumerians, so strongly marked in their statures and reliefs, was so

Dr. ஹோல் என்னும் பண்டிதர் கூறுகின்றனர். இதனால் பழைய நாகரிகமக்களாகிய சுமேரியரும் தமிழ்நாட்டினின்றும் சென்றவர்களே யென்பது ஐரோப்பிய பண்டிதர்களுக்குக் கருத்தாதல் கவனிக்கற்பாலது.

---

different from those of the races which surrounded them, as was their language from those of the Semetics, Aryans or others. The face type of the average Indian of to-day is no doubt much the same as that of his Dravidian race ancestors thousands of years ago. Among the modern Indians, as amongst the modern Greeks or Italians the ancient pre-Aryan type of the land has (as the primitive of theland always does) survived, while that of the Aryan conqueror died out long ago and it is to this Dravidian ethnic type of India that the Sumerians bear most resemblance, so far as we can judge from his monuments. He was very like a southern Hindu of the Dekkan (who still speaks Dravidian languages) and it is by no means impossible that the Sumerians were an Indian race which passed certainly by land, perhaps also by sea through Persia to the valley of the two rivers. It was in the Indian Home (perhaps the Indus valley) that their writing may have been invented and progressed from a purely pictorial to a simplified and ab-

"The resemblances between the several heads of the statues discovered at Telloh or Tell-loh in Chaladia and the facial type of the Dravidians resemble.—(Rig Vedic India p. 207.)

"சால்டியாவில் 'ரொல்ரோ' என்னுமிடத்தில் கண்டுபிடிக்கப்பட்ட சிலைகளின் தலைகள் தமிழர்களின் முகச்சாயலை ஒத்திருக்கின்றன."

P. T. சீனிவாச அய்யங்கார் கூறுவது:—

இந்தியாவிலே புதியதற்கால நாகரிகம் 20,000 ஆண்டுகளுக்குமுன் தொடங்கி எல்லா ஆற்றோரங்களிலும் பரம்பி

---

breviated form, which afterwards in Babylonia took on its peculiar uniform appearance owing to its being written within a square ended stilus on soft clay. On the way they left the seeds of culture in Elam................there is little doubt that India must have been one of the earliest centres of civilization and it seems natural to suppose that the strange unsemetic, unaryan people who came from the east to civilise the west were of Indian origin, specially when we see with our eyes how very Indian the sumerians were in type "F. N." The civilization was not Aryan. The culture of India is pre-Aryan in origin as in Greece the conquered civilized the conquerors. The Aryan India owed his civilization and his degeneration to the Dravidians as the Aryan Greek did to Mycenaeans.—(Dr. Hall.)

யது. தமிழில் முதற்பருவத்திலுள்ள சொற்களெல்லாம் ஓரசை யின. சர்ஜான்மார்சல் (Sir John Marshall) என்பவர் 'ஹறப்பா' மொகென்யோடாரோ (Harappa and Mohen-yo Daro) என்னுமிடங்களில் அகழ்ந்து கண்டுபிடிக்கப் பட்ட சித்திர எழுத்துக்களைக்குறித்து எழுதி இருந்தவாறு இவ் வோரசைச் சொற்களை சித்திர எழுத்துக்களாக அமைத் தல் கூடும். இந்தியாவின் புதிபகற்கால நாகரிகம் இந்தியாவி னின்றும் கடல் வழியாகச்சென்று சுமேரியநாகரிகத்துக்கு ஏதுவாக அசீரியாவில் தங்கினது. சுமேரியருக்கும் தமிழருக் கும் முகவெட்டு ஒருவகையாக விருத்தல் தற்செயலாக ஏற் பட்டதல்ல."*

"நாகரிகம் முதற்றோன்றிய விடம் தென்னிந்தியா வென்று சொல்வது ஆதாரமற்ற கட்டுக்கதையல்ல. ஹால் (Dr. Hall) என்பவர் சுமேரியரின் உற்பத்தியைக் குறித்துக் கூறுவது உண்மையாக விருந்தால் நாகரிகம் முதல் இந்தியா விற்றோன்றி பழந் தமிழர்களுக்கிடையே பழகினதென்பது நாட்டப்படும். பின் அது பபிலோனின் நாகரிகத்தை உதய மாக்குவதற்குக் கொண்டுபோகப்பட்டது. மக்கள் நூல் வல் லார் ஒருவர் முற்பட்ட மக்கள் இந்து சமுத்திரத்துள் மறை ந்த கண்டத்தில் உற்பத்தியானார்கள் எனக் கூறுகின்றனர். சர் வால்டர் ரூலி (Sir Walter Raleigh) என்னும் பண் டிதர் சலப்பிரளயத்துக்குப்பின் மக்கள் பல்கிய விடம் இந் தியாவென நவில்கின்றனர். ஜர்யோன் எவான்ஸ் (Sir John Evans) தென்னிந்தியா ஆதிமனிதனுக்குப் பிறப்பிடமாகி இடமென அறைகின்றனர். (திராவிட இந்தியா. பக்கம் 59-60).

*Dravidian India pp. 58, 59.

*சுவாமி விவேகானந்தர் சொல்வது:—*

The Madras Presidency is the habitat of a Tamil Race whose civilization was the most ancient. A branch of Tamil Race spread a vast civilization on the Euphrates in very ancient times whose astrology religion, love, morals and rites etc., furnished the foundation of the Asyrian and Babylonian civilization and whose mythology was the source of the Christian Bible. Another branch of them spread from the Malabar coast and gave rise to a wonderful Egyptian civilization and the Aryans are indebted to the race in many respects. The colossal temples in south India proclaim the Engineering Art of the Tamil race.—(Prabuddha Bharatha Sep. 1921.)

மிகவும் புராதன நாகரிகமுடைய தமிழருடைய வாசஸ்தானமே சென்னை நகரமாகும். தமிழரின் ஒரு பிரிவினர் மிகப் பழய காலத்தில் யூபிருட்டிஸ் நதிப் பக்கங்களில் தங்களுடைய நாகரிகத்தைப் பரப்பினர். அவர்களுடைய சோதிடம், சமயம், காதல், நீதி, கிரியை முதலியன அசீரிய பபிலோனிய நாகரிகத்துக்கு அடிப்படையா யிருந்தன. அவர்களுடைய பழங்கதைகள் விவிலிய நூலுக்கு ஆதாரமாக விருந்தன. தமிழரில் இன்னொரு பிரிவினர் மலையாளக்கரை வழியாகச் சென்று நூதனமான எகிப்திய நாகரிகத்தை எழுப்பினார்கள். ஆரியர் இந்த சாதியாருக்குப் பலவகையில் கடமைப் பட்டவர்களா யிருக்கின்றனர். தென்னிந்தியாவிலுள்ள பிர

மாண்டமான கோவில்கள் தமிழர்களின் கட்டிடமமைக்கும் திறமையைத் தெரிவிக்கின்றன."

இன்னும் ஸ்ரீமத் சுவாமி விவேகானந்தர் தமது இரண்டாம் மேற்றிசைப் பிரயாணத்தைக் குறித்து எழுதிய ஆங்கில நூல் ஒன்றில் 'கருநிறமும் நீண்டமயிரும் நேரிய மூக்கும் சரிவில்லாத கரியகண்களும் உடைய ஒரு சாதியார் பூர்வ எகிப்திலும் பபிலோனியத்திலும் வசித்தார்கள். அச்சாதியார் இந்நாள்களில் இந்தியா முழுமையிலும் விசேஷமாகத் தெற்குப் பக்கத்திலும் வசித்து வருகிறார்கள். ஐரோப்பாவின் சிலபாகங்களிலும் இவர்களைக் காணக்கூடும். இவர்களே திராவிடர் எனப்படுவர்' என்று எழுதியிருக்கின்றார். (தமிழ்-தொகுதி-1 பகுதி 3. ப. 19)

"எகிப்தியருடைய நாகரிகம் மிகவும் பூர்வீகமானது அசுர்என்னும் பட்டணத்தைத் தலைநகரமாகக்கொண்ட அசுரேயநாட்டின் (Assyria) நாகரிகம் எகுப்திய நாகரிகத்துக்கு முந்தியது. இவ்வசுரேய நாகரிகந்தானும் பாபிலோனிய நாகரிகத்தைப் பின்பற்றியது. பாபிலோனிய சீர்திருத்தம் சுமேரிய அக்கேடிய நாகரிகத்தின் வழிவந்தது. இங்கு கூறியன யாவும் ஆராய்ந்து ஸ்தாபிக்கப்பட்ட உண்மைகள். சுமேரிய அக்கேடிய நாகரிகத்துக்கும் தமிழ்நாட்டுப் பூர்வீக நாகரிகத்துக்கும் ஒற்றுமை காணப்படுகின்றது. மேற்குறிப்பிட்ட விஷயத்தைப்பற்றிப் பிரபல பண்டிதர்களாகிய ஸர். எச். எச். ஜான்ஸ்டன், எச். ஜீ. உவெல்ஸ். உவில் விறடஸ்காவேன் பிளன்ற், ஹக்ஸ்லி இவர்கள் சொல்வதை மொழிபெயர்த்து எழுதுவாம். முன்னையோர் இருவரும் சொல்வது முன்னைய ஆராய்ச்சி முறையின் முடிபாகக்கண்டது. பிஷப்கால்டுவெல் பண்டிதருடைய கொள்கைக்கு மாறுபட்டது; யுத்திக்கு ஏற்றதாகத்

தோன்றுகிறது. அதுவருமாறு:—உலகத்தில் முதன் முதற் கட்டிடங்களையும் பட்டணங்களையும் உண்டாக்கியவர்கள் சுமேரிய ரென்னும் சாதியார். இவர்கள் யூதவகுப்பு ஆரிய வகுப்பைச் சேர்ந்தவர்களல்லர்; எங்கிருந்து வந்தார்களோ தெரியவில்லை. இவர்களுடைய பாஷை பலுக்கிஸ்தானத்தின் சிலபாகங்களிலும் காக்கேசிய மலைநாட்டிலும் உள்ள பாஷைகளையும் ஸ்பானியாவில் ஒருபக்கத்திற் பேசப்படுகிற பாஸ்க் என்னும் பாஷையையும் ஒத்திருக்கின்றது. இப்பாஷைகளெல்லாம் திராவிடமொழிகளொடு நெருங்கிய சம்பந்தமுடையன. சுமேரியர் கோபுரத்தோடுகூடிய கோயிலைக் கட்டினர்கள். நிப்பூர் என்னுமிடத்திலே தமது பிரதான தெய்வமாகிய எல்—லில் என்னுஞ் சூரியதேவனுக்கு ஒரு கோயிலைக் கட்டியிருந்தார்கள்.

பின்னர் ஹக்ஸ்லி இவர்கள் சொல்வது:—எகுப்தியரும் திராவிடரும் ஒரே குலமுறையில் வந்தவர்களாக விருத்தல் வேண்டும். முன்னுளிற் கறுப் பென்றும் வெள்ளையென்றுஞ் சொல்லக்கூடாத மங்கல நிறத்தினராகியவரும் மிகவும் சீர் திருத்த மெய்தியவருமாகிய ஒருசாதியார் ஐரோப்பாவில் இங்கிலாந்து பிரான்சு ஸ்பானியா என்னுமிவற்றிலும் மத்திய தரைக்கடலின் இருபக்கத்திலும், எகிப்திலும் இந்தியா முழுமையிலும், சீனதேசத்திற் பசுபிக் சமுத்திரக் கரையிலும் அமெரிக்காவிற் பீருமெக்சிகோ ஆகிய இரண்டு நாட்டிலும் பரவியிருந்தார்கள். இவர்கள் சூரியனையும் சர்ப்பங்களையும் சமயக்கொள்கைகளிற் சம்பந்தப்படுத்தியும் இன்னும் இந்தியாவில் வழங்குகிற சுவஸ்திக அடையாளத்தையும் அங்ஙனே சமயக் கொள்கைகளிற் கொண்டும் வந்தவர்கள். இவர்கள் கிறிஸ்த வாப்தத்துக்குப் பதினுயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்

டவர்கள். அது முதல் கி. மு. ஆயிரம் ஆண்டுவரையும் அதாவது பதினுயிரம் வருடத்துக்கு இவர்களுடைய நாகரிகம் நிலைபெற்றிருந்தது; வடக்கிலிருந்து வந்த வெள்ளைநிறமுள்ள ஒரு சாதியார் இவர்களைத் துரத்திவிட்டார்கள். ஐரோப்பாவின் தெற்குப் பாரிசங்களிற் புதிய கற்காலத்தினராகிய இவர்கள் குறைந்தபடி பத்தாயிரம் வருடங்களுக்குத் தமது பாஷையைப் பேசிக்கொண்டு வந்தார்கள். ஆரியபாஷை வருதலும் இவர்களுடைய மொழி அருகி மறைந்துபோயிற்று. சென்ற வருஷத்திற் 'கிறீற்' என்னுந் தீவிலகப்பட்ட கற்சாசனங்களை யாராய்ந்த ஸர். எச். எச். ஜான்ஸ்டன் என்னும் பண்டிதர் கிறித்தவாப்தத்துக்கு மூவாயிரம் வருஷத்துக்கு முன்னுள்ள அச்சாசனங்களில் எழுதப்பட்ட மொழியும் திராவிட மொழியோடு தொடர்புடைய தென்கின்றூர்.

"உற்றுநோக்கும்போது எகிப்தின் பிரதான நதியாகிய நீலநதி சுமேரிய தலை நகராகிய நிப்பூர் எல். வேல் என்னுங் கடவுட் பெயர்கள் தமிழ் மொழியாக விருக்கின்றன. பின்னும் யவனமொழி எழுத்துக்களின் வடிவம் தமிழ் எழுத்துக்களோடும் கிரந்த லிபியிலுள்ள எழுத்துக்களோடும் தொடர்புடையதாகக் காணப்படுகின்றது. (செந்தமிழ் xx......10)

"பாபிலோனியத்தில் எல். ருமார்த்துக் என்னும் பெயர்களையுடைய சூரியதேவன் அசுரேயத்தாரால் அசூர் என்னும் பெயரால் துதிக்கப்பட்டான். [அசூர் என்னும் பதத்திற் சூரியன் என்னும் பதத்தின் பிராதிபதிகந் தோற்றுவதும், ரு என்னும் பதத்தில் ரவிதொனிப்பதும் எல்லென்னும் மொழி தமிழிற் பரிதியங்கடவுளுக்குரிய பெயராதலும் உற்று நோக்கற் பாலன] இச்சூரிய தேவனேடு ஒப்புடைய தேவர்

மூவருளர். அவர் அநு, வேல், எயா என்னும் பெயரினர். மேலும், சின், ஷாமஸ், உல் என வேறு திரிமூர்த்திகளும் உளர். சின் மற்றெல்லாத் தேவர்களினுஞ் சிறந்து விளங்கினர். இவர்கட்கு ஊர், போசிப்பா, பாபிலோன்கலா, தூர்சர்க்கினு முதலிய இடங்களிலெல்லாம் பெரிய கோயில்க ளமைந்திருக் கின்றன. ஆண்டின் மூன்றும் மாதமாகிய சிவன் என்னும் மாதம் இவருக்கு உரியதாயிருந்தது. இளம்பிறைச் சந்திரன் இவருடைய இலச்சினை. இவ்வடையாளத்தினல் குறிக்கப்படு வர் அன்றேல் நீண்ட அங்கியணிந்த மானிட வுருவமும் சிரசில் மும்முடியும் முடியின்மீது பிறைச் சந்திரனுமுள்ள உருவம் இவருடைய உருவமாகும். ஆசுரேய பாபிலோனிய கால தேயமனைத்தினும் படைத்தற் கடவுளுக்கு வேல் என்று பெய ருண்டு. (செந்தமிழ் XX......12.)

வட இந்தியாவுக்கும் தென்னிந்தியாவுக்கு மிடையில் கடல் கிடந்தபோது இரு நாடுகளுக்கும் தொடர்ச்சி ஏற்பட் டிலது. அக்காலத்துத் தென் இந்தியாவினின்றும் மரக்கல வழியாக வட இந்தியாவை அடைந்த வணிகர் அங்கே தங் குவாராயினர். இவர்களிடமிருந்து ஆரியர் மரமரக்கலஞ் செய் யும் முறையைக் கற்றுக்கொண்டனர். இருக்கு வேதத்திலே சொல்லப்படும் பாணீஸ் (Panis) என்பவர்கள் தமிழ் வியா பாரிகளே. இவர்கள் தமிழ்ப்பாணர்களென்பது சிலர் கருத்து. வடநாட்டிற் றங்கியின் அவர்களாற்றுரத்தப்பட்ட பாணீஸ் சோழமண்டலக் கரையிற்றங்கி அங்கிருந்து மரக்கல வழியாக பொனீசியாவில் குடியேறினர் இவர்களே (Punicrace) என மேற்றிசைச் சரித்திரக்காரராற் குறிப்பிடப்படுவோர். சோழ மண்டலக் கரையினின்றும் சாலடியாவிற் றங்கினோர் சாலடி யர்களென்றும் பாண்டிய நாட்டினின்றும் சென்று எகிப்திற்

றங்கினோர் எகிப்தியர்களென்று சரித்திரவல்லார் மொழிகின்றனர்.

"ஆரியரின் மிகப் பழைய நூலெனக் கருதப்படும் இருக்கு வேதத்திலும் பாணரைப் பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கின்றது. அவர் கடலிலுங் காலிலுஞ் சென்று வாணிகஞ் செய்பவரென்றும் வகுப்பு வேற்றுமை பாராட்டாதவராயினும் ஆரியர் கொள்கைக்கு உடன்படாதவரென்றும் கூறப்பட்டிருக்கின்றது. அவரைப் பாணீஸ் (Panis) என்று இருக்கு வேதங் கூறும். மேல்நாட் டிலக்கியங்கள் அவரைப் பூனிக்குழுவினர் (Punicrace) என்று கூறுகின்றன. அவர்கள்தான் சிரியாவின் (Syria பக்கத்திற் குடியேறியபின்னர் பொனீசியர்கள் Phoenicians) என்றழைக்கப்பட்டனர். "பாணர் காந்தார கபூலிஸ்தான் வழியாக மேலாசியாவிற்கும் போண்டஸ் (Pontus) மாகாணம் பாஸ்போரஸ் நிலவொடுக்கம் (Isthmus of Bosphorous), இவைகளின் வழியாக ஐரோப்பாவிற்கும் பல பிரிவுகளாகச் சென்றனர். காந்தார கபூலிஸ்தான் வழியாகச் சென்ற பாணர் கீழ் அரேபியாக் கரையையும் பாபிலோனியாவையுந் தாண்டிச் சிரியாவின் வழியாகச் சென்று நிலைத்த நாட்டுக்கு பொனீஷியா என்று பெயர் பாணருடைய நாடு பொனீசியா எனப்பட்டது. பேர்சியன் குடாக்கரையி லிருந்தோர்கள் அவரைக் கடற் கடவுளென்று நினைத்து வணங்கினர்.

பின்னும் பாணர் டைகிரிஸ்யூப்ரெட்டிஸ் (The Tigris and the Euphrates) ஆற்றுப் புறங்களுக்கருகே குடியேறி நாகரிகமாகிய விளக்கை ஏற்றினர். அவ்வாறேற்றப்பட்ட விளக்கிலிருந்து வட ஆசியாவெங்கு மொளி பரவிற்று. பாணர் குடியேறுவதற்கு முன் பொனிஷியா லெபெனன் (Leba-

non) என்ற பெயர் பெற்றிருந்தது. பொனிஷிய ரென்பவர்
கிறிஸ்து பிறப்பதற்கு முற்பட்டவரென்பது சூலியர் ஆபிரிக்
கானவின் முடிவு. ஆகவே பாண்டியரின் வரலாறு அதற்கு
முற்பட்டதென்பது தெரிய வரும்.

" இதற்குள்ளாக நிலத்தினமைப்புச் சிறிது மாறிற்று.
பஞ்சாப்பிற்குத் தெற்கே இருந்த கீழ்கடலும் அரச பட்
டணத்தை ஒட்டியிருந்த அரசப்பட்டணக் கடலும் நாடு கட
லாகும்; கடல் நாடாகும்; என்பதை யொட்டி மேடாயின.
மரக்கல மோட்டப் பாணரிடங் கற்றுக்கொண்டும் போதிய
மரமில்லாததால் கடல் கடக்க முடியாதிருந்த ஆரியருக்கு
அப்பொழுது தென்னாடு நோக்கிப் போக முடிந்தது. ஆத
லால் தமிழரது நாகரிகத்தைக் கற்றுக்கொண்டு மென்மேலும்
பெருகுவதற்கு அவரால் முடிந்தது. சோழமண்டலக் கரையி
லிருந்த தமிழர் வடநாடு போந்த கடற்பாணரை ஒத்த நாக
ரிகத்தினர் அச்சோழர்கள் பாணருடன் சென்று ஒரு நாட்
டிற் குடியேறினார். அக்குடியேற்ற நாட்டிற்கு சோழநாடு
அல்லது சாலிதியா (Chaldia) என்று பெயர் * அந்நாட்
டையே ஷைனார் நாடென்றும் (Shinar Land) பாபி

* As the Cholas had been Aryanised they probably went there with their gods and Aryan priests and called, their colony. 'Chola-deca, which word through corrupted pronunciation came to be known as Chaldea ie the land of Cholas. This land was the Shinar land of Semites and the Babylonia of the Greeks. (Rig Vedic India P. 20.)

லோனியா என்றுங் கூறுப. அங்குக் குடியேறியவருக்குச் சுமேரியா (Sumerians) என்று வேறு பெயருமுண்டு. பாபி லோனியாவிலேயே சுமேரியர் பிறந்தவர் என்று கூறுவதற்கு அந்நாட்டு மண்ணும் நிலமும் இடந்தரா. சாலிதியாவிலுள்ள டெல்லா (Telloh) என்ற விடத்திலிருந்து அகப்பட்டுள்ள சில உருவங்களின் தலைகள் தமிழரின் தலைகளை ஒத்திருக்கின் றன. தமிழரது மொழியைப் போன்ற சுமேரியரது மொழி யும் ஒட்டுச் சொற்களையுடையது. அச்சுமேரியர்தான் பாபி லோனியாவிலும் அசீரியாவிலும் நாகரிகத்தை வளர்த்தவ ராவர். இருக்கு வேதத்தில் சந்தன மரத்தைக் குறித்து யாதொரு குறிப்புங் காணப்படாததாலும், சந்தனமரம் மலை பாளக்கரையின் தனிப்பொருளாகையாலும் பாபிலோனியா இலக்கியங்களிற் காணப்படும் சந்தனம் தமிழராகிய சாலிதிய ராலேதான் கொண்டுபோகப்பட்டதென்று நினைக்க இட முண்டு. மொழிபற்றிய இலக்கணமும் மண்டையோடு பற் றிய செய்திகளும் தமிழர்களுக்குஞ் சுமேரியர்க்குமுள்ள தொடர்ச்சியை வலியுறுத்துகின்றன. பாபிலோனியாவிலும் பாம்பைத் தெய்வமாகக் கொண்டாடுவதினின்று அத்தொடர் ச்சி பசுமரத்தாணி யாகின்றது. சோழர்கள் சாலிதியர்க்குச் சிற்ப வேலைகளைக் கற்பித்தனர். தென்னிந்தியாவினின்று சென்ற சேத்துக்கள் அல்லது சிரேஷ்டிகள் (Seths or Shrestis) என்போரே சாலிதியாவில் சேட்டுகள். (Saits) * என்றழைக்கப் பட்டனர். அச்சேட்டுகள் இன்றேல்

---

* சேட்டுகள் என்போர் வியாபாரிகள் என்று சொல்லப் படுகின்றனர். ஆகவே செட்டிகள் என்னும் தமிழ்ச்சொல் சேட்டுகள் எனத் திரிந்திருத்தல் கூடும்.

சாலிதியாவின் கலைப்பெருக் கவ்வளவு மிகுந்திராதென்பது திண்ணம். மெசப்படேமியாவி லெழுந்த இந்தச் சாதி யாரின் நாகரிகம் பதினோராயிரமாண்டுகளுக்கு முற்பட்ட தென்ப. "பாண்டியர்கள் பெர்சியா அரேபியா வழியாகச் சென்று எகிப்தில் (Egypt) குடியேறினர். அவர்கள் பண்டு நாட்டிலிருந்து (Land of Punt) வந்தவராக அந்நாட்டு வரலாற்றிலுங் கூறப்பட்டுள்ளது. பண்டு நாடென்பது பாண்டி நாடாகிய தமிழ் நாடே. எகிப்தியருடையவும் தமிழருடைய வும் மண்டையோடுகள் ஒத்திருப்பதே போதியசான்று. தமிழரைப்போலவே எகிப்தியரும் ஒவ்வொரு திங்களிலும் மலக்கழிவு மருந்தருந்தினர். பெரியோரை வணங்குதல் இரு பாலாரிடத்து முண்டு. உயிரினழிவிலாத் தன்மையில் இரு பாலார்க்கும் நன்னம்பிக்கையுண்டு. துன்பகாலத்திலும் பிரி வாற்றுமை நிகழ்ந்தழியும் தலைமயிரைக் களையாது வளரவிடும் வழக்க மிவரிடமுமுண்டு. அம்மை அப்பன் என்ற பகுப்பு எகிப்தியரிடமுமுண்டு. புறவழுக்கு மிகுந்த உயிரென்று பன்றி தமிழராலுமெகிப்தியராலும் பன்றுளாக இகழப்பட்டு வரு கிறது. இவையெல்லாம் எகிப்தியருக்கும் தமிழருக்குமுள்ள புணர்ச்சி யுண்மையைக் காட்டுகின்றன.

"இவ்வாறு தமிழராகிய பாண்டியரின் தொடர்பால் வந்த எகிப்தியருடைய நாகரிகமே உலகிற் பெரும்பாலும் பாவிற்று. எகிப்தியர் நாகரிகமே முதலிலெழுந்ததென்று சில ரும் பாபிலோனியரின் நாகரிகமே முற்பட்டதென்று சிலரும் கூறி வாதிப்பர். அவ்விருவர் நாகரிகமும் தமிழரான் வந்ததே யன்றி வேறல்லவென்பது பாண்டியர் குடியேறிய நாடே எகிப் தென்றும் சோழர் குடியேறிய நாடே சாலிதியாவென்றும்

சாலிதியர் குடியேறிய மெஸப்பொட்டேமியாவாகிய நாடே பாபிலோனியாவென்றும் வழங்கப்பட்டன என்று முற் கூறிப் போந்தவற்ருல் விளங்காநிற்கும். பாணருடைய நாடே பொனீஷியாவென்றும் மேலே கூறப்பட்டது. இவ்வெகுப்தி யரும் பாபிலோனியரும் பொனீஷபருமே கிரேக்கருக்கு நாக ரிகங் கற்பித்தவர். கிரேக்கருக்குக் கற்பிக்கப்பட்டதை கிரேக்க ரிடமிருந்து உரோமர் அறிந்தனர். பின்னர் உரோமர் தாங் கற்றுக்கொண்டவற்றை ஐபீரியர், கெல்த்கள், தியூதர்கள், சிலேசர்கள் (Iberans) Celts, Teutons and the Slavs) முதலாஞேருக்குத் தெரிவித்தனர். இவ்வாறே உல கெங்கும் தமிழரிடமிருந்து நாகரிகம் பரவிற்று. (செந்தமிழ்ச் செல்வி சிலம்பு—7—பரல் 1.)

இதுகாறும் கூறியவற்ருல் தமிழகத்தினின்றும் சென்ற மக்கள் இப்பூவுருண்டையின் பல பாகங்களிற் சென்று தங்கி பற்பல சாதியினர் என்னும் பெயரிணைப் பெற்ருர்களென்பது தெளிவுற விளங்கும்.

## 5. முதற்கட்டோன்றிய மொழி

தமிழ் நாட்டிலேயே மக்கட் படைப்பு முதற்கணுற்ற தென தக்க பிரமாணங்களால் மேலே நிறுவப்பட்டது. ஆகவே மக்கள் முதற் பேசிய மொழி தமிழ் என்பது தானே பெறப் படும். ஒரு மொழியின் அடியாகவே உலகில் உள்ள பல மொழிகள் தோன்றியிருக்கின்றனவென்று மொழி ஆராய்ச்சி வல்ல பண்டிதர்கள் துணிகின்றனர். மொழி ஆராய்ச்சி வல்ல நல்லூர் Rev ஞானப்பிரகாசர் தமிழ்ச் சொற்கள் இந்து ஐரோப்பிய மொழிகளில் திரிந்து வழங்கியிருக்கும் வகை யிணை யாவரும் எளிதிற்கண்டு மகிழுமாறு பத்திரிகைகள் வாயி

லாகவும் புத்தக வாயிலாகவும் விளக்கியிருக்கின்றனர். சுமேரிய மொழிக்கும் தமிழுக்கும் உற்பத்தித்தானம் ஒன்று என்பது அவர் கருத்து * ஆரியமும் அம் மொழியிலுள்ள நான்

---

*" That the roots of a large majority of Indo-European words are to be found in ancient Tamil is not a mere theory but a fact ascertained by extensive induction. It is not from the similarity of sounds and meanings alone that the radical identity of words in the so-called Dravidian and Aryan languages was deduced." (Pedigree of words.) Rev S. G.

"These first words of Tamil are also the long forgotten roots of most words in all the Indo-European languages Tamil first words or roots take us back, thus to the remotest period of human history when only a few scores, or perhaps a few hundreds, of monosyllabic words without inflection, formed the sole language of what are known as the Aryan and Dravidian races (Tamil roots in other languages. Rev. S. G.)

" The primary monosyllabic words of Tamil carry us back to the very roots of language. The Sumerian speech old as it is, appears comparatively young when viewed in the light of the earliest word forms which

மறைகளும் தோன்றுவதன்முன் உலக முழுமையும் தமிழ் மொழி வழங்கியதென்பது Prof சுந்தரம் பிள்ளை அவர்கள் கருத்து.

“சதுமறை ஆரியம் வருமுன் சகமுழுது நினதாயின் முதுமொழி நீ யனாதியென மொழிவதும் வியப்பாமோ எனத் தமது கருத்தை பிள்ளை அவர்கள் மனோன்மணியத்தில் விளங்கக் கூறியிருக்கின்றனர்.

* “சாவகம் முதலிய ஐவகைத் தீவிலுள்ள மொழிகளும் இமயமலைச் சார்பில் ஒருவகைச் சாதியார் பேசுகின்ற மொழியும், விந்திய மலையின் கிழக்கு முனையிலுள்ள கூடிய நாகபுரி

---

Tamil displays and of which Sumerian forms are a later development”. “An unbiassed study however, will bear out the contention that both (Tamil and Sumerian) streams are from the same fountain head (Sumerian and Tamil. Rev. S. G.)

* Java is rightly famous for its Hindu temple. Great care is bestowed on the decoration on the walls and again sculptures of heroes and half Gods. mentioned in the ancient Hindu poems the Ramayana and Mahabharata are to be found. Most of them (People of Bali) are worshippers of Shiva (Slayters monthly Aug 1921.)

The language spoken now at Kamschatka, the north eastern corner of Asia, is considered

யில் ஒருவகைச் சாதியார் பேசுகின்ற மொழியும் அம்மலையில் அம்பரமென்னுஞ் சிகரத்தில் (Mt. Abu) வசிப்பவர்தம் மொழியும் திபெத் நாட்டு மொழியும், பெலுஜிஸ்டான் தேசத்தில் தவுத்புத்திர என்னுஞ் சாதியார் பேசுகின்ற மொழியும், ஐரோப்பாகண்டத்துள் ஆஸ்டிரியா நாட்டு மொழியும் பிறவும் தமிழின் சிதைவெனச் சரித வாராய்ச்சியில் வல்ல பெரியோர் கூறுவர். தவுத்புத்திர என்பது திராவிட புத்திர என்பதன் சிதைவு" "ஆப்கானஸ்தான் என்னும் மகம்மதிய நாட்டில் ஓர் நகருக்கு தமிழக் என்னும் பெயர் வழங்குவதோடு அந்நகரில் குடியேறிய மகம்மதியரும் தமது பாஷையோடு தமிழையுங் கலந்து பேசுகிறார்கள்."

"ஆசியாவில் சைபீரியா நாட்டில் அக்கின் சாதியார் மொழியும், வட ஐரோப்பாவில் பின்சாதியார் மொழியும்,

---

to be a dialect of Tamil (Sir T.W. Hunter) 'The language spoken by the maories in far off New Zealand which denotes the utmost southern limits of the 700 kathams of the Tamil land' from Cape Comorin, and the language spoken in the numerous groups of islands between these twoboundaries are allied to Tamil"(Indian Antiquary Vol x) 'The language spoken in Tascany in Italy is a dialect of Tamil (J.R.A.S) 'It is said that the Chinese has some affinity to it, T. P. P. 1913). 'The three classic languages of the world viz, Sanskrit, Hebrew and Greek contain Tamil words in the Vocabulary' (Rhys. Davids:' Tamil India P. 38.)

மீட்டியா நாட்டிலுள்ள பிஹிஸ்டன் சாசனங்களில் எழுதியுள்ள மொழியும், திராவிட சம்பந்தம் பெற்றுள்ளன; பால்டிக் கடல் முதல் மலையாளம் வரையில் திராவிட சம்பந்தமாம். திராவிடம் தொன்றுதொட்டுள்ளதொன்று; ஆரியருக்கு முன் நாகரிகமடைந்தவர் திராவிடர்; வடபால் மேல்பாலுள்ள ஔஸ்டிராலியா தேசத்தாரது, மொழியுள் நான், நாம், நீ, நீங்கள் அவனென்னுஞ் சொற்களொத்துள்ளன; மலையாளம் தெலுங்கு, கன்னடம் துளுவம், குடகுதோடம், கோட்டம், காண்டி, ஊரான் முதலிய பாஷைகள் தமிழ்ச்சிதைவு என்று சரித்திரப் புலவர் ஹண்டர் என்பவர் கூறுவர்.

"இன்னும் வடமொழிக்குத் தமிழ் முற்பட்டது எனவும் இத்தாலியா தேசத்திற் பல நூற்றாண்டுகளுக்கு முன்னே தமிழர்களுக்குச் சம்பந்தமான சாதியார்கள் இருந்தார்களென வும், அறிஞர் கால்டுவெல் கூறுவர். எட்வார்ட்களார்டு (Edward Claurd) என்பவர் தாம் எழுதிய யூதருடைய சரித்திரத்தில் மங்கோலியர், பீனிஸ் இச்சாதியார்களுக்கு மூல புருடர்களாக இருந்தவர்கள். ஈழ நாட்டிலிருந்து பரசீக வளை குடாவைச் சூழ்ந்து குடியேறி யிருந்தார்கள் எனவும், சுமேரிய ரென்னும் சாதியாருக்கு முன்னும், எகிப்து தேசத்தார் தலை யெடுப்பதற்கு முன்னும் அவர்கள் நகரங்களையும் இராசதானி களையும் உண்டாக்கினார்களெனவும்; அவ்விராசதானிக்கு ஊரெனவும், அவ்வூர் சோமசுந்தரக் கடவுளுக்கு உறையு ளெனவும் வெற்றிவேற் குமரன் அவர்தங் கடவுளெனவுங் கூறுவர். (மொழிநூல்)

"தென்னாட்டுத் திராவிட மொழியிலிருந்து ஜப்பான் மொழி தோன்றியதென்று புங்கி உத்தமர் கூறுகின்றார். (லோகோபகாரி Oct. 9, 1930.)

புத்த இந்தியாவின் ஆசிரியராகிய Prof. Rhys. David என்பவர் வேத பாடல்களில் தமிழ்ச் சொற்கள் கலந்திருக்கின்றன' எனக் கூறுவர்.

வேதபாடல்கள் செய்யப்படுகின்ற காலத்தில் ஒலி வேறுபாடுடைய வேறு மொழி ஒன்று இருந்திருக்க வேண்டுமென்றும் அம்மொழியிலுள்ள பல சொற்கள் வேதபாடல்களிற் கலந்திருக்கின்றனவென்றும் (A. A. Macdonell) மாக்டொனெல் என்னும் பண்டிதர் கூறுவர்.

Dr. கட்வெல் என்பவர், அக்கா, அத்தை, அடவி, அம்மா, ஆணி, கடுகு, கலா, குடி, கோட்டை, நீர் பட்டணம், பாகம், பலம், மீன், வள்ளி முதலிய சொற்கள் சமஸ்கிருதத்திற் கலந்திருக்கின்றன எனக் கூறுவர்.

"பஞ்சாப் சிந்து பழமையை நோக்கியபின் P. T. ஸ்ரீனிவாச ஐயங்கார் கொண்டுள்ள அனுமானம் உருசிகரமானது. தனித் தமிழ்ச் சொற்களின் ஆராய்ச்சியால் இந்தியாவின் புதிய தற்கால நாகரிகத்தை நன்கு அறிந்துகொள்ளலாமென்றும், முதற்பருவத்துள்ள தமிழ்ச் சொற்கள் ஓரசையினவாயிருத்தலின் ஜேர்யோன் மாசல் குறிப்பிட்ட ஒலிய எழுத்துக்களை இப் பழந்தமிழ்ச்சொற்களால் எழுதிக் காட்டலாமென்றும், 20,000 வருடங்களுக்குமுன் இந்தியாவில் வழங்கிய மொழிகள், தமிழ்ச் சம்பந்தமானவை யென்றும், கோதாவரிக்குக் கீழ்ப்புறத்து வழங்கும் மொழி பழந்தமிழ்ச் சம்பந்தமானதென்றும் அவர் கருதுகின்றனர். தற்காலம் வடஇந்தியாவில் வழங்கும் வடமொழி சம்பந்தமாகிய மொழிகள் பழந்தமிழ் வழிவந்தனவும் மிகுதியும் சமஸ்கிருதப் போக்கைத் தழுவியனவுமாகிய மொழிகளே யென்பது ஐயங்காரவர்கள் கருத்து. (திராவிட இந்தியா P. 78, 79.)

# இயல்—2

## மொழி

### 1. தமிழ்

தமிழ் என்னுஞ் சொல் இனிமை என்னும் பண்புணர்த்தும் "தேனுறை தமிழ்" "தமிழ் தழீ இயசாயல்" "தமிழெனு மினிய தீஞ் சொற்றையல்" எனப் புலவர்கள் தமிழ் என்னுஞ் சொல்லை * இனிமை என்னும் பொருளில் ஆண்டிருக்கின்றனர்.

" இனிமையு நீர்மையுந் தமிழெனலாகும் "

என்னும் பிங்கலச் சூத்திரமும் தமிழுக்கு இனிமை யென்பது பொருளெனக் கூறுகின்றது. தமிழ் என்னும் சொல் பிறமொழி வழியாக வந்ததென சில சரித்திராசிரியர்கள் கூறி யிருக்கின்றனர். தொல்காப்பியம் முதலிய பழைய செந்தமிழ் நூல்களில் தமிழ் என்னுஞ் சொல் காணப்படுகின்றமையின் அன்னோர் உரைகள் ஏற்றுக்கொள்ளற்பாலனவல்ல. தமிழர் தமது மொழிக் குரிய பெயரைத் தம் மொழியால் வழங்காது பிற மொழிச் சொல்லால் வழங்கினார்கள் என்பது பொதறிவுக்கு ஏற்றதன்று.

தமிழும் சமஸ்கிருதமும் சகோதர மொழிகளென்றும் அவற்றைச் சிவபெருமான் முறையே அகத்தியருக்கும் பாணினிக்கும் அருளிச் செய்தனர் என்றும் காஞ்சிபுராணம் திருவிளையாடற் புராணம் முதலிய நூல்கள் கூறுகின்றன.

---

* தமிழ்னெழுகு நறுஞ்சுவையே (மீ. பி. தமிழ்)

"வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளியதற் கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்
குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகரெனிற்[ றும்
கடல்வரைப் பினிதன் பெருமை யாவரே கணித்தறிவார்"

என்பது காஞ்சிபுராணச் செய்யுள். முற்காலத்தில் வடமொழியைப் பாணினிக்கு அருளிச் செய்ததுபோல (பிற்காலத்தில்) சிவபெருமான் தமிழ் மொழியை அகத்திய முனிவருக்கு அருளிச் செய்தாரென இச்செய்யுள் கூறுகின்றது. பாணினி முனிவர் கி. மு. 4-ம் நூற்றாண்டில் விளங்கியவர். அகத்தியர் இராமாயண காலத்திலும் அதற்கு முன்னும் இருந்தவர். ஆகவே சிவபெருமான் பாணினிக்கு முன் வடமொழியை அருளிப் பின் அகத்தியருக்குத் தமிழை அறிவுறுத்தாரென்பது அசம்பாவிதமாம்.

"விடையுகைத்தவன் பாணினிக் கிலக்கண மேனாள்
வடமொழிக்குரைத் தாங்கியன் மலையமா முனிக்குத்
திடமுறுத்திய மொழிக்கெதி ராக்கிய தென்சொல்
மடம்கட்கரங் கென்பது வழுதிநாடன்றே"

என்பது திருவிளையாடற் புராணம்.

காஞ்சிபுராணம் திருவிளையாடற்புராணம் என்னும் இரு நூல்கள் செய்த ஆசிரியருள் திருவிளையாடற்புராணம் இயற்றியவரே முன் விளங்கியவர். ஆகவே காஞ்சிபுராணப் பாட்டு திருவிளையாடற் புராணத்தின் எதிரொலியாகவே காணப்படுகின்றது.

"ஆதியிற் றமிழ்நூலகத்தியற் குணர்த்திய மாதொரு பாகன்" எனச் சேனாவரையர் கூறியிருக்கின்றனர். இவர் காலம் கி. பி. 12-ம் நூற்றாண்டு வரையில் என்று கருதப்படு

கின்றது. சேனுவரையர் சிவபெருமான் பாணினிக்கு இலக்கண முபதேசித்ததைக் குறித்துக் கூறவில்லை.

பன்னிரு படலப் பாயிரமாக தொல்காப்பிய உரையிற் காட்டப்பட்ட பாடலிலாவது புறப்பொருள் வெண்பாப் பாயிரத்திலாவது சிவபெருமான் அகத்தியர்க்குத் தமிழ் உரைத்த வரலாறு சொல்லப்படவில்லை. கி. பி. ஏழு அல்லது எட்டாம் நூற்றாண்டிற்றான் இவ்வகையான கதைகள் தோன்றியிருக்க வேண்டுமென M. சீனிவாச ஐயங்கார் M. A. அவர்கள் கருதுகின்றனர்.

தமிழ்ப் பிரயோக விவேக நூலாசிரியர் 'மயேச்சுரன் பாணினிக்காசிரியன்' என அந்நூலின் முதற் சூத்திர உரையில் எழுதியிருக்கின்றனர். மயேச்சுரன் என்னும் ஆசிரியனைக் கடவுளாகக்கொண்டு பிற்காலத்தார் சிவபெருமான் வடமொழியைப் பாணினிக்கு அருளிச்செய்தார் எனக் கூறினர் போலும். தமிழிலே உள்ள இறையனாரகப்பொருள் கடவுளால் அருளப்பட்டதென வழங்குகின்றது. அறிஞர்கள் அந்நூல் சங்க காலத்திருந்த இறையனார் என்னும் புலவரால் செய்யப்பட்டதெனக் கருதுகின்றனர். "இறையனார் அகப்பொருள் என்னும் நூலை இயற்றியவர் சிவபெருமான் கூறுகிய இறையனார் என்னும் புலவர் பெருமான்" என மஹாமஹோபாத்தியாய உ. வே. சுவாமிநாதையரவர்கள் கூறுகின்றனர். முருகக் கடவுள் தமிழ் மொழியை அகத்திய முனிவருக்கு அறிவுறுத்தியதாக அருணந்தி சிவாசாரியர் அருணகிரிநாதர் சிவஞான முனிவர் முதலியோர் கூறியிருக்கின்றனர்.

பதினோராம் நூற்றாண்டு வரையில் இயற்றப்பட்ட வீர சோழியத்தின் பாயிரத்தில்,

ஆயுங்குணத் தவயோகி தன் பக்கல் அகத்தியன் கேட்
டேயும் புவனிக் கியம்பிய தண்டமி ழீங்குரைக்க
நீயுமுளையோ வெனிற் கருடன் சென்ற நீள் விசும்பி
லீயும் பறக்குமிதற் கென்கொலோ சொல்லு மேந்திழையே

எனக் கூறப்பட்டிருக்கின்றது.

திராவிடம்

திராவிடமென்பது தமிழுக்குப் பிறிதொரு பெயராக வழங்குகின்றது. தமிழ் ழகரத்தை உச்சரிக்க வறியாத ஆரியர் தமிழ் என்னுஞ் சொல்லை திராவிடம் என வழங்கினர். நகைச் சுவைக்குப் பொருளாவன ஆரியர் கூறுந் தமிழுங் குருடரும் முடவருஞ் செல்லுஞ் செலவும்.......போல்வன என்னும் பேராசிரியர் உரை ஆரியர் திருத்தமுறத் தமிழ் பேச அறியார் எனப் புலப்படுத்துகின்றது.

" Sanskrit Pandits however think Dravida as a corruption or sanscritised form of Tamil (Tamil studies P. 6 )"

" திராவிடமென்பது தமிழ் என்பதின் திரிபு. அல்லது சமஸ்கிருத ரூபமாக்கப்பட்ட சொல் எனச் சமஸ்கிருத பண் டிதர்கள கருதுகின்றனர். என 'தமிழ்' ஆராய்ச்சி என்னும் நூலார் கூறுவர். " திசைச் சொல் பன்னுறென்பது வேறு மொழியில் ழகரம் இன்மையின் தமிழென்னும் பெயரைச் சொல்ல இயலாமைபற்றி திராவிடம் முதலிய பெயர்களால் தமிழைக் குறிப்பது இதுபற்றிப் போலும் " (தமிழ் விடு தூது மஹோ மஹோ உபாத்தியாய உ. வே. சாமிநாதையர் குறிப்பு.)

தென்னுடு திருக்கோயில்களும் செல்வமும் மலிந்தவிட மாதலின் அது திருவிடமென்னும் பெயரைப் பெற்றதென்

றும் பின் திருவிடம் திராவிடமாயிற்றென்றும் கூறுவர். 'தமிழ் இந்தியா' என்னும் நூலாசிரியர் திருவாளர் பூர்ணலிங்கம் பிள்ளை அவர்கள்.

## தென்மொழி.

இந்தியாவின் வடபாகத்தில் சமஸ்கிருதமும் தென்பாகத்தில் தமிழும் வழங்கின. வடக்கே வழங்கிய மொழி வடமொழி எனப்படவே தெற்கே வழங்கிய மொழிக்குத் தென்மொழி என்னும் பெயர் உண்டாயிற்று.

அழகும் இனிமையும் உடைய மொழியாதலின் தமிழ் தென்மொழி என்னும் பெயர் பெற்றது என்பர் திராவிடப் பிரகாசிகைகாரர்.

## 2. தமிழின் வழிமொழிகள்.

### தெலுங்கு.

கண்ணுவர் என்ற முனிவர் இம்மொழிக்கு முதல் இலக்கண நூலாசிரியரென்று சொல்லப்படுவதுண்டு. இவரைப் பற்றி ஒன்றும் தெளிவாய் அறியக்கூடவில்லை. அவர் இலக்கணமும் மறைந்துபோயிற்று. இக்காலங்களில் வழங்கிவரும் தெலுங்கு இலக்கணங்களில் முந்தியது நன்னயப்பட்டரது. அவர் காலம் கி. பி. 12-வது நூற்றாண்டு. தெலுங்குப் பாரதமும் இவரையே நூலாசிரியராகக் கொண்டிருக்கின்றது. பதினான்காவது நூற்றாண்டிக்குப் பிற்பட்டுத்தான் இம்மொழியில் நூல்கள் பல்கின. ஏறக்குறைய இரு நூறாண்டுகளுக்கு முன்னிருந்த வேமன்ன என்ற கவி அநேக நீதி நூல்கள் செய்திருக்கின்றார். தென்னாலிராமன் கதையும் இம்மொழியினின்றே மொழி பெயர்க்கப்பட்டது.

"ஆந்திரருடைய சந்ததிகள் வட நாடுகளை விட்டுத் தக்கண தேசத்தில் முதல் முதல் குடியேறிய இடத்திற்குத் திரிலிங்கமென்று பெயர். திரிலிங்கமென்றால் ஸ்ரீ சைல பருவதம் (2) காளேசுவரம் (3) பீமேசுவரம் என்னும் மூன்றிடங்களில் சிவபெருமான் மல்லிகார்ச்சுனன், காலநாதன், பீமேசுவரன் என்ற முப்பெயர்களால் மூன்று லிங்கங்களாக வமைந்து, அம்மூவிடங்களுக்கும் 'திரிலிங்கானம்' என்று பிரபலமான பெயர் பெற்றுப் பிரகாசிக்கிறபடியால், அப்படிப் பிரகாசிக்கும் மூன்று நாட்டெல்லைகளுக்குள் வந்து குடியேறிய ஆந்திரர்களுக்கு திரிலிங்கர் என்ற பெயரிட்டு அழைக்கப்பட்டு வர, அந்தத் திரிலிங்கர் என்னும் வார்த்தையானது, காளாவட்டத்தில் தெலுங்கரென்று மருவியதனுல் அந்தத் தெலுங்கர் வழங்கிவந்த பாஷைக்கும் தெலுகு அல்லது தெனுகு அல்லது தெலுங்கு என்று பிரசித்தியாகிவிட்டது" (தக்கண இந்தியா சரித்திரம் பக். 96)

தெலுங்கு என்பது தெற்கு என்னும் சொல்லிலிருந்து தென்கு என்று வந்து பின் தெனுகு தெலுங்கு எனத் திரிந்ததெனவும் திரிலிங்கமென்பது தெலுங்கு என்பதன் திரிபு என்றும் திரிலிங்க மென்பதிலிருந்து தெலுங்கு என்னுஞ் சொல் வந்த தெனக் கூறுதல் பிழையெனவும் 'இந்து'ப் பத்திரிகையில் ஒருவர் எழுதியுள்ளார்.

"Telugu is one of the great Dravidian languages. The word is probably derived from Trilinga (the threelingas of siva) a name for the old kingdom of Andhra. It was at one time called by Europeans 'Gentoo' from a portuguese word meaning gentle. The Telugu speaking

people are partly subjects of Nizam of Hyderabad and partly under British rule beginning North of Madras city, extending N. W to Bellary where Telugu meets Kanarese and N. E to near Orissa. They are taller and fairer than Tamils, otherwise they are of typical Dravidian features. They are of an enterprising people good farmers and skilful seamen. ......... In 1901 the number of speakers in Telugu in India was nearly 21 millions."

(Encyclopaedea Britannica)

## மலையாளம்.

மலையாளம் சில நூற்றாண்டுகளுக்கு முன் தோன்றிய ஒரு மொழி. அம்மொழிக்கு எழுத்துக் கற்பித்தவர் ஏறக்குறைய முன்னூற்றி யாண்டுகளுக்கு முன்னிருந்த எழுத்தச்சனென்பார். அவர் வமிசத்தினர் இன்னும் அப்பெயரால் அழைக்கப்படுகின்றனர். இம்மொழியிலுள்ள விசேட காவியங்களும் பாடல்களும் இராமாயண பாரத பாகவத கதைகளைப் பற்றியவை. புராண காவியங்களை மிகுதியாகச் செய்தவர் துஞ்சத்த எழுத்தச்சன். கிளிப்பாட்டென்றும் துள்ளல் என்னும் ஒரு வகைப் பாட்டுகள் இம்மொழியில் வழங்குகின்றன.

இவைகளெல்லாம் புராணக் கதைகள் சம்பந்தமானவை. கிளிப் பாட்டென்பது சாதாரணமாய் யாவரும் பாடவும், துள்ளல் என்பது சில சமயங்களில் குதித்துப் பாடவும் ஏறபட்டவை. இப் பாட்டுகளை விசேடமாகச் செய்தவர் குஞ்சநம்பியார். சென்ற நூற்றூண்டின் கடைசியில் வாழ்ந்த அநந்த

சயனம் ராமவர்மா மகாராசாவினால் சில நாடகங்கள் இயற்றப்பட்டிருக்கின்றன. இம்மொழியில் மணிப்பிரவாள சுலோகம் அதிகம்.

Malayalam, a language of Dravidian family spoken on the west coast of southern India. It is believed to have developed out of Tamil as recently as the 9th century. It possesses a large literature in which words borrowed from Sanskrit are conspcuous. In 1901 the total number of speakers of Malayalam in all India was just about six millions. (Encyclopaedea Britannica)

கொடுந் தமிழும் பிராகிருத சமஸ்கிருதமும் கலந்து கி. பி. 13-ம் நூற்றாண்டின் முற்பகுதியில் மலையாளம் என்னும் பெயர் பெற்றது என்பர். 'தமிழ் ஆராய்ச்சி' (Tamil studies) என்னும் நூலாசிரியர் M. சீனிவாச ஐயங்கார் அவர்கள்.

கன்னடம்.

முதன் முதல் இம்மொழியில் நூல்கள் எழுதத் தொடங்கியவர்கள் சமணர்கள் (Jains) இவர்கள் சோழபால சரித்திரம் முதலிய சரித்திரங்களையும், பிரபோத சந்திரோதயம் முதலிய தத்துவ நூல்களையும், ஜினமுனி தயை முதலிய சமணக் கொள்கைகளை விளக்கும் சில நூல்களையும் எழுதியிருக்கிறார்கள். சப்தமணிதர்ப்பணம் என்ற இம்மொழியின் பிரதான இலக்கண நூல் இவர்களில் ஒருவரான கேசிராசராலியற்றப்பட்டது. பிறகு வீர சைவமதத்தோரால் வசவ புராணம் பிரபுலிங்கலீலை இராசசேகர விலாசம் முதலிய பல காவியங்களும் சரித்திரங்களும் இம்மொழியில் எழுதப்பட்டன.

இவற்றுள் இராசசேகர விலாசம் என்பது இராசசேகரன் என்ற சோழன் சரித்திரம். இஃது இம்மொழியின் கவி சிரேட்டரான ஷடாக்ஷரி தேவராலியற்றப்பட்ட பல சைவ வைணவ கிரந்தங்களும் இம்மொழியில் உண்டு.

"கன்னடமும் தெலுங்கை யொட்டிப் பெரிதும் இயங்கினமையான் அதுபோலவே பல்லாற்றானும் தன்னைச் சீர்ப்படுத்திக்கொண்டது. இதனாலன்றே 'பழங் கன்னடம்' என்றும் 'புதுக் கன்னடம்' என்றும் அஃது இருவேறு பிரிவினதாகி யியங்குகின்றது. பழங் கன்னடத்தைத் தமிழினின்றும் பிறந்ததெனக் கூறும் கன்னடப் புலவர் இன்றுமுளர்."

"Kanarese, a language of Dravidian family spoken by about ten millions of people in South India chiefly in Mysore, Hyderabad and the adjoining districts of Madras and Bombay. It has an ancient literature written in an alphabet closely resembling that employed for Telugu. Since the 12th century the Kanarese speaking people have largely adopted the Lingayat form of faith which may be described as an anti Brahmanical sect of siva worshippers; most of them are agriculturists but they also engage actively in trade. (Encyclopaedea Britannica).

"Telugu does not take its avalable literature much anterior to the eleventh century A. D., and this literature seems to be modelled upon Sanskrit entirely. Kanarese has certainly a more ancient literature a work of the 9th cen-

tury undoubtedly is the Kaviraja marga of Nirpatungu...Malayalam seems to have grown out of Tamil in the early centuries of the Christian era".

(Prof. S. Krishnaswami Ayangar)

துளு.

*இது தெற்குக் கன்னடத்தில் வழங்கும் மொழி. இம் மொழியிற் பழய இலக்கியங்கள் இருப்பதாகத் தெரியவில்லை. இம்மொழியை வழங்குவோர் ஐந்திலக்கம் மக்கள் வரையில்.*

"Tulu or Tuluva, a language of the Dravidian family, found chiefly in the south Kanara District of Madras. It has no literature, nor it has been adopted for official use even where it is spoken by the majority of the population. In 1901 the total number of speakers of Tulu exceed half a million".

(Encyclopaedia Britannica)

*பதினோராம் நூற்றாண்டுவரையில் இயற்றப்பட்ட திவாகரத்தில் துளுவம் பதினெண்பாடையின் ஒன்றாகக் கூறப்படுகின்றது. ஆகவே துளு பதினோராம் நூற்றாண்டுக்கு முற்பட்ட மொழியாதல் வேண்டும்.*

மணிப்பிரவாளம்.

*இது சமஸ்கிருதமும் தமிழும் சரிக்குச்சரி கலந்த நடை.*

*உதாரணம்:—"பும்ஸ்பர்சக்லேச ஸம்பாவனா கந்த விதுரமாய் ப்ரத்யக்ஷாதிப்ரமாண விலக்ஷணமா யிருந்துள்ள நிகில வேதஜாதத்துக்கும் வேதோப ப்ரம்மணங்களான ஸ்ம்ருதீதி*

ஹாஸ புராணங்களுக்கும் க்ருத்யம் ஸகல ஸம்சாரி சேதனர்க்கு தத்வஞானத்தை ஜனிப்பிக்கை. (தத்துவசேகரம்.)

3. தமிழ் நாட்டின் எல்லை.

முற்காலத்துத் தமிழ் நாட்டின் வடக்குத் தெற்கு எல்லைகள் வேங்கடமலையும் குமரியாறுகவும் கிழக்கும் மேற்கும் கடலாகவும் இருந்தன.

"வடவேங்கடந் தென்குமரியாயிடைத்
தமிழ்கூறு நல்லுலகத்து" எனப் பனம்பாரனாரும்

"வேங்கடங் குமரி தீம்புனற் பௌவமென்
றின்னான் கெல்லை தமிழது வழக்கே" எனச் சிகண்டியாரும்,

"குமரி வேங்கடங் குணகுட கடலா
மண்டிணி மருங்கிற் றண்டமிழ் வரைப்பில்"

என இளங்கோவடிகளும் தமிழ்நாட்டின் பழைய வெல்லையைக் குறிப்பிட்டிருக்கிறனர்.

"பண்டைக் காலத்தில் தமிழ்நாட்டின் வடவெல்லை கிஷ்ணநதியென்று சிற்பசாஸ்திரம் கூறுகிறதென்று கேட்டிருக்கின்றேன்" என மஹா மஹோ உபாத்தியாய உ. வெ. சாமிநாதையரவர்கள் சங்கத்தமிழும் பிற்காலத்தமிழும் என்னும் நூலிற் கூறி யிருக்கின்றனர். ஒருபோது விந்தியமலை தமிழ்நாட்டின் வடவெல்லையாயிருந்ததெனத் தெரிகிறது.

"தொல்காப்பியஞ் செய்யப்படுகிறகாலத்தில் நெல்லூர் ஜில்லாவின் தென்கோடியும், சித்தூர், வடஆற்காடு, செங்கற்பட்டு, தென்ஆற்காடு, தஞ்சாவூர், மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி, சேலம், கோயமுத்தூர், திரிசிராப்பள்ளி, மலை

யாளம், நீலகிரியென்னும் ஜில்லாக்களும், தென்கன்னடம் ஜில்லாவின் முக்காற்பங்கும், மைசூர் இராச்சியத்தின் தென் பாதியும், திருவாங்கூர், கொச்சி, புதுக்கோட்டை என்னும் இராச்சியங்களும், கடலின் வாய்ப்பட்ட குமரியாற்றோடு கூடிய பனை நாடுகளும், தமிழ் வழங்கு நிலங்களாகவே இருந்தன என்பதும், அக்காலத்து இந்நிலங்களில் வேறு மொழிகள் வழங்கியதில்லையென்பதும் நன்கு விளங்குகின்றன" (சங்கநூல் கா. ர. கோவிந்தராஜ முதலியார்)

"வடதிசை மருங்கின் வடுகுவரம் பாகத்
தென்றிசை யுள்ளிட் டெஞ்சிய மூன்றும்
வரைமருள் புணரி"

எனச் சிறு காக்கை பாடினியார் தமிழ்நாட்டுக்கெல்லை கூறியிருக்கின்றனர். இது, தெற்குக் குமரியன்றிக் கடலெல்லையாகிய காலத்துச், சொல்லப்பட்டதெனப் பேராசிரியர் கூறுகின்றனர். சிறு காக்கை பாடினியாரை ஒழிந்து பனம்பாரனார் சிகண்டியார் இளங்கோவடிகள் நன்னூலார் முதலாயினோரெல்லாம் வேங்கடத்தையும் குமரியையுமே வடக்குக்கும் தெற்குக்கும் எல்லையாகக் கூறியிருக்கின்றனர். நன்னூலார் காலத்தில் குமரிஆறு இருக்கவில்லை. சிலப்பதிகாரத்தில், குமரியம் பெருந்துறை (15-15) என்பதற்கு அடியார்க்கு நல்லார் குமரி ஆறு எனப் பொருள் கூறுமாற்றானும் மணிமேகலையில் "குமரியம் பெருந்துறை" (5-37) "தென்றிசைக் குமரி" (13-7) என வருவனவற்றிற்கு மஹா மஹோ உபாத்தியாய உ. வே. சாமிநாதையரவர்கள் குமரியாறு எனக் கூறிய உரையானும், அடியார்க்கு நல்லார் காலத்திற் குமரியாறு கடல் வாய்ப்படவில்லை எனக் கொள்ளவேண்டியிருக்கின்றது. அக்காலத்துக் குமரியாற்றைக் கடல்கொள்ளவில்லையாயின்

" பஃறுளியாற்றுடன் பன்மலை யடுக்கத்துக் குமரிக்கோடும்
கொடுங்கடல் கொள்ள "

எனக் கூறப்பட்டதிலுள்ள குமரிக்கோடு என்பது மலையே யாயிருத்தல் வேண்டும்.

" நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்
தமிழ்வரம் பறுத்த தண்புனல் நாடு "

என்னும் சிலப்பதிகார அடிகளால் குமரியாறு கடல் கொள் ளப்பட்டதென விளங்குகிறது. ஆகவே குமரித் தீர்த்தமென் பது குமரி முனைக்கு அணித்திலுள்ள கடற்தீர்த்தமாயிருத்தல் வேண்டும். ஆகவே பழைய நூல்களில் கூறப்படும் குமரி கடல் அல்லது முனை எனப் பகுத்துணரக் கூடாவகை யிருக்கின்றது.

செந்தமிழ் கொடுந்தமிழ்

" செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்
தங்குறிப் பினவே திசைச் சொற்கிளவி"

என்னும் தொல்காப்பியச் சூத்திரத்துக்கு உரை ஆசிரியர்கள் செந்தமிழ்நாடு ஒன்று அதனைச் சூழ்ந்த கொடுந் தமிழ் நாடு பன்னிரண்டெனா உரை கூறினர். அப்பன்னிரண்டு கொடுந் தமிழ் நிலங்களாவன.

" தென்பாண்டி குட்டங் குடங் கற்கா வெண்பூழி
பன்றியருவா வதன் வடக்கு நன்றாய
சீதமலாடு புனனாடு செந்தமிழ்சேர்
ஏதமில் பன்னிரு நாட்டெண்"

(யாப்பருங்கலம் பழைய உரைமேற் ; நன், மயிலை 275 மேற்)

நச்சினார்க்கினியர் சேனாவரையர் இளம்பூரணவடிகள் முதலி யோர் இவ்வெண்பாவிலுள்ள புனல்நாடு, வேணாடு, என்பவற் றுக்குப் பதில் பொதுங்கர் நாடு ஒளிநாடு என்பவற்றைக் கூறி யிருக்கின்றனர்.

தொல்காப்பிய உரையாசிரியர்களும் யாப்பருங்கல உரையாசிரியர் குணசாகரரும் செந்தமிழ் நாட்டின் எல்லையை "செந்தமிழ் நிலமாவது வையையாற்றின் வடக்கும் மருதயாற்றின் தெற்கும் கருவூரின் கிழக்கும் மருவூரின் மேற்கு" * மாமெனக் கூறுவர்.

"முன்னூறுந்தென் பாண்டி முதற்புனனாடீறுன
பன்னிரண்டு நாடுமப் பானுடோ—அந்நாட்டுள்
வையை கருவைமரு தாறுமரு வூர்நடுவே
ஐயநீவாழு மரண்மனையோ" (தமிழ் விடு தூது)
செந்தமிழ் நாடு சோணுடென்பதற்கு,

† "மன்றவாணன் மலர்திரு வருளாற்
றென்றமிழ் மகிமை சிவணிய செய்த

* "செந்தமிழ் நிலமாவது...மருவூரின்மேற்குமாகிய சோணுடென்று காரிகை உரையில் மாத்திரம் காணப்படுகின்றது.

† இப்பாடல் யாப்பருங் கலஉரை பதிப்பித்தவரால் பாடுவித்துச் சேர்க்கப்பட்டதெனச் 'சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும்' என்னும் நூலிற் கூறப்படுகின்றது. காரிகை உரை முதற்பதிப்பில் "அமுதசாகரரென்னும் ஆசிரியராற் செய்யப்பட்ட யாப்பருங் கலக்காரிகை மூலமும் அதற்கு குணசாகரராற் செய்யப்பட்ட உரையும் திருவாவடு துறையாதீன வித்வான் தாண்டவராய சுவாமிகள், இயற்றமிழாசிரியராகிய திருத்தணிகை விசாகப்பெருமாளையரவர்கள், அஷ்டாவதான வீராசாமிச் செட்டியாரவர்கள் இவர்கள் முன்னிலையில் தில்லையம்பூர்ச் சந்திரசேகர கவிராஜ பண்டிதரால் பிழையறப் பரிசோதிக்கப்பட்டு முத்தமிழ் விளக்க அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டன" என்று காணப்படுகின்றது. பின் 1908-ம் ஆண்டில் அம் மூலமும் உரையும் தமிழ்ப்பண்டிதர் கா. ர. கோவிந்தராஜ முதலியாரால் பரிசோதிக்கப்பெற்று வெளிவந்தது. இவ்விரு பதிப்புகளிலும் 'மன்றவாணன் மலர் திருவருளால்' என்னும் பாட்டுக் காணப்படுகின்றது.

அடியவர் கூட்டமு மாதிச் சங்கமும்
படியின்மைப் பெருமை பரவுறு சோழனுஞ்
சைவ மாதவருந் தழைத்தினி திருக்கு
மையறு சோழ வளநாடென்ப"

என்னும் சூத்திரம் மேற்கோளாகக் காரிகை உரையிற் காட்டப்படுகின்றது. நன்னூல் விருத்தி உரை காரர்.

"சந்தனப் பொதியச் செந்தமிழ் முனியுஞ்
சௌந்தர பாண்டிய னென்னுந் தமிழ்நாடனுஞ்
சங்கப் புலவருந் தழைத்தினி தோங்கு
மங்கலப் பாண்டி வளநாடென்ப"

என்று பாண்டி நாட்டையே செந்தமிழ் நாடெனக் கூறுவர்.

பாண்டி நாடே சேர சோழ நாடுகளிலும் செந்தமிழ் ஆராய்ச்சிக்குரிய தெனக் கூறுவர் திராவிடப் பிரகாசிகைகாரர். சமயாசாரியர்களும் தமிழ்ப் புலவர்களும் பாண்டி நாட்டையே செந்தமிழ் நாடெனக் கூறுவர்.

"சென்னிநாடு குடகொங்கநாடு திறைகொண்டு தென்னனுறை
செந்தமிழ்க்—கன்னிநாடு உறவுடன் புகுந்து"

எனக் கூறுவர் வில்லிபுத்தூரர்.

தொல்காப்பியர் காலத்து செந்தமிழ் கொடுந்தமிழ் என்னும் வழக்கு இருந்ததற்குப் பிரமாணமில்லை "செந்தமிழ் கொடுந் தமிழென்றிரு பகுதியில்" எனனும் சிலப்பதிகாரத்தால்அக்காலத்து "செந்தமிழ் கொடுந்தமிழ்" என்னும் வழக்கு இருந்ததாகத் தெரிகின்றது.

"தாயைத் தள்ளை என்ப குட்டநாட்டார் நாயை ஞமலி யென்ப பூழிநாட்டார்" எனத் தொல்காப்பிய உரையிற் காட்டப்பட்ட உதாரணங்களால் தமிழகத்தின் பல பாகங்களில் அவ்வவந்நாடுகளில் மாத்திரம் வழங்கும் சில சொற்கள் திசைச்

சொற்கள் எனப்படும் எனத் தெரிகின்றது. குளிர், கரைதல், நுன், ஒள்ளியன், இதா, சிக்க, நீம் முதலிய சொற்களைத் திசைச் சொற்களெனக் காட்டுவர் நச்சினார்க்கினியர். ஆங்கில மொழியில் (Provincialism) எனப்படுவதே இத்திசைச் சொல்லுக்கு உதாரணமாகும். "This does not mean that the dialect of the Pandya country is superior to the dialect of the other twelve districts as it is usually understood to mean, for one dialect is just as good or as bad as another, but that the literary dialect was first fashioned in the Pandya country and when this dialect was adopted for poetry in other tracts they allowed local words to find a place there in"

(History of the Tamils P. 151)

தமிழ் நாட்டைச் சூழ்ந்து பதினேழு பிறநாடுகளும் உண்டு என முன்னோர் கூறியிருக்கின்றனர். இதை ;

* "சிங்களஞ் சோனகஞ் சாவகஞ் சீனந்துளுக்குடகங்
கொங்கணங் கன்னடங் கொல்லந் தெலுங்கங்கலிங்கம்
கங்கமகதங் கடாரங் கவுடங் கடுங்குசலந் [வங்கம்
தங்கும் புகழ்த்தமிழ்சூழ் பதினேழ் புவிதாமிவையே."

என்னும் செய்யுள் அறிவிக்கின்றது. அரேபியா வங்காளம் பர்மா சீனா யாவா ஒரிசா முதலிய நாடுகளைத் தமிழ்நாட்டைச்

---

* "அங்கம் வங்கம் கலிங்கங் கௌசிகம் சிந்து சோனகம் திராவிடஞ் சிங்களம்—மகதங் கோசலம் மராடங் கொங்கணம் துளுவஞ் சாவகம் சீனங்காம் போசஜம் பருணம்பப் பரமென பதினெண் பாடை" எனப் பதினெண் பாடைகளின் பெயர்கள் திவாகரத்திற் காணப்படுகின்றன. பிற நிகண்டுகள் வேறுபடவும் கூறுகின்றன.

சூழ்ந்த நாடுகளாகக் கூறுவது பொருத்தமாகக் காணப்பட வில்லை.

சோழவந்தான் வித்துவான் அரசன் சண்முகனாரவர்கள் கொடுந்தமிழ் என ஒன்று தொல்காப்பியர் காலத்தில் இல்லை யெனவும், 'செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலம்' என்றது செந் தமிழ் வழங்கிய பன்னிரண்டு நிலமெனவுங் கூறுவர். அது வருமாறு :—

"செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்துந்
தங்குறிப் பினவே திசைச் சொற்கிளவி."

என்றாராகலிற், கொடுந்தமிழ் நிலம் பன்னிரண்டுளவெனவு மந்தமிழே திசைச் சொல்லாமெனவும் பெறப்படலானே தமி ழிருவகையெனவு, மவை யிரண்டிற்கும் பொதுவெல்லை வேங்கடங் குமரியெனவுஞ், செந்தமி ழெல்லை வேறு கூறலு மையுமெனி, னாசிரியர் பன்னிரு நிலமென்றதன்றிப் பன்னிரு கொடுந்தமிழ் நிலமெனக் கூறாமையானும் பிறாண்டுங் கொடுந் தமிழ் எனல் காணப்படாமையானும், செந்தமிழ்சேர்ந்த பன் னிருநில 'மென்றமையானது செந்தமிழ் வழங்கிய பன்னிரு தமிழ் நாடெனப் பொருள்படுமன்றிச் செந்தமிழ் நிலத்தைச் சேர்ந்த பன்னிரண்டு கொடுந்தமிழ் நிலமெனப் பொருள் படா மையானுடஞ், செந்தமிழினின்றுஞ் சிதைந்து வழங்கு மொழி யே கொடுந்தமிழெனி, னஃதிழிந்தோர் வழக்காகலிற் கொள் ளப்படாமையானு மத்தமிழினின்றும் பிறந்த பிறிதொரு மொழியெனினது, துளுக்கன்னடந் தெலுங்கு மலையாளம் என்றாற்போல வேறு பெயர் பெறலன்றிக் கொடுந்தமிழெனல் கூடாமையானு, மாண்டுச் செந்தமிழ் நிலமென்றது செந்தமி ழியற்கையுந் திரிபுஞ் சேர்ந்த பன்னிரு நாடாகலானு மவ் வுரை பொருந்தாதென்ப"

பண்டு இந்தியநாடு முழுமையும் ஐம்பத்தாறு நாடுகளாகப் பகுக்கப்பட்டிருந்ததெனவும் அங்கு பதினெண் மொழிகள் வழங்கினவெனவும் முன்னோர் கூறியிருக்கின்றனர். தேசமைம் பத்தாறிற் றிசைச்சொற்பதினேழும் (தமிழ் விடுதூது).

## பாண்டிநாடு.

இது காவிரிக்குத் தெற்கே மதுரை இராமநாதபுரம் திருநெல்வேலி இந்த மூன்று பற்றுகளும் (ஜில்லாக்கள்) அடங்கிய தேசம் இது வெள்ளாற்றுக்குத் தெற்குகன்னியா குமரிக்கு வடக்கு பெருவழிக்குக் கிழக்கு கடற்கரைக்கு மேற்கிலுள்ள நாடு என்று சொல்லப்படுகின்றது.

" வெள்ளாறது வடக்கா மேற்குப் பெருவழியாந்
தெள்ளாற் புனற்கன்னி தெற்காகும் உள்ளார
ஆண்டகடல் கிழக்காமைம் பத்தறு காதம்
பாண்டி நாட்டெல்லைப் பதி"

இதன் தலைநகரம் மதுரை. தாம்பிரபர்ணி (பொருனை) யின் முகத்துவாரத்தில் துறைமுகப் பட்டினமாகிய கொற்கைநகரம் சில காலம் இதன் பிரதான பட்டினமாயிருந்தது.

## சோழநாடு.

சோழநாடு காவிரிக்கரையிலுள்ளது. அதன் தலைநகரம் திருச்சிராப்பள்ளிச் சில்லாவிலுள்ள உறையூர். காவிரியாறு கடலோடு சந்திக்குமிடத்திலுள்ள காவிரிப்பூம் பட்டினம் அதன் துறைமுகமாக விருந்தது. கடலிலிருந்து பல கப்பல்கள் காவிரியில் வந்து தங்கினதாகத் தெரிந்ததால் கடலோடு கலக்குமிடத்தில் அக்காலத்தில் அந்நதி மிகவும் அகலமாயிருந்திருத்தல் வேண்டும். அதன் பழைய எல்லைகள்வடக்குத் திருப்பதி தெற்கு வெள்ளாறு கிழக்குக் கடல் மேற்கெல்லை காலத்துக் காலம் மாறியதுண்டு. பெரும்படியாக பழனிக்கும்

காரூருக்கும் நேராகவும் மேல் வடக்கே மைசூர் பீடபூமியின் கிழக்குப் பாதியை வெட்டும்படியாகவும் ஒரு கோடு இழுத்தால் அதன் மேற்கெல்லையாகும்.

"கடல்கிழக்குத் தெற்குக்கரை பொரு வெள்ளாறு
குடதிசையிற் கோட்டைக் கரையாம்—வடதிசையில்
ஏணாட்டுப் பண்ணை யிருப்பது நாற்காதஞ்
சோணாட்டுக் கெல்லையெனச் சொல்"

கோட்டைக் கரைக்குக் கிழக்கு கடற்கரைக்கு மேற்கு வெள்ளாற்றிற்கு வடக்கு ஆகிய எல்லைக்குட்பட இருபத்து நான்கு காதம் நிலப்பரப்புள்ள நாடு சோணாடென இப்பாடலறிவிக்கின்றது.

சேர நாடு.

தற்காலத்துத் திருவனந்தபுரம் கொச்சி மலையாளம் கோயமுத்தூர் என்று வழங்கப்படும் ஊர்களும் சேலத்திலொரு பாகமுஞ் சேர்ந்து திரண்ட பகுதியே அக்காலத்துச் சேரநாடாகும். வடக்கிற் பழனி கிழக்கில் திருச்செங்கோடு, மேற்கில் கள்ளிக்கோட்டை, தெற்கிற் கடலாகிய எல்லைக்குட்பட்ட பூமியாகிய இந்நாட்டுக்கு இராசதானியாக விருந்தநகரம் வஞ்சியென்றும் திருவஞ்சைக்களமென்றுங் கூறுவர்.

"வடக்குத்திசை பழனிவான்கீழ் தென்காசி
குடக்குத்திசை கோழிக்கோடாம்—கடற்கரையின்
ஓரமே தெற்காகுமுள் ளெண்பதின் காதம்
சேரநாட் டெல்லையெனச் செப்பு"

பழனிக்குத் தெற்கு தென்காசிக்கு மேற்கு கோழிக்கோட்டிற்கு கிழக்கு கடற்கரைக்கு வடக்கு ஆகிய இந்த எல்லைகளுட்பட்ட எண்பது காதம் நிலப்பரப்பு சேரதேசமென்பது இப்பாட்டால் விளங்குகின்றது.

தொண்டைநாடு.

"ஆ தொண்டைச் சோழன். இவர் தந்தையாகிய மணி கண்ட சோழன் அல்லது குலோத்துங்க சோழன் ஒரு நாள் வேட்டைக்கேகிய வனத்தில், ஒரு ரிஷி கன்னிகையாகிய நாக கன்னிகையை ஆ தொண்டைப் பூமாலை சாத்தி காந்தர்வ விவாகஞ் செய்து கொண்டதனால் பிறந்தவர். இவர் தந்தை தனது இராச்சியத்தின் தென்பாகத்தை மகரிஷியான குமாரனுக்குக் கொடுத்தும் வடபாகத்தை ஆ தொண்டருக்குக் கொடுத்தும் ஆளச் செய்தாராம் இவர் ஆண்ட பாகத்திற்கு தொண்டை மண்டலமென்று பெயராகியது. இவர் தமது நாட்டில் வேளாளரைக் குடியேற்றிச் சிறப்பித்த படியால் அவர்கள் தொண்டைமண்டல வேளாளர் என்னும் பெயர் பெற்றார்கள்" (தக்கண இந்தியா சரித்திரம்)

அத் தொண்டை மண்டலத்தின் எல்லையாவன.

"மேற்குப் பவளமலை வேங்கடநேர் வடக்கா
மார்க்கு முவரி யணிகிழக்கு—பார்க்குளுயர்
தெற்குப் பிணாகி திகழிருபதின் காத
நற்றொண்டை நாடெனவே நாட்டு."

இத்தொண்டை மண்டலத்திற்கு காஞ்சிபுரம் தலைநகரம். "நாகபட்டினத்துச் சோழன் பிலத்துவாரத்தால் நாக லோகத்தே சென்று நாககன்னிகையைப் புணர்ந்தகாலத்து அவள் யான் பெற்ற புதல்வனை என் செய்வே னென்ற பொழுது தொண்டையை (தொண்டை ஓர் கொடி) அடையாளமாகக் கட்டிக் கடலிலே விட அவன் வந்து கரையேறின் அவற்கு யான் அரசுரிமையை எய்துவித்து நாடாட்சி கொடுப்ப னென்று அவன் கூற அவளும் புதல்வனை வரவிடத் திரை தருதலின் திரையனென்று பெயர்பெற்ற கதை கூறினர் (நச்சினார்க்கினியருரை பெரும்பாணாற்றுப் படை.)

## சிற்றரசர் நாடுகள்.

சேரசோழ பாண்டியர்களை யன்றிக் குன்றுதோறுங் கோட்டைகளை வளைத்துக் கட்டி மூவேந்தருக்குக் கீழ்ப்பட்டும் படாதும் சிற்றரசு புரிந்த பல அரசர்களைக் குறித்துச் செய்திகள் பல புறநானூற்றிற் காணப்படுகின்றன. அவ்வரசர்க்குரிய நாடுகள் சிற்றரசர் நாடுகளாம்.

## பல்லவர் சாளுக்கியர்.

பல்லவர்கள் காஞ்சி நகரைத் தலைநகரமாகக்கொண்டு அறுநூறு ஆண்டுவரையில் ஆண்டிருக்கிறார்கள். இவர்கள் காலத்தில் அப்பர் சம்பந்தர் சிறுத்தொண்டர் முதலிய சைவ அடியார்கள் விளங்கினார்கள். தொண்டைமான் என்பதற்குச் சரியான சமஸ்கிருத மொழி பெயர்ப்பே பல்லவர் என சரித்திரகாரர் கூறுகின்றனர். பல்லவர்களை வென்று காஞ்சியைக் கைப்பற்றிச் சிலகாலம் சாளுக்கியர் அரசு செய்தார்கள்.

## 4. தமிழின் சிறப்பு.

"கண்ணுதற் பெருங்கடவுளுங் கழகமோடமர்ந்து
பண்ணுறத் தெரிந்தாய்ந்த விப்பசுந்தமிழ்ஏனை
மண்ணிடைச் சிலஇலக்கண வரம்பிலா மொழிபோல்
எண்ணிடைப் படக்கிடந்ததா எண்ணவும் படுமோ"

என்று ஆன்றோர் கூறியபொருள் சிற்சில மொழிகளை ஒப்பிட்டு நோக்குவார்க்கும் இனிது விளங்கும். பண்டைக்காலந் தொட்டு நூல் வழக்கினும் உலக வழக்கினும் திருத்தமடைந்து மக்களறிவின் முதிர்ச்சிக்குப் பெரிதும் உதவி செய்வனவாய்ப் போதரும் பழய மொழிகள் சிலவேயாம். இப்பழய மொழிகளுள் தமிழ் மொழியை ஒழித்து ஒழிந்தவற்றிற் பெரும்பாலன

உலகவழக்கின்றி இறந்தொழிந்தன. தீஞ்சுவை விளைக்கும் முப்பழத்தினும் மினிய மெல்லிய ஓசை இன்பம்வாய்ந்த செந்தமிழ் மொழிபோ எத்தனையோ ஆயிரம் ஆண்டுகள் கழிந்தும் தன்னிளமை கெடாதாய்க் கழிபெரு மகிழ்ச்சியோடு உலவி வருதலை உற்று நோக்குங்கால் அதனை வழங்கிவந்த நன்மக்கள் எவ்வளவு நுண்ணறிவும் எவ்வளவு அமைதியான தன்மையும் எவ்வளவு நாகரிகமும் உடையவர்களாய் இருந்திருக்க வேண்டுமென்பதை அறிகின்றோம். பழையநாட்களில் வேறு பல மொழிகளைப் பேசிவந்த மக்கள் நுண்ணறிவினும் அமைந்த குணத்திலும் நாகரிகச் சிறப்புற்றவர்களா யில்லாமையினால் அவர்கள் வழங்கிய மொழிகள் எல்லாம் ஆண்டுதோறும் மாறுதல்கள் பல எய்தி இலக்கண வரம்பில் அகப்படாவாய்ப் பயனின்றிக் கழிந்தன. தமிழைச்சூழ இஞ்ஞான்று நடைபெறும் பல மொழிகளை ஆராய்ந்து பார்ப்பவர்க்கும் அம்மொழிகள் ஓர் இலக்கண வரம்பில்லாமல் பலபடச் சிதறி ஒழுங்கின்றிக் கிடத்தல் தெள்ளிதிற் புலனாகும் "

" தமிழ் கிரேக்கமொழியினும் நயமான செய்யுள் நடையுடை லத்தின் மொழியினும் பூரணமானது" (வின்ஸ்லோ) [யது

" மனிதரால் பேசப்படுகின்ற மிகப் பொலிவும் திருத்தமும் சீருமுடைய மொழிகளுள் தமிழும் ஒன்று" (டேய்லர்)

## தமிழின் சிறப்பை உணர்த்தும் செய்யுட்கள

" பொருப்பிலே பிறந்து தென்னன்புகழிலே கிடந்துசங்கத்
திருப்பிலே யிருந்து வைகையேட்டிலே தவழ்ந்தபேதை
நெருப்பிலே நின்று கற்றோர்நினைவிலே நடந்தோரேன
மருப்பிலே பயின்ற பாவைமருங்கிலே வளருகின்றாள் "

(வில்லிபாரதம்)

" தடுக்கவின் பெறு கண்டனுந்தென்றிசை நோக்கி
அடுக்கவந்துவந் தாடுவா ருடவி னிளைப்பு
விடுக்கவாரமென் காறிரு முகத்திடை வீசி
மடுக்கவுந்தமிழ் திருச்செவி மாந்தவு மன்றோ"

"தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்தது முதலை
உண்டபாலனை யழைத்தது மெலும்பு பெண்ணுருவாக்
கண்டதும் மறைக்கதவினைத் திறந்ததுங் கன்னித்
தண்டமிழ்ச் சொல்லோ மறுபுலச்சொற்களோசாற்றீர்"

(திருவிளையாடற் புராணம்)

"தமரநீர்ப் புவன முழு தொருங்கீன்றுடையாத காதேவி யென்றொருபேர் தரிக்கவந்ததுவுந் தனிமுதலொருநீ சவுந்தர மாறனானதுவுங்—குமரவேள் வழுதியுக் கிரனெனப் பேர் கொண்டதுந் தண்டமிழ் மதுரங்—கூட்டுண வெழுந்த வேட்கையா லெனிலிக் கொழிதமிழ்ப் பெருமை யாரறிவார்.

(மதுரைக் கலம்பகம்)

"ஓங்க விடைவந்துயர்ந்தோர் தொழ விளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத்திருள் கடியு—மாங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது
தன்னே ரிலாத தமிழ்"

(தண்டி—உரை—மேற்கோள்)

"வேலையில் வீழ்த்தகல்லு மென்குடம் புகுத்தவெண்புஞ்
சாலையிற் கொளுவுந் தீயுந்தரங்கநீர் வைகையாறுஞ்
சோலையாண் பனையும்வேதக் கதவமுந் தொழும்புகொண்ட
வாலையாந் தமிழ்பூஞ் செல்வி."....................

(திருக்குற்றாலத் தலபுராணம்-திரிகூட ராசப்ப கவிராயர்)

## 5. எழுத்து

"எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு (குறள்)

எழுத்து, சுவடி முதலிய பழந்தமிழ்ச் சொற்கள் தமிழ் மொழிக்கு வரிவடிவில் எழுதப்படும் எழுத்துக்கள் தொன்மையே உண்டு என்பதை விளக்குகின்றன. இஞ்ஞான்று தமிழில் விளங்கும் நூல்களுள் தொல்காப்பியம் பழமையுடையது. இதன் காலம் கி. மு. 350-க்குப் பிற்பட்டதல்ல வென்பது சரித்திராசிரியர்களது கருத்து; வேதங்கள் வியாசரால் நான்கு கூறுகளாகச் செய்யப்படுவதன்முன் இயற்றப்பட்ட தென்பர். நச்சினார்க்கினியர் அப்படியாயின் தொல்காப்பியர் காலம் ஐயாயிரமாண்டுகளுக்கு முன்னாகும். தொல்காப்பியத்தில் எழுத்ததிகார மென ஒரு பகுதி உள்ளது. அதன்கண் எழுத்துகளின் பிறப்பு வடிவு முதலியன கூறப்படுகின்றன. ஆகவே தொல்காப்பியருக்குப் பன்னெடுங் காலத்துக்குமுன் தமிழில் எழுத்துகள் ஏற்பட்டிருத்தல் வேண்டும்.

இற்றைக்கு ஆயிர வருடங்களுக்கு முன் வழங்கிய எழுத்துகள் இன்று வழங்கும் எழுத்துக்களைப் போன்றன வல்ல. கி. பி. பதினாலாம் நூற்றாண்டு வரையில் அவ்வெழுத்துக்கள் திரிபடைந்து வந்தனவாகத் தெரிகின்றன. இதனை "உருவு திரிந்து உயிர்த்தலாவது மேலுங் கீழும் விலங்கு பெற்றும் கோடு பெற்றும் புள்ளி பெற்றும் புள்ளியுங் கோடும் உடன் பெற்றும் உயிர்த்தலாம். கி-கீ முதலியனமேல் விலங்கு பெற்றன. கு-கூ முதலியன கீழ் விலங்கு பெற்றன. கெ, கே முதலியன கோடு பெற்றன. கா, ஙா முதலியன புள்ளி பெற்றன. அருகே பெற்ற புள்ளியை இக்காலத்தார் காலாக எழுதி

ஞர். மகரம் உட்பெறு புள்ளியை வளைத்து எழுதினர். கொ, கோ, னொ, னோ முதலியன புள்ளியுங் கோடும் உடன் பெற்றன" என்னும் நச்சினார்க்கினியர் உரையால் அறியலாகும். முற்காலத்து தொல்காப்பியம் முதலிய நூல்கள் எழுதப்பட்டது வட்டெழுத்திலேயாம். பழய வட்டெழுத்து கோலெழுத்து என்னும் பெயருடன் மலையாளத்தில் மிகச் சமீப காலத்தில் வழங்கியுள்ளது. அங்கு இது கி. பி. 17-ம் நூற்றாண்டு வரையிலும் உபயோகிக்கப்பெற்றது. மலையாளத்திலும்மாப்பிளைமார் கோலெழுத்தை இன்றைக்கும் வழங்குகின்றனர் என்ப *.

திருவனந்த புரத்திலுள்ள நூதன சாலையில் சேகரித்து வைக்கப்பட்டிருக்கும் சில சாசனங்களால் தமிழ் வட்டெழுத்து கி பி. 18-ம் நூற்றாண்டின் பிற்பகுதி வரையும் வழங்கியதாகத் தெரிகிறது.

"அக்காலத்திலே வழங்கிய தமிழ் எழுத்துக்கள் இக்காலம் வழங்கும் எழுத்துக்களைப் போன்றனவல்ல. மதுரைக்கு வடகிழக்கே 9-மைலுக்கப்பால் இரண்டு மைல் தொடர்ச்சியுள்ள ஆனைமலை யென்னும் ஒரு மலைத்தொடருள்ளது. அம்மலையின் மேற்குப்பக்கத்தில் ஒரு குகை யிருக்கின்றது. அக்குகையின் சுவரில் பழைய தமிழெழுத்து வெட்டப்பட்ட சாசனமொன்று காணப்படுகின்றது. இதுதான் வட்டெழுத்து அல்லது பழய தமிழெழுத்து. எழுத்துகள் எழுதப்பட்டதன் வடிவிலிருந்து அவற்றுக்கு வட்டெழுத்து என்னும் பெயர் வழங்கப்பட்டது.

இச்சாசனத்தின் காலம் கி. பி. 770. கிறித்துவுக்குச் சில நூற்றாண்டுகளுக்கு முன் தென்னிந்தியாவில் வழங்கிய

* Tamil Studies P. 120.

எழுத்து இதுவேயாகும். கிறித்துவுக்குப்பின் எட்டாம் நூற்றாண்டில் வட்டெழுத்துடன் வேறுவகையான எழுத்துக்களையுங் கலந்து எழுதப்பட்ட சாசனங்கள் காணப்படுகின்றன. சில நூற்றாண்டுகளுள் வட்டெழுத்தின் இடத்தைப் புதிய எழுத்து எடுத்துக்கொண்டது. ஆரியருடைய சமயமும் சாஸ்திரங்களும் தென்னாட்டிற் பரம்பத் தொடங்கியதினால் சமஸ்கிருதச் சொற்கள் பலதமிழிற் கலக்க நேர்ந்ததே இதற்குக் காரணம். இப்போதைய வடிவத்தை தமிழ் எழுத்துக்கள் பதினாலாம் நூற்றாண்டில் அடைந்தன.''

(Dr. Chandler.)

இப்பொழுது வழங்குகின்ற கிரந்த எழுத்துக்கள் வட்டெழுத்தினின்றுந் தோன்றினவேயாம்.

போர் முனையில் இறந்த வீரனுக்கு கல் நட்டு அதில் அவனுடைய பெயரும் பீடும் எழுதுவது பழந் தமிழர் வழக்கு இதனை

"நல்லமர் கடந்த நாணுடை மறவர்
பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்
பீலிசூட்டிய பிறங்குநிலை நடுகல்'' (அகம்)

"பட்டோர் பெயரு மாற்றலு மெழுதி
நட்டகல்லு மூதூர் நந்தமும். (சேரமான் பெருமாள்)

என வருவனவற்றாலறிக. இவ் வீரக்கல் நிறுத்தும் வழக்கும் பழந் தமிழர்கள் எழுத்தெழுதும் முறையினை அறிந்திருந்தார்கள் என்பதை வலியுறுத்துகின்றது.

தமிழ்மொழியில் நெடுங்கணக்கு மிகவும் அழகுபெற அமைந்துள்ளது. ஓரே எழுத்துக்குப் பல ஒலியில்லை. ஓரொலிக்குப் பல எழுத்துக்கள் வேண்டா; கூட்டெழுத்துகள்

கிடையா. "மயங்கா மரபின் எழுத்து முறைகாட்டி" என்னுந் தொல்காப்பியச் சூத்திரம் இதனை வலியுறுத்தும். எல்லா எழுத்துகளும் மொழிக்கு முதலில் வாரா. எல்லா எழுத்துகளும் மொழிக்கிடையில் மயங்கா. முன் எத்தனை எழுத்துகளிருந்தனவோ அத்தனையே இன்று வரையு முள்ளன.

ஆரிய மொழிக்குரிய நெடுங்கணக்கு தமிழர் முறையைப் பார்த்துச் செய்யப்பட்டதென்பது ஆராய்ச்சியாளர் துணிபு. "தாங்கள் செல்லு மிடங்களுக்குத் தக்கபடி புதியலிபிகள் ஏற்படுத்திக்கொள்ளும் இயல்புடைய ஆரியர் தமிழ்நாட்டிற் கேற்றபடி தமிழ்லிபியை ஒட்டிக் 'கிரந்தம்' என்னும் பெயரிற் புதியதோர் லிபி வகுத்தனர்." (தமிழ் மொழியின் வரலாறு)

தமிழ்மொழியிலுள்ள முதலெழுத்துகள் முப்பதுமே குறைபாடில்லாத உறுப்புக்கள் அமைந்த மக்கள் குறைபாடில்லாத முயற்சியால் வாயாற் பிறப்பிக்கும் ஓசைகளாகும். சமக்கிருத மொழிக்கட் காணப்படும் தமிழிலில்லாத சில எழுத்துக்கள் குறைபாடுடைய முயற்சியாற் பிறப்பிக்கப்படும் எழுத்துக்களாம். தமிழுக்குரிய ஆய்த எழுத்தின் உதவியைக் கொண்டு எம்மொழியிலுள்ள எவ்வகை எழுத்தோசைகளையும் பிறப்பித்தல் எளிதில் அமையும்.

இம்முறையினை விளக்கிக் காட்டினோர் ஆசிரியர் மறைமலையடிகள் திருவாளர் பா. வே. மாணிக்க நாயகர் முதலியோராவர்.

"அகர முதல் ஔகார இறுவாயாகக்கிடந்த பன்னிரெழுத்துக்களுமே உயிரெழுத்துகள் எனப்படுவதற்கும் இவை தமிழ் மொழியின் ஒன்றாக அடைவுபடுத்து நிறுத்தப்பட்ட முறையே முறையெனப் படுதற்கும் உரிமை யுடையனவாம். இஃது

இவ்வாறாகவும் வடநூலார் தமிழின் நெடுங் கணக்கைப் பார்த்து உயிரெழுத்து மெய்யெழுத்துக்களை அடைவு படுத்திக் கொண்ட அளவில் அமையாது தமிழிலினும் தமக்கு உயிரெழுத்துக்கள் மிகுதியாய் உண்டென்று காட்டுவதற்குப் புகுந்த பொருந்தாப் பேரவாவால் உயிரெழுத்துக்களல்லாத ரு ரூ லு, அம் அஃ என்னும் உயிரெழுத்துக்களையும் அவற்றோடு கலந்து இழுக்கினார். இவ்வாறு எழுத்துக்களிற் கலந்த குற்றியலுகர ஊகாரங்களையும் அகரங்களையும் நீக்கினால் எஞ்சி நிற்பன ர் ல் ம் ஃ என்னும் மெய்யெழுத்துகளும் ஆய்தமுமேயாகலின் அவர் உயிரெழுத்துக்களைப் பன்னிரண்டின் மேலாகப்படைத்திட்டுக்கொண்டது வெறும் போலியா மென்க".

"பதினெட்டு மெய்யெழுத்துகள் மட்டுமே செவ்வையாகப் பொருந்தப்பட்ட உறுப்புகளுடைய மக்கள் குறைபாடில்லாத முயற்சியால் தம் வாயாற் பிறப்பிப்பனவாகும். விந்துவினின்றும் மேலெழுந்தவிந்து காரண வொலியை தன்னிலையில் நேரே இயங்கவிடாது மக்கள் தமது நிறைந்த முயற்சியால் தலை மிடறு நெஞ்சு என்னும் மூவிடங்களினும் அதனை நிறுத்திப், பல், நா, மூக்கு, அண்ணம் என்னும் ஐந்துறுப்புகளோடு அதனைப் பலவேறுபடத் திரித்துப் பல ஒலிகளாக வெளியிடுகின்றனர். இவ்விந்து காரண வொலி குறைபாடில்லாத உறுப்புகளாலும் குறைபாடில்லாத முயற்சிகளாலும் இயக்கக் கூடும் வரை இப்பதினெட்டெழுத்தின் மேற்பட்ட ஒலிகள் தோன்றுதற்குச் சிறிது மிடமே யில்லை. மற்று இவ்வாறன்றிக் குறைபாடுடைய உறுப்புகளும் குறைபாடுடைய முயற்சிகளுமிருந்தால் விந்து காரண வொலி செவ்வனே இயங்கப்படாமற் பலவாறாய் இயங்கி அளவுக் கடங்காப் பலதிற வொலிகளையெல்லாம் தோற்றுவிக்கும்.

"தமிழில் இல்லாமல் வடமொழி நெடுங்கணக்கில் மட்டும் காணப்படும். சில ஒற்றெழுத்துக்கள் அத்துணையும் தமிழின்கண் நிறைந்த முயற்சியாற் பிறப்பிக்கும் ஒற்றெழுத்துக்கள் சிலவற்றைக் குறைந்த முயற்சியால் ஆய்தவொலியைத் தடைப்படாது செல்லவிடுத்துப் பிறப்பிக்கத் தோற்றுவனவேயாகுமல்லாமல் உண்மையாக நோக்குங்கால் அவை தனித்தனி மெய்யெழுத்துகள் ஆகமாட்டா வென்பது தெற்றெனப் புலப்படும்." தமிழில் ஒலி எழுத்துக்கள்—ஆசிரியர் மறைமலையடிகள்.

ஆரியமொழியிற் காணப்படும் எழுத்துகளும் பிறவும் அம்மொழிக்கினமாகிய 'இலத்தின்' கிரீக், எபிரேயம் முதலிய மொழிகளில் இல்லாமையால் இந்தியாவை அடைந்த ஆரியர் அங்குறைந்த தொல்குடிகளாகிய தமிழரின் எழுத்து முறைகளைப் பின்பற்றியதுடன் விதிகளையும் ஆக்கிக்கொண்டார்களென்பது......வெள்ளிடை விலங்கல்."*

---

* Prof Rapson bears testimony to the fact that the aboriginal languages in the south of India were associated with a high degree of Culture, and hence it is not Surprising to note the presence of the Dravidian element in Sanskrit. It can be easily maintained that much, that is not found in Latin and Greek but peculiar to Sanskrit alone is due to the contact of the Aryans with the Dravidians. (Dravidian India P. 75.)

## 6. சொல்

"தமிழ்ச் சொற்களும் வடசொற்கள் போலத் தாதுகளை யுடையனவாம். தாதுவெனினும் பகுதி யெனினும் ஒன்றே. தமிழ்ச் சொற் பகுதிகள் எல்லாச் சொற்களுக்குந் தெற்றெனக் காண்பதரிது. அதுபற்றியே தொல்காப்பியரும் 'மொழிப் பொருட் காரணம் விழிப்பத்தோன்ரு' என்ருர். ஆயினும் நுண்ணிதாக ஆராயுமிடத்துப் புலப்படாமற் போகாது. சில சொற்கள் வினையடியாகவும் சில சொற்கள் உரியடியாகவும் சில சொற்கள் இடையடியாகவும் ஒரு சில பெயரடியாகவும் பிறந்தன.

"அகத்தியர் காலத்திலே வழங்கிய சொற்கள் பல பிற் காலத்திலே வழக்கிறந்தன. அவர் காலத்திலே வழங்காத சொற்கள் பிற்காலத்திலே வழங்குவனவாயின. அவர் காலத் திலும் தொல்காப்பியர் காலத்திலும் சகர அகரத்தை முத லாகவுடைய தமிழ்ச் சொற்கள் வழங்கவில்லை. சட்டி சட்டு வம் சட்டை சந்திரன் சஞ்சலம் சல்லி சலி முதலியன தமிழ்ச் சொற்களல்ல" (தென்மொழி வரலாறு.)

"பெயர் வினை இடை உரி என்னும் நால்வகைச் சொற்க ளில் இடைச் சொற்களும் உரிச் சொற்களும் முன்ஞெரு காலத்தில் வினைகளாயிருந்தன. அவைகளனைத்தும் காலக் கிரமத்தில் அத்தன்மை யிழந்து இப்போதுள்ள இடையுரிப் பண்புகள் அடைவனவாயின". (தமிழ் மொழியின் வரலாறு.)

தமிழ் மொழியின் முதற் பருவத்தே உள்ள சொற்கள் பெரும்பாலும் ஓரசையினவென்றும் அங்ஙனம் தமிழுக் குள்ள சொற்கள் பெருந்தொகையினவல்ல வென்றும் ஒவ் வோர் சொல்லடியாகவும் பற்பல சொற்கள் தோன்றிப் பல்

கினவென்றும் சொல் ஆராய்ச்சிவல்ல Rev. ஞானப்பிரகாச ரவர்கள் தமது 'தமிழ் மொழி அமைப்புற்ற வரலாறு' என்னும் நூலில் விளக்கிக் காட்டியுள்ளார்.

"கதந பமவெனு மாவைந் தெழுத்து
மெல்லா வுயிரொடுஞ் செல்லு மார்முதலே"

'சகரக் கிளவியு மவற்றோ ரற்றே
அ ஐ ஔ வெனு மூன்றலங் கடையே'

என்னும் தொல்காப்பியச் சூத்திரங்களால் அக்காலத்து ச, சௌ முதல் மொழிகள் வழங்கவில்லையெனத் தெரிகிறது "சகரக்கிளவி" என்னும் சூத்திரத்தினிரண்டாமடி. "அவை ஔ வெனு மொன்றலங் கடையே" என்றிருக்க வேண்டும் என்றும், அது எவ்வாறோ "அ ஐ ஔ வெனு மூன்றலங் கடையே" என்று திருத்தப்பட்டதென்றும் திருவாளர் அடைக்கலம் பிள்ளை அவர்கள் மெய்கண்டான் பத்திரிகையில் வெளியிட்டுள்ளார். இது ஆராய்ச்சிக்குரியது. அகராதிகளில் இரண்டாயிரத்துக்கு மேற்பட்ட சகர முதன் மொழிகள் காணப்படுகின்றன.

"யாழ்ப்பாணத்திலே எழுதத் தொடங்கி சென்னையில் பூர்த்தியாக்கப்பட்ட வின்ஸ்லோ (Winslow) அகராதி மிகச் சிறந்ததாகும். இது அறுபத்தேழு வருடங்களுக்கு முன் இயற்றப்பட்டது. அவ்வகராதியில் 67,000 சொற்கள் காணப்படுகின்றன. 1913-ம் ஆண்டில் புதிய தமிழ்ப் பேரகராதி மதுரையில் தொடக்கப்பட்டது. அது இப்போது சென்னையில் பல்கலைக் கழகத்தாரின் மேற்பார்வையில் இயற்றப்பட்டு வருகின்றது. சென்னை அரசாங்கத்தார் இம்முயற்சிக்கு ஒரு லட்சம் ரூபா உதவியிருக்கின்றனர். இப்புதிய

பேரகராதிக்கு வேண்டிய விஷயங்கள் அகராதிகளிலும் வேறு பலவகைகளிலும் சேகரிக்கப்படுகின்றன. வின்ஸ்லோவால் யாழ்ப்பாண வழக்கில் மாத்திரம் உள்ளனவென்று காட்டப் பட்ட 3000 சொற்கள் குமாரசுவாமிப் பிள்ளை, முத்துத் தம்பிப் பிள்ளை ஜாவனு 'கல்லூரி' (Jaffna college) Prof- ஹேட்சன் முதலானவர்கள் அடங்கிய ஒரு சபைக்கு ஆரா ய்ச்சிக்கு விடப்பட்டன. அவற்றுள் நூற்றுக்கு 97 சொற் கள் இன்றும் யாழ்ப்பாண வழக்கில் உள்ளனவென்று ஒப்புக்கொண்டனர். புதிய பேரகராதி (lexicon) யில் 83,000-ம் அல்லது 84,000-ம் சொற்கள் வரையில் தான் இருத்தல் கூடும். (Dr. J. S. Sandler M. A.)

## 7. வழக்கு

"தமிழ் மொழி" வழக்கு எனவும் செய்யுள் எனவும் இரு கூறுபட்டு இயங்குகின்றது. சாத்தாவா, நீ பொருளைத் தேடினுய், அவன் மிக பசித்தான், யான் சோறு கொடுத்தேன். என்றாற்போல யாவரும் வழங்குதற் பொருட்டு பெறுஞ் சொற்றொடர்கள் வழக்கு எனப்படும். இழிந்தோர் பலவாறு சிதைவுபடக் கூறுவனவும் ஒருவாற்றால் வழக்கே யாயினும், அவை அறிவுடையோரால் மேற் கொள்ளப்படாவாகும்.

## 8. செய்யுள்

"நல்லறிவுடையோரால் பலவகைச் சொற்களாலும் அமைதி பெறச் செய்யப்படுவன செய்யுள் எனப்படும். பாட்டுக் களே யன்றிச் சூத்திரம் உரை முதலாயினவும் செய்யுள்

* வழக்கெனினும் உரை யெனினும், நடை யெனினும் ஒக் கும். தமிழ் மொழியார் உரை மாத்திரையே உலகியல் வழக்கென் பர். (திராவிடப் பிரகாசிகை.)

என்னும் பெயரால் சூத்திரச் செய்யுள் என்று இங்ஙனம் பண்டு வழங்கின. யாம் இப்பொழுது செய்யுள் என்னும் பெயரைப் பாட்டுக்கே உரித்தாக்கிச் சூத்திரம் அல்லாதவை களை உரையெனவும், பாட்டு எனவும் இருவகைப் படுத்திக் கொள்கின்றோம். உரையினையும் பல்வகைப் படுத்திக் கூறு கின்றார் தொல்காப்பியனார். செய்யுட்களின் இடையே விரவி வரும் உரை சிலப்பதிகாரத்திற் காணப்படுவது. செய்யுள் அல்லது சூத்திரப் பொருளைத் தெளிவுறுத்தும் உரைகள் தமிழில் மிக்குள்ளன. யாதானுமொரு வரலாறு அல்லது உண்மையினைச் செய்யுளின்றித் தொடர்ச்சியாகக் கூறும் உரை நடையானியன்ற நூல், 'உரை நூல்' என்று வழங் கற்குரியது. அத்தகைய நூல் பண்டைச் சான்றோர் செய்ததாக நமக்கு ஒன்றுங் கிடைத்திலது. உரை நடை யானது பயில்வாரது அறிவு நுணுகி நின்று ஆராய்தற் கேற்ற திட்பமும் கூறும் பொருளுக்கேற்ற ஓசையும் உடைய தன்று. ஆதலின் பாட்டுகள் போல, உணர்வினை எழுப்பி இன் பஞ் செய்வதாகாது. ஓர் வரையறையின்மையின் சிதைவின்றி நிலை பெறுவதுமாகாது. எனினும் எளிதிற் பொருள் விளங்கு வதாய்ச் சுருங்கிய அறிவினர்க்குப் பயன்றருவது உரை நடை யேயாகலின், ஒவ்வொரு மொழிக்கும் உரை நூல்கள் இன்றி யமையாதன வென்பதிற் றடையில்லை. அவ்வகையில் தமிழ் மொழி வளர்ச்சியுறாதிருந்தது இரங்கத்தக்க தொன்றே,

"தமிழ் மொழியிலுள்ள பாட்டுக்களின் மாட்சி அள விடற்பாலனவல்ல. பிறமொழிச் செய்யுளை யெல்லாம் தமிழ்ச் செய்யுட்கள் வென்று விட்டன என்னலாம். நமது முன்னை யோர் தம் நுண்ணறிவானும், உழப்பானுங் கண்டறிந்த அரும் பொருண் மணிகளை யெல்லாம் நமக்கு உதவுமாறு தொகுத்து

வைத்த காரிசியங்கள் பாட்டுக்களேயாகும். பல்லாயிர மாண்டுகளின் முற்பட்ட நம் பெரியோர், என்பு, தோல் நரம்புகளால் யாக்கப்பட்ட உடம்பினை யெடுத்து நமக்கெதிரில் வீற்றிருக்க, நாம் அவர்களோடு அளவளாவியும், அவர்கள் கூறும் உறுதி மொழிகளைக் கேட்டும், அறிவும் ஆண்மையும் உடையராய் இன்பற்றிருத்தலினும், பெறுதற்கரிய பேறு யாதுளது. எத்தனையோ ஆயிரம் ஆண்டுகளின் முன்பு விளங்கி யிருந்து பின் மாறுதலுற்று மறைந்து போன மலை, நிலன் கடல் யாறு முதலியன வெல்லாம் புலவருடைய பாட்டுகளின் தம் பண்டைய வுருவுடன் விளங்குதலைக் காணுமிடத்து, நமக்குண்டாகு முணர்ச்சியை யாதென்று கூறலாம். உலகமென்னும் காட்சி மன்றத்தில் உயர்வற வுயர்ந்த ஒருவனால் காலந்தோறும் அமைத்து வைக்கப்படும் எண்ணில் பேதமான பொருள்களையும் அவற்றின் பண்புகளையும், மொழிகளென்னும் வரைவு கோல் கொண்டு, உள்ளமென்னும் கிழியில் ஒழுங்குறத் தீட்டி வைத்த ஓவியராகும் நல்லிசைப் புலவர்கள், அவ்வோவியக் காட்சியில் உறைந்து நிற்குங்கால் உண்டாய உணர்ச்சியே வடிவாக, அன்னவர் தம் செந்நாவினின்றெழுந்த பாட்டுக்களினும் நமக்கின்பம் விளைப்பன யாவையுள? உருகிப் பெருகி யுளங் குளிர' முகந்து கொண்டு, பருகற்கினிய பரங் கருணைத் தடங்கல் போன்று பருகுந்தோறும் பருகுந்தோறும் வற்றாத பேரூற்றாய் கழி பேரினிமை சுரந்தூட்டுவன பாட்டுக்களேயாமென்க.

" இக்காலத்தே பொருட்பொலிவு சிறிதுமின்றி, எதுகை, மோனையமையச் சொற்களைத் தெற்றிவைப்பதே பாட்டென்று கருதிக்கொண் டிருப்பாரும் உளர். மடக்கும் திரிபுமாகச் சொற்களை அடுக்கி வைத்து, இரண்டொரு போலிப்

பாட்டியற்றினாரைப் புலவர் வரிசையிற் சேர்த்தெண்ணுவாரு முளர். அந்தோ! இவற்றுக்கெல்லாம் காரணம், பாட்டின் தன்மை இன்னதென்று அறியாமையேயாகும். தொல்காப்பியனார் கூறிய 'நோக்கு' முதலிய இன்றியமையாச் செய்யுளுறுப்புகளை யொழித்துவிட்டுப் பிற்காலத்தார் யாப்பிலக்கணம் வகுத்ததும், பாட்டின் றன்மையறியாது, பிழைநெறியிற் பிறர் செல்லுதற் கேதுவாயிற்றென்க. இவற்றை யெல்லாம் ஒதுக்கிச், சுருங்கிய சொற்களில் ஆழ்ந்து அகன்ற பொருள்களை யுடையனவாய், இயற்கைநெறி வழாதனவாய், உணர்வினை யெழுப்பி, மெய்ப்பாடு தோற்றுவிக்கும் சான்றோர் செய்யுட்களையே அறிவுடையோர் 'பாட்டு' என்று கொள்வாராவர். அத்தகைய பாட்டுகள் தாம் எண்ணிறந்தனவுள" (கபிலர் - பக். 84-87. பண்டிதர் - மு. வெங்கடசாமி நாட்டார்).

"தமிழ்மொழியிலுள்ள செய்யுளோசை அமைதியே பாவென்று பெயர் பெறுவதாம். ஒருவன் தொலைவிடத்திருந்து ஒரு பாட்டுப்பாட அப்பாட்டின் சொற்பொருள் இன்னவென்று புலப்படாவாயினும் அவ்வோசை வருமாற்றை உய்த்துணர்ந்து காண்பானுக்கு அவன் பாடுஞ் செய்யுள் இன்ன பாவென்று அறியக் கிடக்கும். இங்ஙனம் நுண்ணிய விசும்பின்கண் அலைஅலையாய் எழும்பி ஓர் ஒழுங்காக வரும் ஓசையே பாவாகுமெனத் தொல்காப்பியச் செய்யுளுரையிலே பேராசிரியரும் நன்கு விளக்கினார். இவ்வாறு தோன்றிப் பரம்புஞ் செய்யுளோசையைத் தமிழாசிரியர் வெண்பா, அகவற்பா, கலிப்பா, வஞ்சிப்பா என நால்வகைப்படுத்தினர். பின்னும் இந்நால்வகைப் பாவின் ஓசையை நோக்குமிடத்து வெண்பாவிற் கலிப்பாவும் அகவற்பாவில் வஞ்சிப்பாவும்

அடங்குவனவாம். இஃது 'ஆசிரிய நடைத்தே வஞ்சியேனை —வெண்பா நடைத்தே கலியென மொழிப' (தொல். செய். 208) என்றும், 'பாவிரு மருங்கினைப் பண்புறத் தொகுப்பின், ஆசிரியப்பா வென்ப வெண்பாவென்றாங், காயிருபாவினுள டங்குமென்ப' (செய். 107) என்றும் ஆசிரியர் தொல்காப்பிய னார் கூறுமாற்றான் விளங்கும் (பட்டினப்பாலை ஆராய்ச்சி - ஆசிரியர் மறைமலையடிகள்.)

செய்யுளாவது 'பாட்டுரை நூலே (செய் - 78) என் னுஞ் செய்யுளியற் சூத்திரத்தாற் கூறிய ஏழு நிலமும் அறம் முதலிய மூன்று பொருளும் பயப்ப நிகழ்வது" (நச்சினார்க் கினியர்).

"வேற்று நாட்டுச் சொற்களும் பொருள்களுமான ஆடை அணிகலன்கள் தன்னை வந்து அணுகப் பெறாமல் தன் தெய்வ வளநாட்டு ஆடை அணிகலன்களையே நமது தண்டமிழ்த் தாய் தன் மேற்கொண்டு பொலிந்தாள் அந்நாளில் அவளது ஆம்பற் செவ்வாயினின்றும் அமிழ்தம் ஒழுகினாற் போற் புறம்போந்த வெண்பா அகவற்பா கலிப்பா என்னும் இயற்கைச் செந்தமிழ்ப் பாக்கள் பாவினங்களின் அரிய பெரிய அமைதிகளையெல்லாம் முற்றவெடுத்து முடிய விளக்கும் அருந் தமிழ் நூல் ஓல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பிய மொன் றுமேயாம்.

"இனி அந்நாட் கழிந்தபின் இடைப்பட்ட காலத்தே விளைபொருள் வளனில்லா வெற்று நாட்டவர் வறுமை கூர்ந்து செந்தமிழ்த் தனி வளநாடு புகுந்தார். புகுதர எல்லா மக்களிடத்தும் அன்புடையவளான செந்தமிழ்த் தாய் அம்மக்கள் தம்மையும் அகம் கனிந்து முகம் மலர்ந்து ஏற்று அவர் வறுமைதீரத் தன்பாலுள்ளவைகளை யெல்லாம்

உளங்குழைந்து உதவியூட்டி அவரை மகிழ்வித்தனள். மகிழ்விக்க அவரும் தமது மிடி தீர்ந்து தாம் தமது வறங் கூர் நாடுகளினின்றுங் கொணர்ந்த பன்மொழிச் சில்பணி களைத் தமது நன்றிக்கு அறிகுறியாக அன்னை கைக்கொடுத் தார். நந்தமிழன்னை அவை இயல்பானும் அளவானும் மிகச் சிறியவாயினும் அன்புறு மக்கள் தந்தனரென்பதனால் உவராது ஏற்றுத் தன் விலை வரம்பற்ற மணிக்கலன்களோடு அவற்றைக் கலந்தணிந்தாள். இம்முறையால் வடமொழி யாளர் கொணர்ந்த சில சொற்களும் யாப்பு வகைகளுமாம் அணிகலன்களும் நம் தமிழன்னையின் புனித மேனியின்கட் காணப்படலாயின.

“இன்னும் இவ்விடைப் பட்ட காலத்தே வடமொழி மக்கள் திரள் திரளாகத் தமிழ் வளநாடு புகுந்து செந்தமி ழன்னை பாலடைக்கலம் புகவே, நந்தமிழன்னை தன் மக்கள் பால் வைத்த அன்பினும் மிடிபட்டு வந்த அவ்வயற்புதல்வர் பால் அன்பு மிக வைத்து அவரை மகிழ்விப்பான் வேண்டி அவர் மாற்றித் தந்த விருத்தப் பாக்களாம் அணிகலன் களைத் தனக்கு இசைந்தவாற்றாற் பலவகைப்படத் திரித்துச் சிறக்கச் செய்தணிந்திடுவாளாயினள். இதனாலன்றே கி. பி. மூன்றும் நூற்றாண்டில் திகழ்ந்த சைவ சமயாசாரிய ரான மாணிக்கவாசகர் காலந்தொட்டு இற்றைநாள் வரை யும் காவியங்கள், புராணங்கள், இதிகாசங்கள் முதலாயின வெல்லாம் பலதிறப்பட்ட விருத்தப் பாக்களினாலேயே யாக்கப்படுவதாயின. (யாப்பருங்கல விருத்தி முகவுரை.)

## அணி

அணி யிலக்கணமென வொன்று தொல்காப்பியத்தில் தனியாகக் கூறப்படவில்லை. தொல்காப்பியத்திற் கூறிய உவமப் பகுதியே எல்லாப் பகுதிகளையும் தன்னுளடக்கி நிற்

குஞ் சிறப்புடையது. தண்டியலங்காரம், வீரசோழியம் முதலிய பிற்றைஞான்றை நூலுடையார் வடநூலார் மதமே பற்றி உவமமொன்றனையே வாளா பல பெயர்களாற் பெருக்கி அவற்றானு மவையடங்காமை கண்டு இளைப் புற்றார்.

பேராசிரியர் உவமவியலுரையில் "இனி இவ்வோத்தி னுட் கூறுகின்ற உவமங்களுட் சிலவற்றையும், சொல்லதி காரத்துள்ளும் செய்யுளியலுள்ளும் சொல்லுகின்ற சில பொருள்களையும் வாங்கிக்கொண்டு, மற்றவை செய்யுட் கண்ணே அணியாமென இக்காலத்து ஆசிரியர் நூல் செய் தாருமுளர். அவை ஒரு தலையாகச் செய்யுட்கு அணி யென்று கூறப்படா * * *. பொருளதிகாரத்துள் (வரும்) பொருட்பகுதி யெல்லாம் செய்யுட்கணியாகலான், அவை பாடலுட் பயின்றன என்றதனால், அவற்றைத் தொகுத்து அணியென்று கூறாது, வேறு சிலவற்றை உரைத்து அணி யென்று கூறுதல் பயமில் கூற்றாம்" என்று பிற்காலத்தணி களை மறுத்துக் கூறுதல் காண்க.

"இப்பொருளணிகளிற் பல உவமமென்ற ஓரணியி னடியாகவே தோன்றின வென்பது பல்லோர் துணிபு. ஆசிரியர் தொல்காப்பியரும் இத்துணிபினர்போலும். இது வடமொழி அப்பைய தீக்ஷிதரவர்களுக்கும் உடன்பாடாதல்

"உவமை யென்னுந் தவலருங் கூத்தி
பல்வகைக் கோலம் பாங்குறப் புனைந்து
காப்பிய வரங்கிற் கவினுறத் தோன்றி
யாப்பறி புலவ ரிதயம்
நீப்பறு மகிழ்ச்சி பூப்ப நடிக்குமே"

என்ற அவரது சித்திர மீமாம்சைக்கூற்றான் விளங்கும். (தமிழ் மொழியின் வரலாறு.)

“ஆயினும் உலகில் வழங்கும் மொழிகளெவற்றினும் உவமையொன்ற அடிப்படடு நடந்தியல்வது வெள்ளிடை விலங்கலாம். ஏனைய அவ்வொன்றில் நின்றே கிளைப்பன. இதுபற்றி யன்றே தொல்காப்பியனாரும் உவமவியலொன்றே கூறிப் போந்தார் (தமிழ் - செல்வக் கேசவராய முதலியார்).

## பொருள்

பொருட் பகுதியில் அகம் புறம் என்னும் இரண்டொழுக்கங்களின் இலக்கணங்கள் கூறப்படுகின்றன. அக்காலத்து ஆண் பெண் என்னும் இருபான்மாக்களின் மண முறைகளையும் அவர் இல்லறவொழுக்கங்களையும் கூறுவது அகம். அக்காலத்து அரசர் செய்த போர் முறைகளையும் அவர்களது பிற ஒழுக்கங்களையும் கூறுவது புறம். ஆகவே பொருளதிகாரம் பழந் தமிழ் மக்களின் வரலாறாக வமைந்துள்ளது. பொருளிலக்கணத்திற் காணப்படும் பொருள்கள் வடமொழியில் என்றென்றைக்குங் கிடைக்கக் கூடாத தனித் தமிழ் விஷயங்களாகும்.

“தள்ளாப் பொருளியல்பிற் றண்டமிழாய் வந்திலார்
கொள்ளாரிக் குன்று பயன்” (பரிபாடல்)
“இலைபுறங் கண்ட கண்ணியின் றமிழியற்கையின்பம்”
“தேவர் பண்ணிய தீந் தொடையின் சுவை
மேவர் தென்றமிழ் மெய்ப்பொருளாதலின்”

(சிந்தாமணி)

பரிபாடல் சிந்தாமணி என னும்பழந்தமிழ்ப்பனுவல்களினின்றும் காட்டப்பட்ட இப் பிரமாணங்கள் பொருள் இலக்கணம் தமிழ் மொழிக்கே சொந்தம் என்பதை வலியுறுத்தும்.

"மறையோர் தேஎத்து மன்றலெட்டனுள்" (தொ - கள - க) என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தால் அக்காலத்துத் தமிழ் நாட்டில் வழங்கிய மண முறைகள் எட்டு என அறிகின்றோம்.

"அறநிலை யொப்பே பொருள்கோ டெய்வம்
யாழோர் கூட்ட மரும்பொருள் வினையே
யிராக்கதம் பேய்நிலை யென்றிக் கூறிய
மறையோர் மன்ற லெட்டிவை"

என்னும் இறையனா ரகப்பொருளுரை மேற்கோளால் அம்மன்றல்கள் எட்டின் பெயர்கள் புலனாகின்றன. இம்மண முறைகள் தமிழ்நாட்டிற்கே உரியன. இவற்றை ஆரியர்க்குரியனவாகக் கொள்வர் சிலர் பேதைமையால்.

(1) அறநிலை (பிரமம்) யாவது: "ஓரிருது கண்ட கன்னியை மற்றையிருதுக்காணுமே கொளற்பால மரபினோர்க்கு நீர் பெய்து கொடுத்தல். என்னை

ஒப்பாருக் கொபபா ரொருபூப் பிரிந்தபி
னின்பான் மதிதோன்று மெல்லைக்க—ணப்பாற்
றருமமே போல்கென்று தக்கார்க்குச் சேர்த்தல்
பிரமமாம் போலும் பெயர்"

என்றாராகலின்.

"பிரமமாவது ஒத்த கோத்திரத்தானாய் நாற்பத்தெட்டியாண்டு பிரமசாரியங்காத்தானுக்கு பூப்பெய்திய பன்னீராட்டைப் பிராயத்தாளை அணிகலனணிந்து முத்தீமுன்னர்க் கொடுப்பது" என உரையாசிரியர்கள் கூறுவர். நாற்பத்தெட்டியாண்டுப் பிராயத்தானுக்குப் பன்னீராட்டைப்

பெண்ணை மணமுடிப்பது தகுதியான மணமுறையாகக் காணப்படவில்லை. இம் மணத்தைப்பற்றிக் கூறும் பழய பாடல் நாற்பத்தெட்டியாண்டு பிரமசாரியங்காத்தல் முத லியவற்றைப்பற்றி யாதுங் கூறாமையால் அப்பொருந்தா மணமுறை ஆரிய நாட்டார் வழக்காதல் கூடும். இம்முறை யினையே அவர்கள் தமிழ் நாட்டு அறநிலை வழக்கோடு ஒப்ப வைத்துப் பிரமம் என்னும் பெயரால் வழங்கினார்கள் போலும்.

ஒப்பு (விதிமணம் அல்லது பிரசாபத்தியம்) ஆவது: " கொடுத்த பரியத்தின் இருமடங்கு மகட் கொடுப்போன் கொடுத்தல். என்னை

" கொடுத்த பொருள் வாங்கிக் கொண்டபேர்
மடுப்பர் மடுத்தற் கமைந்தா—லடுப்போ
னிரண்டா மடங்கு பெய்திவ ததுவே
யிரண்டா மணத்தி னியல்பு " என்றாராகலின்.

பொருள் கோள் (ஆரிடம்) ஆவது: "ஏறும் ஆவும் கொணர்ந்து நிறீஇ, அவற்றின் முன்னர்க் கைக்கு நீர்பெய்து கொடுத்தல். என்னை?

"இற்குலத்தோ டொப்பானுக் கொப்பா னிமிலேறுப்
பொற்குளம்பிற் பொற்கோட் டாப்புனைந்து—முற்பநீத்து
வாரிடம்பே ராமுலையை வாழ்க்கைக்கண் வைப்பதுரை
ஆரிடம் பேரா மதற்கு"

என்றாராகலின்.

தெய்வம் ஆவது: வேள்வி ஆசிரியன் ஒருவற்கு மகளை அணிகலனணிந்து அவ் வேள்வித் தீ முன்னர்க் கொடுப்பது. என்னை?

"மெய்ப்பாலைப் பெண்டன்மை யெய்தியபின் மெல்லியலை
யொப்ப வுணர்ந்த பொழுதுண்ட—லொப்பார்க்கு
நெய்தயங்கு தீமுன்னர் நேரிழையை யீவதே
தெய்வப்பே ராகுந் தெரிந்து"

என்றாராகலின்.

யாழோர் கூட்டம் (கந்தருவம்) ஆவது: "ஒத்த குல னும், குணனும், அழகும், அறிவும், பருவமும் உடையார் யாருமில் ஒரு சிறைக்கண் அன்புமீ தூரத் தாமே புணர்ந்து ஒழுகும் ஒழுக்கம். என்னை ?

'ஒத்த குலத்தார் தமியரா யோரிடத்துத்
தத்தமிற் கண்டதம் மன்பினு—லுய்த்திட
வந்தா மின்றிப் புணர்வ ததுவரோ
கந்தருவ மென்ற கருத்து' எனவும்,
'முற்செய் வினையது முறையா வுண்மையி
னொத்த விருவரு முள்ளக நெகிழ்ந்து
காட்சி யையந் தெரிதல் தேற்றலெனு
நான்கிறந் தவட்கு நாணு மடனும்
அச்சமும் பயிர்ப்பு மவற்கு
முயிர்த்தகத் தடக்கிய,
வறிவு நிறைவு மோர்ப்புந் தேற்றமு
மறையவர்க்கு மாண்டதோ ரிடத்தின்
மெய்யுறு வகையும் முள்ளல்ல துடம்புறப்படாத்
தமிழியல் வழக்கமெனத்
தன்னன்பு மிகைபெருகிய
களவெனப் படுவது கந்தருவ மணமே"

என்றார் அவிநயனார்."

அரும் பொருள் வினை (அசுரம்) ஆவது: "இன்னது செய்தார்க்கு இவளுரியள் என்ற இடத்து அன்னது செய் தெய்துவது. அவை வில்லேற்றுதல், திரிபன்றியெய்தல் கொல்லேறு கோடன் முதலிய."

இராக்கதம் ஆவது: "ஆடைமேலிடுதல், பூமேலிடு தல், கதவடைத்தல் முதலியவற்றால் வலிதிற் கோடல்."

"பேய்நிலை யாவது: துருஞ்சினோரோடும், மயங்கினோரோடும், சரித்தாரோடும், செத்தாரோடும், விலங்கினேடும், இழிதகு மரபில் யாருமில்லா வொரு சிறைக்கண் புணர்ந்து ஒழுகு மொழுக்கம்."

தொல்காப்பியர், மறையோர் தேஎத்துமன்றல் எட்டு, எனக் கூறினமையின் எண்வகை மணங்களும் ஆரிய நாட்டார்க்குரியனவெனச் சிலர் கூறுகின்றனர். அது அறியாதார் கூற்றாகும். தொல்காப்பியர் தமிழ்நாட்டு வழக்கே யன்றி ஆரியநாட்டு வழக்குக் கூறப்போந்தா ரல்லர். 'மறை' 'மறையவர்' என்னும் சொற்களைக் கண்ட மாத்திரத்தே அவை ஆரிய வேதத்தையும் ஆரியப் பிராமணரையும் குறிக்கும் என நம்மவரின் பிழையான விளக்கமே இம்மயக்கத்திற்குக் காரணம். பண்டைத் தமிழ் நூல்களிற் கூறப்படும் மறை மறையோர் என்பன தமிழ் மறைகளும் தமிழ் அந்தணரும் என்று ஓர்தல் வேண்டும். இதனைக் குறித்துப் பிறிதோரிடத்தில் ஆராயப்படும்.

## அகம்

"அகமென்பது, தலைவனுந் தலைவியும் தம்முளொத்த அன்பினராய்க் கூடுங் கூட்டத்தின்கண் பிறந்த இன்பம் அக்கூட்டத்தின்கண் ஆண்டனுபவித்த அக்காலத்தில் இன்பம் எவ்வாறிருந்ததென் றவ்விருவரிலொருவரை யொருவர் கேட்கின், தமக்குப் புலப்படாதாய் உள்ளத்துணர்வே

நுகர்வதாய் அகத்தே நிகழ்தலின் அகமெனப் பெய ராயிற்று. அகமெனினும் காமப் பகுதி யெனினும் ஒக் கும்." அகத்தைச் சார்ந்துவரும் பொருளெல்லாம் அகப் பொருளாம்.

## களவு

" உருவுந் திருவுங் குலமும் முதலியவற்றால் ஒப்புயர் வற்று விளங்குந் தலைமகனொருவன் வேட்டையாடிக் கொண்டு மலைச்சாரல் ஒன்றன் பக்கத்தே தனியனாய் வந்தா னாக, ஆங்குத் தினைப்புனங்காத்துத் தோழியரோடு விளை யாடுபவளும் உருதிரு முதலியவற்றால் ஒப்புயர்வற்றவளு மாகிய மலைவாணர் மகளொருத்தி விளையாட்டு விருப்பாற் றோழியர் தனித் தனி பிரிந்த நிலையில் தானுந் தனியாளாய் அத்தலைவன் முன்பு எதிர்ப்பட்டனள். எதிர்ப்பட்ட இரு வரும் ஊழ் வயத்தால் உள்ளங் கவர்ந்து அவ்விடத்தே மகிழ்ந்து பின்னர் ஒருவர்க்கொருவர் பிரிவாற்றாது ஒரு வாறு ஆற்றுவித்துக்கொண்டு தம்மிடம் நோக்கிச் சென் றனர். இவ்வாறு விதியாற் கூட்டப்பட்டுப் பிரிந்த தலை மகன் தான் காதலுற்ற தலைவியைத் திரும்பக் காணு மவாவினாற் றூண்டப் பட்டு, முன்னாட் கூடிய இடத்தை நாடிச் செல்ல அங்ஙனமே அன்பு தூண்ட ஆங்கு வந்த தலைவியை தலைமகன் எதிர்ப்பட்டுக் கண்டு மகிழ்ந்து காதலால் முன்போல கலந்தான். இம்முறை மூன்றாம் முறை கூடும்போது தன் பாங்கனால் தலைவி யிருப்பிட மறிந்து சென்று அவளைச் சேர்வன். இனித் தோழி யால் எப்பொழுதுஞ் சூழப்பட்டுள்ள தலைவியை இங் ஙனமே பலகாலுந் தனியிடத்தெதிர்ப்பட்டுக் கூடுதல் அருமையாயிருத்தல் பற்றித் தலைவியைத் தடையின்றி அனு பவிக்கக் கருதியவனாய் அதற்குத் தக்க துணையாவாள் அவள் காதற்றோழியே என்பதை யறிந்து கொண்டு அவள் பாற்

சென்று குறிப்பாகவும் வெளிப்படையாகவும் தன் குறை கூறி வேண்ட அவள் பல படியாக ஆராய்ந்து இருவர்க்கும் கூட்ட முண்மையுணர்ந்து, இனி நாமும் இதற்கு உடன் படலே நலம் என்று அவ்விருவரையுங் கூட்டுவதற்கு முயல் வள். இங்ஙனம் தோழியால் பல முறை கூடிவருமிடையில் தலைவியால் காக்கப்பட்டு வருந்தினைப் புனம் முற்றிக் கதிர் கொய்தலேனும் பிற காரணமேனும் நிகழத்தலைவிக்கு அக் காவல் நீங்கி மனையகத்தே தங்கும்படி நேர்தலும் அக்காலத்து இரவில் தோழி அவ்விருவரையுங் கூட்ட முயல்வள். இங் ஙனம் நிகழுங் களவொழுக்கம் சிறுகச் சிலர் பலர்க்குத் தெரிய வந்து நாளடைவில் ஊரில் பேரலராய் எழும்ப, அது காரணத்தாற் பெற்றோர் தலைவியை இற்செறித்துத் தக்க படி காவற் படுத்துவர். அதனால் தலைமகனைக் காணப் பெறாத ஆற்றாமை தலைவி மாட்டுப் பெருகுதல் கண்டு, தோழி, இனிக் கற்புநெறிப் பட்ட இவள் இறந்துபடவுங் கூடுமென்று கருதி இதற்கு வேறு உபாயமொன்றுங்காணாத நிலையில், அவள் தலைவனை யடைந்து 'இனி நீர் இவளை உடன்கொண்டு சென்று மணந்து கொள்வதே காரியம்' என்றுகூறிஒருவருமறியாவகை தலைவியை வெளியேற்றித் தலைமகன்பாற் சேர்ப்பிக்க, அவன் அவளை உடனழைத் துக் கொண்டு, தன்னூர் நோக்கிச் செல்வான்; செல்லு மிடையில், தலைவியின் சுற்றத்தார் அக்களவறிந்து வந்து தலைவனை மேற் செல்லாவாறு தடுத்தும், அவள் தன் காதல் முழுதும் தலைவன்பாற் சார்த்தி நிற்பது கண்டு 'இவள் கற்பு நெறிப்பட்டாள்' என்று அறிந்து கொண்டு அவ்விரு வர்க்குந் தீங்கு செய்யாது திரும்பிப் போவர். போகத் தலைவனுடன் மகிழ்ந்து சென்று தலைவி அவனூரடைந்து வாழ்வளென உணர்க".

(தொ. - பொ. - ஆ. - மு. ராகவ ஐயங்கார்.)

இக்களவொழுக்கம் பற்றிய செய்திகள் கூத்தர் கூத்தியர்களால் வேத்தவையில் அபிநயித்து நடிக்கப்பட்டு வந்தன. "வேத்தியல் அகம் பொதுவியல் புறமென்பாரும் பிறிது கூறுவாருமுளர்" (அடியார்க்கு நல்லார்) அக்காலத்து நாடக வழக்கையும் உலகியல் வழக்கையும் தழுவிச் செய்யப்பட்டதே தொல்காப்பியத்திற் கூறப்படும் களவியலாகும். "இத்தமிழ் நாடகத் தமிழ் எனப்படும்; களவி ஒழுங்குபடக்கோத்துக் கதைபோல வந்து நாடகத்துக் கேற்றலின்" எனக் கூறுவர் தஞ்சைவாணன் கோவை உரைகாரர்.

## கற்பு

தலைவியை உடன்கொண்டுபோய தலைவன் தன்னூரிலேனும் தலைவியின் சுற்றத்தார் சம்மதித்து வேண்ட அவளூரிலேனும் அவளை விதிப்படி மணந்து கொண்டு அவ்விருவரும் இல்லிருந்து ஆற்றும் அறவொழுக்கம் கற்பெனப்படும். இங்ஙனம் இல்லிருந்து இல்லறம் நடாத்தி இன்புற்றிருக்கும் நாளில் சில காரணத்தை முன்னிட்டு தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து செல்வன். அங்ஙனம் தலைவியை விட்டுப் பிரிதல் அறநூலை ஓதுதற்பொருட்டாவது நாடுகாத்தற் பொருட்டாவது, மாறுபட்ட இருவேந்தரைச் சந்து செய்தற்பொருட்டாவது, வேந்தர்க்குத் துணையாய்ப் போர் செய்தற் பொருட்டாவது, பொருளீட்டும் பொருட்டாவது, பரத்தையர் பொருட்டாவது, நிகழும். "முந்நீர் வழக்கம் மகடூஉ வோடில்லை" என்பதால் பெண் மக்களை மரக்கலத்தில் ஏற்றிச் செல்லல் பழயநாள் மரபன்று. ஓதற் பிரிவு மூன்று ஆண்டுகளும் மற்றப் பிரிவுகளெல்லாம் ஓர் ஆண்டுக்குள்ளும் முற்றுப் பெறவேண்டுமென்ப.

தலைமகன் பிரிந்து செல்லுமிடத்துத் தலைமகள் அவன் பிரிவாற்றாது இரங்குவாள். தலைமகனு மிரங்கி அவளைத் தேற்றி இன்ன இருதுவில் இன்ன திங்களில் யான் மீண்டு வருவேன் என்று கூறிச் சில குறிகளுஞ் செய்துவிட்டுச் செல்வான். தலைமகளும் தலைவன் சொற்பிழையாது இல் லிருந்து இல்லறமாற்றி வருவாள். அவன் குறித்த பருவம் வந்தவிடத்து அவன் பிரிவினை ஆற்றாது வருந்துவாள். தோழி அவள் ஆற்றாமையைக் கண்டு வருந்தித் தலைவன் குறித்த பருவம் அஃதன்றேல் அவன் செய்த குறிகள் வந்தமையான் அவன் வாரா நிற்கின்றான் என்றும் பிறவுங் கூறித் தலைவியை ஆற்றுவிப்பாள். தலைவனுந் தான் குறித் துச் சென்ற வினைமுடித்துக் குறித்த பருவம் வரவே மீண்டு வருவான். மீளும் வழியில் தான் செய்த குறிக ளெல்லாந் தோன்றும். அதுபொருட்டுத் தலைவி ஆற்றா ளென்று பாகற்குக் கூறி தேரை விரைவிற் செலுத்தச் செய்து கடுகிவந்து தலைமகளை யெய்தி விருந்தயர்வான். பின்னர் இருவரும் பிரிந்திருந்த விடத்து நிகழ்ந்த செய்தி களை யெல்லாம் ஒருவருக் கொருவர் சொல்லிக்கொண்டு இன்புறுவர்.

இங்ஙனம் இல்லறம் நடாத்தித் தலைவனுந் தலைவியும் வெறுக்கு மளவும் காமவின்பந் துய்த்து மக்களைப் பெற்று முதுமை யெய்தியபோது துறவு மேற்கொண்டு மெய் யுணர்ந்து வீடுபெறுதலே இவ்வொழுக்கத்தின் முடிந்த பொருளாம்.

“காமஞ் சான்ற கடைக்கோட் காலை
யேமஞ் சான்ற மக்களொடு துவன்றி
யறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியுஞ்
சிறந்த தியற்ற லிறந்ததன் பயனே”

(தொல். கற். 51)

காதல் வழிச் செல்லுமுள்ளமும் இறைவனை நச்சு முள்ளமும் ஒருபான்மைய வாகலின், அன்பின் மாண்பினை விளக்கும் அகப்பகுதி விழுமிதென அறிஞர் உச்சிமேல் வைத்துப் போற்றுவர். இறைவன் பக்குவம் வாய்ந்த நல் லுயிர்களை ஆட்கொள்ளும் முறையினை மாணிக்க வாசக சுவாமிகள் "காமஞ் சான்ற ஞானப்பனுவ" லாகிய திருச் சிற்றம்பலக் கோவையார் என்னும் அகப்பொருள் நூலால் விளக்கி யிருத்தல் கருத்தில் ஊன்றத் தக்கது.

## புறம்

"அகம்போல் ஒத்த அன்புடையார் தாமே யன்றி எல்லாராலும் துய்த்து உணரப்படுதலானும் இவ்வாறிருந்த தெனப் பிறர்க்குக் கூறப்படுதலானும் இது புறமாயிற்று.

இதனை வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண்டிணை ஆகிய ஏழு திணைகளாக வகுத்துக் கூறுவர். பிற்காலத்தவர் கரந்தை நொச்சி முதலிய பல திணைகளையுங் கூட்டி இதனையே பன்னிரண்டு திணைகளாக விரித்திருக்கின்றனர். இவ்வேழனுள் காஞ்சி பாடாண் டிணை யிரண்டினுட் உலகின் நிலையின்மையையும், தலைவனைப் புகழ்தல் காரியத்தைப்பற்றியுங் கூறுவர். ஏனைய ஐந் திணைகளும் அக்காலப் போர்த்திறனை விளக்குவனவாம. பண்டைத் தமிழ் மாக்கள் போர் செய்தற்கு ஏகுங்கால் செய்யும் சமர் சம்பந்தமான வெவ்வேறு பூக்களைச் சூடிப் பொருதல் வழக்கமா யிருந்தமையின் அவ்வப்பூக்களின் பெயரானே ஒழுக்கத்தையும் கூறினர் தொல்காப்பியர்.

"இரு பெரு வேந்தர் தம்முள் பொருதுவது கருதியக் கால் ஒருவர் மற்றவர் நாட்டிலுள்ள ஆநிரையைக் கவர்தல் குறித்துத் தமது தண்டத் தலைவர், முனைப்புலங் காப்பார்

முதலியோரை ஏவுவர். அன்னோர் படைகளைக் கூட்டி நல்வாய்ப்புள் முதலிய நற்சகுன மொழிகளைக் கேட்டு, ஒற்றறிய வல்லாரை முன்னர் ஏவி, அவர் ஏவியவாறே துப்பறிந்து பின் சென்று நிரை நிற்கும் புலங்களுக்கருகே மறைந் தொழுகிப் பின் ஒய்யெனக் கிளம்பி நிரை காத்தோரைக் கொன்று வீழ்த்தி ஆநிரையை மெத்தனவாய் உடன்கொண்டு தம் நாடு செல்லுவார். செல்லுங்கால் தம்மைத் தொடர்ந்து பொருதவந்தாரைப் பின் அணியத்தார் தாமே நின்று பொருது வீழ்த்த முன் சென்றார் ஆநிரையை இன்புடன் நடத்திச் செல்வார். இங்ஙனம் எதிர்த்தவரை யெல்லாம் மாய்த்தவழி ஆநிரையைத் தம் ஊர்ப்புறத்தே கொண்டுவந்து நிறுத்தி, ஊரிலுள்ளோர்க்கும், இரவலர்க்கும் அவற்றைப் பகுந்துக் கொடுத்துத் தாம் கொண்ட வெற்றிக் கறிகுறியாக உண்டாட்டயர்ந்து களிப்பார். நிரை பறி கொடுத்தோரும் இங்ஙனமே பொருது நிரைமீட்டுப் போதலுமுண்டு. இவ்விரண்டும் வெட்சி யென்றார் தொல்காப்பியர். பிற்றைநாட் போந்தோர் நிரை மீட்டலைக் கரந்தையெனப் பிறிதோர் பெயராற் கூறுவார்.

“ இங்ஙனம் பசுத்திரளைக் கவர்ந்தபின் பெருவேந்தன் நாடுகொள்ளும் உள்ளத்தனாய் நிமித்திகன் நல்லநாளென்று கூறிய நாளிலே தன் குடை, வாள் முதலியவற்றைப் புறப்படச் செய்து, எள்ளுருண்டை, தினைமா, பொரி, அவரை, துவரை, நிணம், குடர், உதிரம் முதலியன நிறைந்த தாழியைக் கொற்றவையின் பொருட்டு முன் எடுத்துச் செல்லப் பின்னர்த் தன் சேனையோடு புறப்பட்டு மாற்றான் தேசத்தின்மீது படையெடுப்பான். அப்போது வீர முரசம் அதிரும்; யானைகள் வீறிடும்; சேனைகள் ஆரவாரஞ் செய்யும். அரசன் தன் சேனைகட்கு வேண்டிய ஆயுதங்களைக் கொடுப்பான். மேலும் தன்படை முழுவதுக்கும் ஒருவனைத்.

தலைவனுக்கித் தன் படைவீரர் யாவரும் அவன் சொற்படியே கேட்டு நடக்குமாறு பணிப்பான். போர் முடிவில் போரில் சிறந்து விளங்கிய வீரர்க்கு ஏனாதி, காவிதி முதலிய சிறப்புப் பட்டங்களைச் சூட்டலுமுண்டு. அரசன் தன் படைவீரரோடு அமர்ந்து உண்டு களித்தலும் வழக்கமாயிருந்தது. அந்நிய நாட்டு அரசன் திறைகொடுக்கச் சம்மதிப்பானாயின் அத் திறையை வாங்கிக்கொண்டு மீண்டுவிடுதலுமுண்டு. அன்றேல் தாபதப் பள்ளிகள் அந்தணர் இல்லங்கள் கோவில்கள் நீங்கலாகப் பகைவர் நாட்டோர்களைச் சுட்டெரித் தழித்தலுமுண்டு தமக்குப் புறங்காட்டி ஓடுவோரைப் போர்வீரர் வெட்டாமல் விடுவார். போரில் புண்பட்ட வீரரை அரசனும் உடன் வீரரும் புகழ்ந்து கொண்டாடுவார். முடிவில் அரசன் தன் வீரருட் சிறந்தாருக்கு முத்தாரம் முதலியன கொடுப்பான். சிலருக்குப் பரம்பரை வாழ்க்கையாக மருதநில ஊர்கள் கொடுப்பதுமுண்டு.

அக்காலத்தில் நன்றாய் அரண் செய்யப்பட்ட கோட்டைகளு மிருந்தன. பகையரசர் இக்கோட்டைகளை எதிர்த்துப் பொருதலுமுண்டு. கோட்டைகள், மலை, காடு நீர் முதலியன இல்லாத உள்நாட்டில் கல், செங்கல் முதலியவற்றா லமைக்கப்பட்ட மதிலாலாக்கப்பட்டிருந்தன. கோட்டைக்கு வெளியே வெகுதூரம் வரை காவற்காடு பரந்திருக்கும். இக் காவற்காடானது வஞ்சனை பலவாய்த்துத் தோட்டி முள் முதலியவற்றால் பதிக்கப்பட்டது. இக் காவற்காட்டை யகன்று சென்றால் மதிலையடுத்து அகன்று ஆழ்ந்த அகழ் உண்டு. இதில் கராக்களும் சுறாக்களும் மிருந்திருக்கும். இதை யடுத்து அமைக்கப்பட்டதே புறமதில். புறமதிலின் மேற்புறம் பல பொறிகள், பதணம், மெய்ப்புழை ஞாயில் முதலியனவமைத்து எழூவும் சீப்பு

முடைய வாயிற் கோபுரமுடைத்து. கோட்டை மதிலில் வேறும் பல யந்திரங்கள் உண்டு. இதற்கு உட்புறத்துள்ளதே உள்மதில். சில கோட்டைகள் மலை அரண், நில அரண் முதலியன சூழ்ந்திருந்தன. மேலிருந்து அம்பு எய்யும் பதுக்கிடங்கள் மதிலகத்தே அமைந்திருக்கும்

"இவ்வாறு காவல் செய்யப்பட்ட கோட்டையைப் பிடிப்பதற்கு எதிர் அரசன் சேனைகளோடு வருவான். சேனைகளுக்குமுன் அரசனின் கொடி செல்லும். போர் தொடங்கும்போது யானைப்படை முன்னும், தேர் குதிரைப் படைகள் அவற்றின் பின்னும், காலாட்படை கடையிலு மாகச் செல்லும். காலாட்கள் மாட்டுத்தோலாற் செய்யப் பட்ட கேடபத்தை இடக்கரத்திலும் ஈட்டி அல்லது கண்ட கோடாலியை வலக்கரத்திலும் தாங்கியிருப்பர். வில்லாளர் இடக்கையில் வில்லையும் முதுகில் அம்பறுத் தூணியை யும் வைத்திருப்பர். ஈட்டிப்போர் விற்போர் செய் வோர்கள் ஒருயார் நீளமுள்ளதும் அகன்றதும் அலகுள்ளது மாகிய வாள் தாங்கி நிற்பர்; குதிரை மறவர் காலாட்களி லும் பார்க்க லேசான ஆயுதங்களையும் குறுகிய பரிசை களையுங் கொண்டு செல்வர். யானைகள் எப்பொழுதும் படையின் பெரும் பகுதியா யிருந்தது. இவ்வகையான மாற்றரசனின் படை கோட்டையை யணுகா முன்னரே கோட்டைமேலிருக்கும் கோட்டைக் காவலர் அம்புமாரி பொழிவார். அவ்வம்புமாரியைக் கிடுகுப் படையாரும், கேடகப் படையாரும் தடுத்தும், தாங்கியும் எதிர்நோக்கிச் சென்று கோட்டையைக் கிட்டுவார். மதில் சூழ்ந்த கிடங் கின் இரு கரையிலும் நின்று பெரும்போர் புரிவார். பெரும் பலகைகளை நீரில் மிதக்கவிட்டு அவற்றின்மீது ஏணிகளைச் சார்த்திக் கோட்டைமீதேறிப் பொருதலுமுண்டு. கோட் டைக் காவலர் கோட்டையின் புறம்போந்து போர் செய்தலு

முண்டு. புறமதிலைக் கைப்பற்றிய பகையரசன் உள் மதிலையும் வளைத்து அவ்வாறே பொருது காவலாளரைக் கோட்டைக்குள் துரத்துவான். உள் மதிலும் பகையரசன் கைப்படவே போர் ஊரின்கண் நிகழும். அப்பொழுது ஊரிலுள்ள கோயிற் புரிசைகளிலும், மதில்களிலும் வீடுகள் மீதும் ஏறி நின்று போர் செய்வார். எதிர்த்து வந்த அரசன் வெற்றி பெறுவனேல் தோற்ற வேந்தன் பெயரால் தான் முடிசூடி மங்கல நீராடித் தன் வாளுக்கும் நீராட்டுச் சடங்கு செய்து, பரந்து நின்ற தன் படையாளரை யெல்லாம் ஒருங்கு கூட்டி, அவரவர்க்குத் தக்க சிறப்புச் செய்தலுமுண்டு. பகைவன் கோட்டையை முழுவதும் அழித்துக் கழுதை ஏரிட்டுழுது, உண்ணா வரகும் வேலும் விதைத்துத் திருப்புவதும் திறை வாங்கித் திரும்புவதும், அன்றேல் தன் ஆணையை அவ்விடத்தும் நிலைநிறுத்துமாறு சில மாதந் தங்கி நாட்டைப் பண்படுத்திச் சீர் செய்துவிட்டுத் திரும்புவதும் வழக்கமா யிருந்தது.

தமிழ் அரசர்கள் தோற்றவர்களிடம் இரக்கமில்லாதிருந்தனர். தோற்ற அரசனுக்குரிய செழிப்புள்ள வயல்களும் சோலைகளும் பாழ் நிலங்களாக்கப்பட்டன. அழகிய அரண்மனைகள் ஆந்தையும் பேயும் வாழிடங்களாக மாற்றப்பட்டன. அவற்றின் பெரிய தூண்கள் மதயானைகள் கட்டும் தறிகளாயின. விசாலித்த மடைப்பள்ளிகள், ஆந்தை மேலே இருந்த லறத்திருடர் கொள்ளை கொண்ட பொருளைப் பங்கிடும் இடங்களாயின. நாட்டிலுள்ளார் நாலு பக்கங்களிலும் ஓடிப் பிழைத்தனர். அழகிய ஓவியந் தீட்டப்பட்ட சுவர்களையுடைய அரண்மனைகள் தரைமட்டமாக்கப்பட்டன.

மதிலகத்தன்றிச் சமவெளி யொன்றில் இடங்குறித்து அங்கே இருபெரு வேந்தர் சேனையும் எதிரூன்றி நின்று

போர் செய்யும் வழக்கமு மிருந்தது. தானை, யானை, குதிரை, தேர் முதலிய நால்வகைப் படையும் அணி வகுத்து நின்று சண்டை செய்யும். அரசனும் சேனையுடன் சென்று உடன் நின்றே போர் செய்வது வழக்கமா யிருந்தது. இப் போரில் சேனைத் தலைவர் காட்டும் வீரம் வியக்கத்தக்கது. தன் சேனை முரிந்தோடும் சமயமா யிருப்பின் சேனைத் தலைவன் தானே சேனைக்கு முன்னின்று எதிரி படை முழு வதையும் தானே தாங்கித் தடுத்து நின்று தன் படை யாளரை உற்சாகப்படுத்திச் சண்டைக்குத் தூண்டுவான். தன் அரசனை மாற்றான் படைசூழக் காணின் யாண்டிருந் தும் படைத் தலைவர் ஓடோடியும் வந்து அவனை விடுவிப் பார். இருபுறமும் வாட்போரும் மற்போரும் வீரத் துடன் நடைபெறும். இவ்வாறுய சண்டையில் இருதிறத் தாரும் ஒக்க மடிதலுமுண்டு. சண்டை செய்யும் இரு வேந்தரும் மடிவரேல் அவர் மனைவியர் தீப்புகுவதும் வழக் கமா யிருந்தது.

மாற்றார்மீது போர் தொடங்கும்போது, ஆனையை அந்தணர் குழந்தை பெண் முதலியோரைப் போர் நிலத்தினின்றும் விலகுமாறு அறிவுறுத்தி அன்னார் அவணிருந்து விலகிய பின்னர் அம்புமாரி சொரிவது தமிழ் வீரர்களது வழக்காயிருந்தது.

இதனை,

" ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடையீரும் பேணித்
தென்புல வாழ் நர்க் கருங்கடன் இறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்

எம்மப்பு கடிதுவிடுதும் நும்மரண் சேர்மின்என
அறத்தாறு நுவலும் பூட்கை"

எனவரூஉம் புறப்பாட்டானறிக.

" வெட்சி நிரைகவர்தன் மீட்டல் கரந்தையாம்
வட்கார்மேற் செல்வது வஞ்சியா—முட்கா
ரெதிரூன்றல் காஞ்சி யெயில் காத்த னொச்சி
யது வளைத்தலாகு முழிஞை—யதிரப்
பொருவது தும்பையாம் போர்க்களத்து மிக்கோர்
செருவென்றது வாகையாம்"

(பிங்கலம்.)

## வீரக்கல்

போரில் எவராயினும் மதிக்கப்படும் வீரனாய் விளங்கி யுயிர் விட்டவனை எக்காலமும் ஞாபகப் படுத்துமாறு அக் காலத்தவர் செய்திருந்த ஏற்பாடுகளும் உள்ளன. வீரர் அக்காலத்து அதிகமாய் மதிக்கப்பட்டு வந்தனர். வீரச் செயல்களில் விளங்கிய வீரரை எக்காலமும் ஞாபகப் படுத்தும் சாதனங்களை ஏற்படுத்துவதும் வழக்கமாயிருந்தது. இறந்த வீரனை நினைவுகூர்தற்காக கற்றூணை நிறுத்தி அதில் அவ்வீரனின் பெயரையும் அவன் செய்த வீரச் செயல்களை யும் வெட்டி அக் கல்லுக்கு நீராட்டி, எண்ணெயைப் பூசி, அதில் அம்மறவனையே தெய்வமாக நாட்டிச் சிறப்புச் செய்து அவனைத் தெய்வமாக வணங்கியதோடும் அமையாமல் அக் கல்லுக்குக் கோயிலமைத்து மதில், வாயில் முதலியன கட்டி ஆலயங்களாக்கி அவ்வீரனைப் போற்றியும் வந்தனர்.

" என்னைமுன் நில்லன்மின் றெவ்விர் பலரென்னை
முன்னின்று கன்னின் றவர் " (குறள்.)

இரண்டாயிர மாண்டுகட்கு முன்னரே தம் வீரரை ஞாபகப்படுத்துமாறு இங்ஙனம் கல் நட்டுப் பேர் பொறித்து வைத்த நம்முன்னோர் தன்மை எக்காலத்தும் அதிசயிக்கத் தக்கதாகவே யிருக்கின்றது.

## இயற்றமிழ்

" தமிழ் இயல், இசை, நாடகம் என்னும் முத்திறத்தின தாய் தொன்று தொட்டு வழங்குகின்றது." இயற்றமிழென்பது தமிழர்யாவர் மாட்டும் பொதுமையின் உலகவழக்கு செய்யுள் வழக்கு என்னும் இருவகை வழக்கினும் இயங்குகின்ற வசனமுஞ் செய்யுளுமாகிய நூல்களின் றொகுதியாம். இதனுள் இலக்கணங்களும் இலக்கியங்களும் அடங்கும். சங்கச் செய்யுள்களும், உரைகளும், புராணம் முதலிய ஏனைய நூல்களும் இயற்றமிழேயாம். இயற்றமிழ் ஏனை இசைத் தமிழ் நாடகத்தமிழ் ஆகிய இரண்டற்கும் முன்னர்த் தோன்றினமைபற்றி முதற்கண் வைக்கப்பட்டதாகும். ஏனைய இரண்டும் இயற்றமிழின்றி இயங்கும் வன்மை யுடையன வல்ல.

"இயற்றமிழினுள்ளே எழுத்துச் சொல்பொருள் யாப்பு அணிகளும், இசைத் தமிழினுள்ளே ஏழு சுரங்களும் அவற்றிற் பிறக்கும் பண்களின் வகையும் பிறவும், நாடகத் தமிழினுள்ளே கூத்து விகற்பமும் அபிநய விகற்பமும் கூத்திய லிலக்கணமும் அரங்கிலக்கணமும் பிறவும் விளக்கப் பட்டனவாம்.

(பாலாமிர்தம்—சிவப்பிரகாச பண்டிதர்.)

"வழக்கியலும் வழக்கியலாற் செய்யப்பட்ட செய்யுளி யலும் பற்றி யெழுந்த இலக்கணம் இயற்றமி ழெனப்படும். அச் செய்யுளின் இன்றியமையாத இசை இசையிலக்கண மெனப் பெயரெய்தி அவ்வியற்றமிழ்ப் பின்னர் வைக்கப் பட்ட தெனப்படும்; இவ்விரண்டன் வழி நிகழ்த்துங் கூத் திலக்கணமாகிய நாடகத் தமிழ் அவற்றுட் பின்னர்த் தாமெனமுறைமை கூறுதலும்."

(பேராசிரியர் உரை.)

## இசைத்தமிழ்

"இயற்றமிழ் பண்ணோடு கலந்து தாளத்தோடு நடை பெறின் இசைத்தமிழாம்." ஓர்கால் தமிழகத்து இசைக் கல்வி மிக உன்னத நிலை அடைந்திருந்த தென்பதை பழைய நூல்கள் உணர்த்துகின்றன. அகத்தியர் இராவணனைக் கந்தருவத்தாற் பிணித்த வரலாறும் இதற்குச் சான்றாகும். இராவணனின் இசைக்கு உவந்து இறைவன் நீண்ட ஆயுளும் வாளும் அளித்தான்.

"இனி இசைத்தமிழ் நூலாகிய பெருநாரை பெருங் குருகும் பிறவும் தேவ விருடி * நாரதன் செய்த பஞ்சபார தீயம் முதலாயுள்ள தொன்னூல்கள் இறந்தன. நாடகத் தமிழ் நூல்களாகிய பரதம், அகத்தியம் முதலாயுள்ள தொன்னூல்களு மிறந்தன. பின்னர் முறுவல் சயந்தம் குணநூல் செயிற்றியம் என்பவற்றுள்ளும் ஒரு சார் சூத் திரங்கள் நடக்கின்ற அத்துணையல்லது முதல் நடு இறுதி காணாமையின் அவையும் இறந்தனபோலும். இறக்கவரும் பெருங்கல முதலிய பிறவுமாம். இவற்றுட் பெருங்கல மாவது பேரியாழ்; அதுகோட்டின தளவு பன்னிரு

* நாரத கீதக கேள்வி நுனித்து (பெருங் கதை).

சாணும், வணரளவுசாணும், பத்தரளவு பன்னிருசாணும், இப்பெற்றிக்கேற்ற ஆணிகளும், திவவும், உந்தியும் பெற்று, ஆயிரங்கோல் தொடுத்தியல்வது; என்னை......... "தலை முதலூழியிற்றனவர் தருக்கப், புலமகளாளர் புரிநரப் பாயிரம், வலிபெறத் தொடுத்த வாக்கமை பேரியாழ்ச், செலவு முறை யெல்லாஞ் செய்கையிற் றெரிந்து, மற்றை யாழுங்கற்று முறையிற் பிழையான்" எனக் கதையினுள்ளும் கூறினாராகலாற் பேரியாழ் முதலியனவும் இறந்தன வெனக் கொள்க. "இனித் தேவ விருடியாகிய குறுமுனி பாற்கேட்ட மாணக்கர் பன்னிருவருட் சிகண்டியென்னும் அருந்தவமுனி, இடைச் சங்கத்து அநாகுல னென்னும் தெய்வ பாண்டியன், தேரோடு விசும்பு செல்வோன் திலோத்தமை என்னும் தெய்வ மகளைக் கண்டு தேரிற் கூடினவிடத்துச் சனித்தானைத் தேவரும் முனிவரும் சரியா நிற்கத் தோன்றினமையிற் சார குமரனென அப்பெயர் பெற்ற குமாரன் இசையறிதற்குச் செய்த இசை நுணுக்கமும், பாரசமுனிவரில் யாமளேந்திரர் செய்த இந்திர காளியமும், அறிவனார் செய்த பஞ்ச மரபும், ஆதிவாயிலார் செய்த பரத சேனாபதீயமும், கடைச்சங்க பாண்டியருட் கவியரங்கேறிய பாண்டியன்மதி வாணனார் செய்த முதனூல்களிலுள்ள வசைக் கூத்திற்கு மறுதலையாகிய புறக் கூத்தியன்ற மதிவாணனார் நாடகத்தமிழுமென இவ்வைந்தும் இந்நாடகக் காப்பியக் கருத்தறிந்த நூல்களன்றேனும் ஒரு புடை யொப்புமை கொண்டு முடித்தலைக் கருதிற்று இவ்வுரையெனக் கொள்க" என்னும் அடியார்க்கு நல்லார் உரையால் முற்காலத்து விளங்கிய இசைநாடக நூல்கள் சிலவற்றை அறிகின்றோம்.

தமிழுக்குரிய ஏழிசைகளின் பெயர் குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன. இவ்விசை

களின் ஓசைக் குவமை, வண்டு, கிளி, குதிரை, யானை, குயில், தேனு, ஆடு. இவற்றின் எழுத்தாவன: ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ. இசைகளின் சுவைக்குவமை தேன், தயிர், நெய், ஏலம், வாழைக்கனி, மாதுளங் கனி.

"பாலை குறிஞ்சி மருதம் செவ்வளி என்னும் பண்களை யாவது, அரதாளி, மருள், குச்சரி, குறண்டி, சாதாரி முதலிய திறன்களையாவது இன்னதென்று பாடுவோர் இக் காலத்து எத்துணையர் உளர்? பண் என்பது பண் பண்ணிய மென இரண்டாகவும், திறன் என்பது திறன், திறத்திறன் என இரண்டாகவும் பகுக்கப்பட்டிருந்தன. அவையெல்லாம் இப்பொழுது ராகம் என்னும் பெயரைப் பெற்றுள்ளன. செம்பாலைப் பண்ணென்று முன்னோர் கூறியது இக்காலத்துச் சங்கராபரணப் பெயரோடு வழங்குகின்றது. சாதாரி என்று அக்காலத்திற் சொல்லப்பட்டது நீலாம்புரி என்று வழங்குகின்றது. இவ்வாறு பழைய பண்ணுந் திறனுந் தம் பெயரை யிழந்து ஏழிசையின் பெயர்களாகிய குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்றிருந்தன மாறி சட்சம் முதல் நிடாதம் வரையிலுள்ள சமஸ்கிருதப் பெயர்களைப் பெற்று ச, ரி, க, ம, ப, த, நி என்று வழங்குகின்றன." (தமிழ் வரலாறு.)

"குறவஞ்சி பள்ளு சிந்து முதலிய பிற்காலப் பிரபந்தங்களும் இசையைச் சேர்ந்தனவே. இசைத் தமிழ் நூல்கள் இவ்வளவு இருந்தன வென்பதனால் அக்காலத்தில் இருந்த இசையமைப்பின் விரிவுணரப்படும். சிலப்பதிகாரம் முதலியவற்றால் இசையைப்பற்றித் தெரிந்தவைகளிற் சில கூறுவேன்.

## இசை வகை.

இசையில் பண்களென்றும் திறங்களென்றும் இரு வகை உண்டு. பண்கள் 7 நரம்புகளுங் கொண்டன. நரம்பு

என்பது இங்கே ஸ்வரம். ஏழு ஸ்வரமும் கொண்டவை சம்பூர்ண ராகம். அதுவே பண்ணும். வடமொழியில் மேளகர்த்தாவென்று கூறப்படுவதும் அஃதே. ஏழு ஸ்வரங்கள் வடமொழியில் ஷட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்யமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்று கூறப்படும். அவற்றையே, தமிழில் குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என வழங்குவர். யாவருக்கும் இயல்பான குரல் ஷட்ஜம் ஆகும். அதனைக் குரலென்றே வழங்கிய பெயரமைதி வியக்கற்பாலது. ஏழு ஸ்வரங்களுக்கும் ச, ரி, க, ம, ப, த, நி என்று இப்பொழுது பயிலப்படும் எழுத்துக்களைப் போலவே தமிழ் முறையில் ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்ற ஏழு நெடிலையும் ஸ்வரங்களுக்கு எழுத்துக்களாகக் கொண்டு பயின்றனர்.

இந்த ஏழு நரம்புகளும் நிறைந்த ராகம் பண்ணென்று முன்னரே சொன்னேன். ஜனக ராகமென்பதும் அதுவே அப்பண்களிலிருந்து திறங்கள் பிறக்கும். அவை இப்போது ஜன்ய ராகங்களென்று வழங்கப்படும். 'நிறைநரம் பிற்றே திறமெனப் படுமே' என்ற திவாகர சூத்திரத்தால் பண்கள், திறங்கள் முதலியவற்றின் இலக்கணம் விளங்கும். பண்ணுகளுக்கு இனமாகத் திறங்கள் கூறப்படும். யாப்பிலக்கணத் திற் "பண்ணுந் திறமும் போற் பாவுமினமு மாய், வண்ண விகற்ப வகைமையால்—பண்ணின், திறம் விளரிக் கில்லதுபோற் செப்பலகவ, லிசைமருட்கு மில்லை யினம்" என்று காணப்படும் இலக்கணத்தில் இது விளக்கப் பட்டிருத்தல் காண்க.

இப்படிப் பிறக்கும் பண்ணுந் திறமுமாம் இசை வகைகள் ஒரு வழியிற் றொகுக்கப்பட்டு 11,991 என்று கூறப்படுகின்றன. பண்கள் பலவகைப்படும். குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம் எனப் பெரும் பண்கள் ஐந்து. இவைகளின்

வகையாகும் பண்கள் பல. இவைகளுள் பகற் பண்கள் முதலியவையும், அவ்வப்பொழுதிற் கமைந்த பண்களும், யாமங்களுக் குரியனவும், சுவைகட் குரியனவும் வணங்குதற் குரியனவுமெனப் பலவகையுண்டு. புறநீர்மை முதலிய பன்னிரண்டு பண்கள் பகற்பண்களெனப்படும். தக்க ராக முதலிய ஒன்பது பண்களும் இராப்பண்களென்பர். செவ்வழி முதல் மூன்றும் பொதுப்பண்களாம். காலைக்குரிய பண் மருதம், மாலைக்குரியது செவ்வழி என்பாரு முளர். இந்தப் பண்களால் இசைவல்லோர்கள் சில குறிப்பினை அறிவிப்பதுண்டு. ஒருவர் தம் நண்பனை மாலையில வர வேண்டி மாலைப் பண்ணைப் பாடினுரென்று ஒரிடத்தில் தெரிவிக்கப்பட்டிருக்கின்றது.

"இரங்கற்பண் விளரி. அதைப் பாடிப் பிறர்பால் இரக்கம் உண்டாக்கினுர்கள். பரமசிவனுல் கைலையின் கீழ் அமிழ்த்தப்பட்ட இராவணன் அவருக்கு இரக்க முண்டாக விளரியைப் பாடினுன் என்ற பொருள்பட "விராய் மலர்ப்பூங்குழலிபாகன் மகிழ் விளுேங்கும் வெள்ளி மாலைக் கீழ்க் கிடந்து விளரி பாடும், இராவணனுர்" என்று ஒரு கவி பாடியுள்ளார். இச் செய்யுட் பகுதி விளரி இரங்கற் பண் என்பதை நன்கு தெரிவிப்பது காண்க. பாடுங்கால் இவ்விலக்கணங்களோடு பாடவேண்டும் என்ற விஷயங்களை மிக விரிவாக இசை நூல்கள் கூறும். குற்றம் சில வகைப் படும். இக் குற்றங்கள் பாடுவோர்பால் இருத்தல் கூடா வென விலக்கியும் நூல்கள் கூறும்.

டாக்டர் (உ. வே. சாமிநாதய்யர்
—மஹா மஹோ உபாத்தியாயர்)

ஆரியப்பிராமணருடைய ஆதிக்கத்தால் தமிழர்க்குரிய பண்கள் நாளேற நாளேறப் பயில்வாரற்று மங்கிப்போகவே

வடதிசை யிராகங்கள் வளர்ந்தோங்கி எங்கும் வழங்கத் தலைப்பட்டன. பழைய பண்கள் ஓய்ந்த காலம் இன்ன தென்று குறிப்பிடல் அசாத்திய மாயினும் மாணிக்கவாசகர் காலத்தே அவை மங்கியிருக்கத் துவங்கி யிருக்கலாமென்றும், திருவிசைப்பா காலமாகிய கிறிஸ்தாப்தம் 10-அல்லது-11-ம் நூற்றுண்டில் தேவதாஸ் தோத்திரங்களுக்கு மாத்திரம் அர்ஹமாக ஒதுங்கியிருக்க வேண்டுமென்றும் எண்ணுதல் பழுதாகாது. அஃது எப்படி ஆயினுமாகுக. இப்போது நம் நாட்டில் பரவும் பூபாளம், மாளவி, பங்காளம், காம்போதி, கல்யாணி, காந்தாரி முதலிய இராகங்கள் தங்கள் பெயராலேயே தங்கள் பிறப்பிடம் உணர்த்துகின்றன. இக் காலத்து வழங்கும் மற்ற இராகங்களும் அப்படியே புறநாட்டு வரமென்று நிரூபித்தல் அரிதன்று. இங்ஙனம் இசைகள் மாறவே புதிய வடதேசத்து இராகங்களில் அமைந்த சிற்சில பதம் கீர்த்தனை இவற்றுட் கலக்கக் கலக்க பழைய ஆட்டம் பாட்டு வடிவாய்த் தமிழ் நாடக நூல்களுந் நடப்பவாயின.

(நாடகத் தமிழ் ஆராய்ச்சி—இலக்குமி.)

"No one can now say what these pans and dances were like. Their places were gradually taken up by the Indo-Aryan Ragams and Natyams." (Tamil Studies.)

## இசைக்கருவிகள்

இசைக்கருவிகள் ஐந்து. அவை தோற்கருவி, துளைக் கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி என்பன. தோற்கருவிகளாவன பேரிகை, படகம், இடக்கை, உடுக்கை, மத்தளம், சல்லிகை, கரடிகை, திமிலை, குட

முழா, தக்கை, கணப்பறை, தமருகம், தண்ணுமை, தடாரி, அந்தரி, முழவு, சந்திரவளையம், மொந்தை, முரசு, கண்விடு தூம்பு, நிசாளம், துடுமை, சிறுபறை, அடக்கம், தகுணிச்சம், விரலேறு, பாகம், உபாங்கம், நாழிகைப்பறை, துடிபெரும்பறை என்பன.

மத்தளம்—மத்து ஓசைப் பெயர்; இசையினாலாகிய கருவிகட்கெல்லாம் தளமாதலால் மத்தளம் என்னும் பெயராயிற்று. சல்லிகை யென்பது சல்லென்ற ஓசை யுடைத்தாதலாற் பெற்ற பெயர். ஆவஞ்சி யெனினும், குடுக்கை யெனினும், இடக்கை யெனினும் ஒக்கும்; அதற்கு ஆவினுடைய வஞ்சித்தோலைப் போர்த்தலால் வஞ்சியென்று பெயராயிற்று; குடுக்கையாக வளைத்தலாற் குடுக்கை யென்று பெயராயிற்று; வினைக்கிரியைகள் இடக்கையாற் செய்தலின் இடக்கை யென்று பெயராயிற்று; கரடி கத்தினாற்போலும் ஓசையுடைத்தாதலாற் கரடிகையென்று பெயராயிற்று.

(அடியார்க்கு நல்லார்.)

"தக்கை தண்ணுமை தாளம் வீணை
தகுணிச் சங்கிணை சல்லரி
கொக்கரை குடமுழ வினோ டிசை
கூடிப்பாடி நின்றாடுவீர்."

(சுந்தரர்—தே.)

துளைக்கருவி—குழல். நரம்புக்கருவிகள் ஆதியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ் முதலிய நால் வகை யாழ்களுமாம். இவற்றுள் ஆதியாழுக்கு ஆயிரம் நரம்பும், பேரியாழுக்கு இருபத்தொன்றும், மகரயாழுக்குப் பத்தொன்பதும், சகோடயாழுக்குப் பதினான்கும், செங்

கோட்டியாழுக்கு எழுமாம். வீணை வடதிசையாரியர் தென்னாட்டுக்குக் கொண்டுவந்ததோர் இசைக்கருவி. யாழ் வகையில் ஒன்றேனும் இக்காலத்திற் காணப்படவில்லை. யாழுக்கு வேண்டிய மாட்டு நரம்புகளை நந்தனார் வமிசத்தார் கொடுப்பார் என்று பெரிய புராணத்திற் சொல்லப்படுகிறது. யாழ் கை விரல்களினால் தடவி ஒலிக்கப் பெறும்.

## நாடகத் தமிழ்

"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்—பாடல் சான்ற புலனெறி வழக்கம்" என்னும் "தொல்காப்பியச் சூத்திரம் அக்காலம் நாடக நூல்கள் மிக்கு வழங்கினவென்பதை விளக்குகின்றது. சிலப்பதிகாரம் அரங்கேற்று காதையானும் அதற்கு அடியார்க்கு நல்லார் எழுதிய உரையானும் பழய இசை நாடகங்களைக் குறித்த பல அரிய செய்திகள் அறியக் கிடக்கின்றன. நாடகத் தமிழ் அழிநிலை எய்திய இக்காலத்து பண்டைய நாடகச் சிறப்பினை முற்ற உணர்த்தும் நூல்கள் கிடைத்தில.

"நாடக வழக்காவது, சுவைபட வருவனவெல்லாம் ஓரிடத்து வந்தனவாகத் தொகுத்துக் கூறுதல்; அஃதாவது செல்வத்தானும், குலத்தானும், ஒழுக்கத்தானும், அன்பினானும் ஒத்த இருவராய்த் தமரின் நீங்கித் தனியிடத்து எதிர்ப்பட்டார் எனவும், அவ்வழிக் கொடுப்போரும் அடுப்போருமின்றி வேட்கை மிகுதியாற் புணர்ந்தாரெனவும், பின்னும் அவர்கள் களவொழுக்கம் நடத்தி இலக்கண வகையான் வரைந்தெய்தினார் எனவும் பிறவும் இந் நிகரனவாகிச் சுவைப்பட வருவனவெல்லாம் ஒருங்கு வந்தனவாகக் கூறுதல்.

(இளம்பூரணவடிகள்)

"தமிழ் நாடகம் முதலிலுண்டானது மத விடயமாகவே யென்பது துணியப்படும். அது கடவுளர் திருவிழாக்காலங்களில் ஆடல் பாடல்களிரண்டையுஞ் சேர நிகழ்த்துவதினின்றும் உண்டாயிற்று. சில காலத்தின் பின்னர்க் கதை நடையான மனப்பாடங்களும் உடன் கூடின; அதன்மேல் முதலிற் பாடலாயுள்ள சம்பாஷணைகளும் அவற்றுடன் சேர்க்கப்பட்டன. பிற்பாடு நாடகத் தமிழ் வேத்தியல் பொதுவியல் என்ற பிரிவினதாகி அரசர்களாலும் ஏனையோராலும் ஆதரித்து வளர்க்கப்பட்டது. கி. மு. மூன்றாம் நூற்றாண்டிறுதல் அல்லாக்கால் அதனினுஞ் சற்று முற்காலத்திறுதல் நாடகத் தமிழ் உயர்நிலை பெற்றிருத்தல் வேண்டும். நாமுணர்ந்துள பழமையான நாடகத் தமிழ் நூல்கள் அனைத்தும் அக்காலத்தே நின்று நிலவின வாதலினென்க. ஆகவே அது குற்றங் குறைவு இல்லாது உண்டான தொழிலென்றே ஆதியில் மதிக்கப்பட்டது. இனி நாடகத் தமிழ் உயர்நிலை வீழ்நிலை அழிநிலை என்ற மூன்றுவகை நிலையும் அடைந்து உருக் குலைந்து போன பின்னரேயாம் அதனைக் கண்ணுறுகின்றனம்.

(நாடக வியல்)

"நாடகமெனப் பொதுப்பெயர் கூறத்தகுந்தபொழுது போக்கிலிருந்துதான் பல்வேறு ரூபமான எல்லா 'நற்கலை' (Fine arts) களும் பிறப்பனவாயினும், பாட்டும் பண்ணும் ஆட்டமுமாகிய மூன்றும் அதனின்றும் நேரே உற்பவிக்கின்றன. கால விளம்பரத்தாலும் நாகரிகத் தேர்ச்சியாலும் பாவனையில் நடத்திக்காட்டும் தொழில்களை நன்கு விளக்கத் தக்க வசனங்களைக் காதுக்கினிமைபெறக் கோத்து மொழிதலும், கண்ணுக்கினிமைபெறக் கரசரணாதி அவயவங்களாலும் முகக்குறிகளாலும் அபிநயித்துக்காட்டலும், வழக்

கத்தில் வரவே, பாட்டும் அதனுடன் புணர்ந்த பண்ணும் அவையிரண்டுடன் கலந்த ஆட்டமும் தனித்தனி பிறப்பன வாயின. பாட்டின் சீர், இசை, தளை, அடி முதலியவற்றை யும் அப் பாட்டால் விளங்கும் நவரசங்களையும் மாத்திரம் கவனித்து அபிவிருத்தி பண்ணினால் அது வித்துவத்ஜன பூஜித மான காவ்யம் என்னுஞ் சிறப்புப்பெயர் பெற்று நிற்கும். அப்படியே பண்ணை மாத்திரம் விசேடமாகக் கவனித்துச் சொற்கோத்தல் சங்கீதமெனத் தனித்து வளரும். ஆட்டமே அவ்வாறே சில சாதியாருள்ளும் தனிப்படத் தழைத்த தேனும் முன்னவை யிரண்டுங் கலந்து வழங்கலே பெரும் பான்மை. அங்ஙனங் கலந்து வழங்கும்போது நாடகமென ஓர் சிறப்புப் பெயர் கூறுதல் வழக்கம்.

"நமது தமிழ் நாட்டிலும் இம் முறையே இம் மூன்று நற்கலைகளும் தொன்றுதொட்டு ஏற்பட்டு வந்தமைபற்றியே தமிழை, இயல், இசை, நாடகம் என்று மூன்று வகையாக முன்னோர் வகுத்தனர். இம் மூன்றும் நாளாக நாளாக வேறு வேறு உருக்கொண்டு மாறுபாடு அடைந்துள்ள வென்பது யாவருக்குந் தெரிந்த விஷயம். காவ்யம் அடைந் திருக்கும் ஒரு சிறு விகற்பம் பத்துப்பாட்டையாவது கலித் தொகையையாவது இப்பொழுது வழங்கும் கம்பர் இராமா யணத்தோடோ பிரபுலிங்க லீலையோடோ ஒப்பிடுங்கால் விளங்காதிராது. அவ்வாறே இப்போது போக்கியமாக வழங்கும் தேவாரப் பண்ணோடு தோடி பைரவி என்னும் இராகங்களில் ஆக்கப்பட்டுள்ள முத்துத்தாண்டவர் கீர்த் தனங்களை ஒப்பிடுங்கால் இசைத்தமிழ் அடைந்திருக்கும் வேற்றுமை தெரியலாகும். முன்னோர் கேட்டு மகிழ்ந்த இசைகளும் அவற்றைத் துத்தி வாத்தியங்களிற் காட்டிய இசைக்கருவிகளும் பெரும்பாலும் மாய்ந்து போயின வென்றே சொல்லலாம். 'இன்னிசை வீணையர் யாழினர்

ஒருபால்' என்ற திருவாசகத்தாலேயே இக்காலத்தில் வழங்கும் வீணையன்று சிலப்பதிகாரம் முதலிய பழைய நூல்களில் நமது மனத்துக்கு எளிதில் வாராவண்ணம் வர்ணிக்கப்பட்டிருக்கும் யாழென்பது வெளிப்படையாகும். யாழ் திராவிடர்க் குரியதும் வீணை வடதிசை ஆரியர் தென்திசைக்குக் கொண்டு வந்த புதியதோர் இசைக் கருவியுமாம். இங்ஙனம் தமிழ் இசைகளும் மாண்டுபோன வண்ணமே தமிழ் நாடகங்களும் பல்வாறு வேற்றுமைப்பட்டு அதனதி வடிவம் இன்னதென்று ஊகித்தல் அருமையாம் படி இறந்து போயினதாகக் காணப்படுகின்றது.

"இப்போது தமிழில் வழங்கிவரும் நாடகங்கள்யாவும் அருணசலக் கவிராயர் இயற்றிய இராம நாடகத்தைப் பின் றொடர்ந்தனவா யிருப்பதினாலும் கீர்த்தனைச் சாயை பழைய நூல்களிற் காணமையாலும் பூர்வீக நாடக மென்று நிச்சயிக்கத்தக்கது யாதொன்றும் இதுவரை வெளிப்படாமையானும், தமிழ் மொழிக்கே யுரித்தான யாதேனும் நாடகம் இருந்தது தானும் உண்டோ என்று சிலர் ஐயுறல் இயல்பேயாம். ஆனால் அதைப் போலவே சந்தேகிப்பதற்கு முதற்காரணம் நாடகமென்பது வடமொழியிலும் ஆங்கிலேயத்திலும் நாம் கண்டு பழகும் நாடகத்துக்கே பெயராயிருத்தல் வேண்டுமென்னும் மயக்கமெனத் தோன்றுகின்றது.............. * நாடகமென்னும் வடமொழிக்குச் சரியான தென்மொழி கூத்து என்பதே. திவாகரத்தின் படி கூத்தின் மறுபெயர்கள் "நடமே நாடகங் கண்ணுணட்டம் படிகமாட ருண்டவம் பரத—மாலுத றாங்கல் வாணி

* நாடகம் என்னும் சொல் வடமொழி யென்பதற்கு ஆதாரம் இல்லை. தொல்காப்பியம முதலிய பழய நூல்களில் நாடகம் என்னும் சொல் பயின்று வந்திருக்கின்றது. நட, நடி முதலிய தமிழ மூலங்களை நோக்குவார் நாடகம் வட சொல்லெனக் கூற ஒருப்படார்.

குரவை யியல் நிலைய நிருத்தம்.'' முதலியனவாம். ஆதலால் தமிழர் கூத்து நாடகமென்று சிறப்பித்துக் கொண்டவை யனைத்தும் ஆடலோடமைந்தவையாக இருந்திருக்க வேண்டு மென்று கொள்ளுதல் தவறாகாது. மேளதாளங்களுக் கிசையுமாறு யாதேனு மொரு பாவினத்தில் கதையை யமைத்து அந்தக் கதையைப் பாடலோடோதி அபி நயித்தலே ஆதிகாலத் தமிழ் நாடக ரீதியென்று பல காரணங்களாலு மெண்ணுதற் கிடமுண்டு. அவ்வித ஆடல் விகற்பங்கள் எண்ணிறந்தன என்பதற்குப் பழைய காவியங்களுட்காணும்மாயாடல், சிவனாடல், குமரனாடல் இந்திராணியாடல், துர்க்கையாடல், சத்தமாதராடல், காம னாடல், வேலனாடல், வெறியாடல் பிசாசுக் கைக்கூத்துக் குரவைக்கூத்து என்பன ஆதியான மொழிகளே சாட்சியாக நிற்கும் 'மலடி மைந்தனுக்கு மாலை சூட்டல்' போல இல் லாத நாடகத்துக்கு இத்தனை பெயர் வகித்தல் இயல்பன்று. மேலும் மேற்கூறிய கூத்து வகைகள் பற் பல காரணச் சேர்க்கையால் தமிழ் நாட்டில் மாய்ந்து போயிருப்பினும் அழிந்தவைகட் கெல்லாம் அபயப் பிரதானங் கொடுத்து ஆதரிக்கும் எல்லைபோல விளங்குகின்ற மலையாளத்துள் பல கிராமாந்தரங்களில் இன்னும் வழங்குகிற ஐவர்களி, பரிசைகளி, ஓட்டத்துள்ளல் முதலான பல வேறு ஆடற் கதைகளைக் காண்பவர்க்குத் தமிழ் நாடு முழுவதும் பூர்வத் தில் வழங்கி வந்த நாடக விகற்பங்கள் இத்தன்மைய வென்று ஊகித்தல் ஒருவாறு கூடியதாகவே யிருக் கின்றது. ஆட்டக் கதை யென்பது மலையாளத்தில் நாடகங்களின் பெயராகவு மிருக்கின்றது. குறத்திப் பாட்டு உழத்திப் பாட்டு முதலிய பழைய பிரபந்த ரீதி யாய்ப் பாடி யாடும் பாவிகற்பங்கள் இன்னும் அநந்தம். தமிழ் நாட்டிலும் வில்லடிப் பாட்டு, உடுக்குப் பாட்டு

முதலியன ஆட்டத்தோடு கதை விரித்தலுக்கே உரித்தானவை கொண்டிச் சிந்து முதலிய பல விகற்பங்களும் பற்பல தாழிசைகளும் ஆடலுக்கு மிக ஏற்றன, ஆதலால் பழைய நாடகங்கள் வில்லுப் பாட்டு துள்ளற் பாட்டு முதலியவை போல ஒருவர் தனியாயேனும், கும்மிப் பாட்டு பரிசைகளி முதலியன போலப் பலர் கூடியேனும் ஒரு கதையைத் தாள மேளங்களுடன் பாடி அபிநயித்துக் கூறும் ஒருவகைப் பாட்டாக இருந்திருக்கவேண்டுமென்று நிர்ணயிக்கவேண்டும்.

"அப்படியானல் தமிழ் நாடகங்கள் யாதொன்றும் இப்போது காணக் கிடையாமைக்கு விசேட காரணந் தேடவேண்டியதற் கவசியமில்லை.

படித்தறிந்து வியத்தலையே பயனாகக் கொண்ட பழைய இயற்றமிழ்க் காவியங்களுக்குள் இக்காலம் நமக் கெட்டினவை எத்தனை, இருந்த விடமே தெரியாது இறந்து போனவை எத்தனை எனக், கணக்கிடுவோமாகில் இப்போது சீவிக்கிற மனிதர்களையும் இறந்தோரையும் 'எண்ணிக் கொண்டற்று' என வன்றோ மதிக்கத்தக்கதாக விருக்கின்றது. படித்த மாத்திரத்தில் நவரசானுபவந்தரத்தக்க இயற்றமிழினது கதி இங்ஙனமாயின் ஆடிக்கண்டாலொழிய இன்பம் பயவாத நாடகப்பாட்டுகள் கால விளம்பரத்தில் அழிந்து போனது ஒரு அதிசயமா? மதாபிமானத்தால் ஆழ்வார் அருளிச் செய்த திருவாய் மொழியும் மூவர் தேவாரங்களும் ஒருவாறு அவற்றின் பண்ணும் பிற்காலத்தார் அறியும்படி நிலை நில்லாவிடில் பழைய இசைத் தமிழும் இவ்வாறே உண்டாயிருந்ததோ இல்லையோ என்னும் சந்தேகத்துக் கன்றோ இடந் தருவதாக நிற்கும்? சுத்தவித்தியா விஷயமான அபிமானம் நீங்கிக் கேவலம் சமயச் சச்சரவுகளால் மூடப்பட்ட இடைக்காலத்தில், இயற்றமிழ்க்

காவியத் தலைமை பெற்ற சிந்தாமணி சிலப்பதிகாரம் முதலிய நூல்களே தப்பினது தாலிப்பாக்கியமாய் இருக்குமானால், கான விஷயங்களாகிய இசைத்தமிழ் நூல்களும் ஆட்டப் பாட்டான நாடக நூல்களும் மண்ணுற மாண்டு போனமை சற்றுமே ஒரு ஆச்சரியமா? இசைத்தமிழும் நாடகத் தமிழும் தம்முள் நெருங்கிய சம்பந்தமுடையவைடாக எக்காலமுமிருக்க வேண்டுமென்பது எளிதிற் றுணியத் தக்கதே.

"துவக்கத்தில் புதியன சிறுபான்மையும் பழைய சிந்து தாழிசை முதலியன மிகுதியாக விருந்திருக்க வேண்டும். காலஞ் செல்லச் செல்லப் பழையன குறைந்தும் புதிய கீர்த்தனங்கள் மிகுந்தும் வந்தன. அருணசலக் கவிராயர் இராம நாடகத்திலும் குற்றாலக் குறவஞ்சி முதலிய பழமை பற்றிய நாடக வியல்களிலும், இவை இரண்டு வகைப்பட்ட ஆட்டப் பாட்டுகள் கலந்து கிடப்பன காணலாகும். அருமை பெருமைகளிற் சிறந்த அருணசலக் கவிராயர் தமது ஒப்பற்ற நாடகம் அமைத்த பின்னர் அதனையே வாய்ப்பாடமாகக் கொண்டு பிற்காலத்தவர் பற்பல நாடகஞ் செய்தனர்; அவற்றுள்ளும் பழைய சிந்து முதலியவை இராவணப் போரில் விபீஷணன் போல இன்னும் இறவாமல் ஆங்காங்கு தலை காட்டி நிற்றல் புலப்படக்கூடும். இவ்வாறு பழைய நாடகப் பாட்டினியல்பு முற்றும் மாறுதலடைந்துபோயினும் ஒரு விஷயத்தில் பழைய தமிழ்நாடக வியல்பு சற்றும் மாறுபடாது நின்றுகொண்டது. இக்காலத்து நாடகங்கள் எந்த எந்த வடிவமாக இருந்தபோதிலும் அவற்றுள் ஒன்றேனும் ஆட்டமின்றி நடந்தேறுதல் கூடியதன்று. இவ்வாட்டமே முற்கூறியபடி தமிழ்க் கூத்திற்கும் ஏனைய நாடகங்களுக்கும் உள்ள தலைமையான வேற்றுமை பண், பா, அரங்கு

முதலிய யாவும் வேற்றுமைப்படும். தமிழ்க்கூத்துக் குரிய ஆடல் ஒன்றும் இதுவரைக்கும் பேதப்படவில்லை.

(நாடகத்தமிழ் ஆராய்ச்சி.)

"இவ்வாறு தோன்றி வளர்ந்த நாடகத் தமிழ் வீழ் நிலை யடையப் புகுந்தது. அதற்குக் காரணம் யாது? ஒழுக்க நிலை வகுக்கப் புகுந்த ஆரியரும் சைனரும் நாடகக் காட்சியாற் காமமே அறிவினும் மிகப் பெருகுகின்றதென் னும் போலிக் கொள்கையுடையராய்த் தமது நூல்களிற் கடியப் படுபவற்றுள் நாடகத்தையுஞ் சேர்த்துக் கூறினர்.* அக்காலத்திருந்த அரசர்க்குத் துர்ப்போதனை செய்து நாடகத் தமிழைத் தலையெழ வொட்டாது அடக்கி வந்த னர். ஒளவையாரும் திருவள்ளுவரும் ஒருங்கே புகழ்ந்த இல்லற வாழ்க்கையைத் தீவினை யச்சத்தின்பாற் படுத்திக் கூறுஞ் சைனர்கள் நாடகத் தமிழ்நூலைக் கடிந்ததோராச் சரிய மன்று. இவ்வளவு கட்டுப்பாட்டுக் கிடையில் நாடகத் தமிழ் எவ்வாறு தலையெடுத்து ஓங்கப் போகின்றது. அதன் மேல் இயற்றமிழ்க் காப்பியங்கள் நாடெங்கும் மலிந்து சிறந்து நாடகத் தமிழை வளரவொட்டாது தடுப்பன வாயின. இவ்வாறு நாடகத் தமிழுக்கு நாற்புறத்தினுந் தடைக ளமைக்கப்பட்டமையின் அஃது அழிநிலை எய்தத் தலைப்பட்டது. பண்டிதராஞோர் கடிந்து நாடகத் தமிழைக் கைவிடவே அது பாமரர் கையகப்பட்டு இழிவடைந்து தெருக்கூத் தளவிலே நிற்கின்றது.

(தமிழ் மொழியின் வரலாறு.)

---

*கூத்தும் விழவும் மணமுங் கொலைக்களமு
கார்த்த முனையுள்ளும் வேறிடத்து—மோத்து
மொழுக்கு முடையவர் செல்லாரே செல்லி
னிழுக்கு மிழவுந்தரும் (ஏலாதி—63.)

சிந்தாமணி சூளாமணி முதலிய காமச்சுவை மலிந்த சைன காப்பியங்களை நோக்குமிடத்து சைனர்கள் நாடகத் தமிழை வளரவொட்டாது தடுத்தார்கள் என்று கூற இடமில்லை.

## தமிழ் இலக்கணத்தின் சிறப்பியல்பு.

வடமொழி தமிழ் என்னும் இருமொழிப் புலமையும் ஒருங்கே நிரம்பிய சிவஞான சுவாமிகள் "தமிழ் மொழிப் புணர்ச்சிக் கட்படும் குறியீடுகளும், வினைக்குறிப்பு வினைத் தொகை முதலிய சொல்லிலக்கணங்களும், உயர்திணை அஃறிணை முதலிய சொற் பாகுபாடுகளும், குறிஞ்சி வெட்சி முதலிய திணைப் பாகுபாடுகளும் அவற்றின் பகுதிகளும், வெண்பா முதலிய செய்யுளிலக்கணமும் இன்னோரன்னவும் வடமொழியிற் பெறப்படா" என்றும் "ஈண்டு கூறும் பொருட் பாகுபாடுகள் பொதுவாகாது தமிழிற்கே சிறந்து வேறொன்றாற் பெறப்படாமையின் இப்பொருள் பற்றிவரும் பரிபாடல், கலி, அகநானூறு, புறநானூறு, ஐங் குறுநூறு, நற்றிணை, குறுந்தொகை, ஆற்றுப்படை, பதிற் றுப்பத்து முதலிய செய்யுள் ஆராயப் புகுந்தார்க்கு இப் பொருட் பாகுபாடு உணராக்கால் குன்று முட்டிய குரீ இப்போல இடர்ப்படுவர்" என்றும் "சோதிடம் முதலிய பிறகலைகளெல்லாம் ஆரியத்தினும் தமிழினும், ஏனை மொழி களினும் வேறுபாடின்றி ஒப்ப நிகழ்தலின், அவற்றை வேறு விதிக்கவேண்டாமையானும், இயலிசை நாடக மென்னும் மூன்றும் தமிழ் நிலத்துச் சிறிது வேறுபாடுடை மையின் அவற்றை விதிக்க வேண்டுதலானும் அதுபற்றி அகத்தியத்துள் மூன்றுமே யெடுத் தோதினார்" என்றும் தொல்காப்பியச் சூத்திர விருத்தியின் கண் ஆங்காங்கு உரைத்திருக்கின்றனர்.

"தமிழ்மொழியில் எல்லாப் பொருள்களும் இரண்டு திணைகளாகப் பகுக்கப் பட்டுள. பகுத்தறிவுடைய உயிர்களை உயர்திணையாகப்பகுத்து உயர்திணையில் ஆணுக்கு ஆண்பாலும் பெண்ணுக்குப் பெண்பாலும் பலருக்குப் பலர்பாலும் பகுத்தறிவற்ற விலங்கு, பறவை, நீர்வாழ்வன முதலிய உயிர்களையும், மரம், கொடி, செடி, பறவை, நீர்வாழ்வன முதலிய உயிர்களையும் அஃறிணையாகப் பகுத்து, அவற்றுள் ஒன்றுக்கு ஒன்றன்பாலும், பலவற்றுக்குப் பலவின்பாலும் கூறப்படுகின்றன. தமிழில் விலங்கு, பறவை, மீன்களின் ஆண் பெண்களுக்கும் வெவ்வேறு பெயர் கூறப்படினும், அவைகள் பகுத்தறிவற்ற தாழ்ந்த சாதியிற் பட்டன வாதலால் அஃறிணையாகவே கூறப்பட்டிருக்கின்றன. ஆங்கிலம் முதலிய பாஷைகளில் சில அஃறிணை உயிர்களுக்கும், பொருள்களுக்கும் ஆண்பால் பெண்பால் கூறினும் அங்ஙனம் கூறப்பட்ட ஒன்றையே பல பால்களில் கூறுவதும், உயர்திணை ஆண்பாலுக்கு பெண்பாற் பெயரும், பெண்பாலுக்கு ஆண்பால் ஒன்றன்பால் பெயரும் முறை பிறழ்ந்து கூறுவதும் இல்லை.

வடமொழியிலோ பால்வரம் பின்றிப் பலவாறு கூறுவதுண்டு. அவை வருமாறு:—

மனைவி பெயர்.

1. பார்யா — பெண்பால் (ஒருமை)

2. தாரா — ஆண்பால் (என்றும் பன்மை)

3. களத்ரம் — ஒன்றன்பால்

கல்லின் பெயர்

1. பாஷாண — ஆண்பால்
2. சிலா — பெண்பால்
3. உபலம் — ஒன்றன்பால்

ஆதலால் தமிழ் பால்திணையில் இனியது.

“ஒரு மொழியிலுள்ள சொற்களினொலிகளை வரிவடிவிற் காண்பித்தற்குக் கருவியாயுள்ளது எழுத்து. அங்ஙனமே தமிழ்மொழியின் ஒலியும், அதற்குரிய எழுத்தும், ஒற்றுமை பெற்றுள்ளது. வேறு சில பாஷைகளைப்போல் அவை ஒன்றுக்கொன்று வேற்றுமையுடையனவல்ல.

வடமொழியில்

ப்ரஹ்ம என்றெழுதிப் ப்ரம்ஹ என்றொலிக்கின்றனர்
ஸிஹ்ம : ,, ஸிம்ஹ : ,,
வஹ்நி ,, வந்ஹி ,,
விஜ்ஞானம் ,, விக்ஞானம் ,,

வினைத் தெளிவு.

“வினைச்சொல் ஒருவன் ஒருத்தி ஒன்றன் செயல்களைக் குறிக்குஞ் சொல். தமிழ்மொழியில் வினைகள் அவற்றைத் தெளிவுபெறக் குறிக்கின்றன. பிற மொழிகளிலுள்ள வினைச்சொற்கள் ஆண் பெண் ஒன்றன் பால்களின் வேறுபாட்டை விளக்குகின்றில.

| | ஆங்கிலம் | வடமொழி |
|---|---|---|
| செல்கின்றான் | (He) goes | (ஸ) கச்சதி |
| செல்கின்றாள் | (She) goes | (ஸா) கச்சதி |
| செல்கின்றது | (It) goes | (தத்) கச்சதி |

| ஆங்கிலம். | இலத்தீன். |
| --- | --- |
| நேசிக்கிறான் (He) loves | (Ille) amat |
| நேசிக்கிறாள் (She) loves | (Illa) amat |
| நேசிக்கிறது (It) loves | (Illud) amat |

சொற்றொடரழகு.

"சொற்றொடர் - வாக்கியம். அது எழுவாய் பயனிலை, செயப்படுபொருள் என்பன கூடி ஒரு கருத்தை விளக்குவது. அவற்றோடு அவற்றின் உரிச்சொற்களும், இடைப்பிற வரலாய் வரும் வாக்கியங்களும் சேர்ந்து சூழச் சொற்றொடராயும் வரும். பெயர் வினைகளின் இயலை உரிச்சொற்களானும், பல பெயர்களை இடைச்சொற்களானும், பல வினைகளை எச்சத்தானும், பெயர்க்கும் வினைக்கும் உள்ள சம்பந்தத்தை வேற்றுமை யுருபானும் புணர்த்தித் தமிழில் விளக்கப்படுகின்றது. ஆங்கிலத்திலும், தமிழ் போலவே சொற்றொடருளது.

"வடமொழி, இலத்தீன், கிரீக்கு முதலிய பாஷைகளில் அங்ஙனம் அழகுபெறாது விசேடணங்களுக்கும் அவை தழுவும் பெயர்களின் வேற்றுமை பால்களை யேற்றல், இடைச்சொல் இன்றிக் கூறல், முதலிய அழகின்மை யுள்ளது.

உதாரணம்.

(1) "கரிய பெரிய குயிலை வஞ்சகமுடைய காக்கையாக எண்ணினான்.

க்ருஷ்ணம் ப்ரஹந்தம் வஞ்சகி நம் காகம் பேமே.

கரியதை பெரியதை குயிலை வஞ்சகமுடையதை காக்கையை எண்ணினான்.

(2) மதுரையிலிருக்கும் இராமன் மகன் புலவனாகிய சுமுகனான இலக்குமணனால் இது எழுதப் பட்டது.

மதுராவாஸிநா ராம புத்திரேண பண்டிதேந சுமுகே ந லக்ஷ்மணேந இயம் லிக்யதே.

மதுரையில் வசிப்பவனால் இராமன் முத்திரனால் சுமுகனால் லட்சுமணனால் இது எழுதப் பட்டது.”

(மொழிநூல் - மாகறல் கார்த்திகேய முதலியார்).

## இலக்கணநூல்கள்.

அகத்தியர் தமிழுக்குச்* சிற்றகத்தியம் பேரகத்தியம் என்னும் இலக்கண நூல்கள் செய்தாரென்ப. அவற்றுள் ஒன்றேனும் இக்காலத்துக் கிடைக்கவில்லை. சிதறுண்ட சூத்திரங்களெனச் சிலவற்றைத் தொகுத்து, “பேரகத்தியத் திரட்டு” ஒன்று அச்சடித்திருக்கின்றனர். அச்சூத்திரங்களின் சொன்னடையும், பொருணடையும் நோக்கும் இளஞ் சிறாரும் அவை பண்டைத் தமிழன்று என்று துணிந்து கொள்வர். அகத்தியத்துக்கு முன் குமரம் என்னும் ஓர் இலக்கணம் இருந்ததாகக் கூறுப. பேராற்று நெடுந்துறையன் பெரு நூல் களுள்ளும் இடைக்கழிச் செங்கோடன் இயனூல் முதலிய இலக்கணங்கள் இருந்து மறைந்து போனதாக செங்கோன்தரைச் செலவு என்னும் நூலால் அறிகின்றோம். தொல்காப்பியத்திற் பலவிடங்

---

* முந்து நுல் அகத்தியமும் மாபுராணமும் இசைநுணுக்கமும் அவற்றுட் கூறிய இலக்கணங்களாவன எழுத்துச் சொற் பொருள் யாப்பும் சந்தமும் வழக்கியலும் அரசியலும் பார்ப்பனவியலும் சோதிடமுங் காந்தருவமுங் கூத்தும் பிறவுமாம். (நச்சினார்க்கினியர்)

களிற் காணப்படும் 'என்ப,' 'என்மனார் புலவர்,' 'இயல் புணர்ந்தோர் மொழிப' என்பன போன்ற சொற்றொடர் களால் தொல்காப்பியர்காலத்தும் முன்பும் பல இலக்கண இலக்கியங்கள் இருந்தனவென்பது தெளிவு.

யாப்பருங்கலவிருத்தி யாப்பருங்கலக்காரிகை (பழைய) உரை முதலியவற்றில் இக்காலத்துக்கிடையாத பல இலக் கண இலக்கியங்கள் மேற்கோள்களாக வந்திருக்கின்றன.

இக்காலம் வழங்கும் இலக்கணங்கள், தொல்காப்பியம், வீரசோழியம், யாப்பருங்கலக் காரிகை, தண்டியலங்காரம், மாறனலங்காரம், இலக்கண விளக்கம், இலக்கணக்கொத்து, நேமிநாதம், நன்னூல் முதலியன.

பிறமொழிகளிலுள்ள இலக்கணங்களும் பிறவுமாயுள்ள நூல்கள் முன்னிருந்தவற்றிலிருந்து விரித்து எழுதப்பெறும். தமிழ் நூல்களோ முன்னிருந்தவற்றைச் சுருக்கி எழு தப்படுவனவாகும். உதாரணத்துக்கு தொல்காப்பியம், நன் னூல், இலக்கணச்சுருக்கம் முதலியவற்றை நோக்குக.

## சங்கம்.

"தலைச் சங்கம் இடைச் சங்கம் கடைச் சங்கமென மூவகைப்பட்ட சங்கம் இரீ இயினார் பாண்டியர்கள். அவ ருள் தலைச்சங்க மிருந்தார் அகத்தியனாரும், திரிபுர மெரித்த விரிசடைக் கடவுளும், குன்ற மெறிந்த குமரவே ளும், முரஞ்சி யூர் முடி நாகராயரும் நிதியின் கிழவனு மென இத் தொடக்கத்தார் ஐஞ்ஞூற்று நாற்பத்தொன்ப தின்மர் பாடினா ரென்ப. அவர்களாற் பாடப்பட்டன எத்துணையோ பரிபாடலும், முதுநாரையும், முதுகுரு கும், களரியா விரையுமென இத்தொடக்கத்தன. அவர் நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றியாண்டு சங்கமிருந்தா

ரென்ப. அவர்களைச் சங்கமிரீ இயினுர் காய்சின வழுதி முதலாகக் கடுங்கோனீருக எண்பத்தொன்பதின்மரென்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கடல் கொள்ளப்பட்ட மதுரையென்ப. அவர்க்கு நூல் அகத்தியம்.

"இனி இடைச்சங்கமிருந்தார் அகத்தியனுரும் தொல் காப்பியனுரும், இருந்தையூர்க் கருங்கோழியும், மோசியும், வெள்ளூர்க் காப்பியனும், சிறு பாண்டரங்கனும், திரையன் மாறனும், துவரைக் கோனும் கீரந்தையு மென இத்தொ டக்கத்தார் ஐம்பத் தொன்பதின்மரென்ப. அவருள் ளிட்ட மூவாயிரத் தெழுநூற்றுவர் பாடினுரென்ப. அவர் களாற் பாடப்பட்டன கலியும், குருகும், வெண்டாளியும், வியாழமாலை யகவலுமென இத்தொடக்கத்தன என்ப. அவர்க்கு நூல் அகத்தியமுந் தொல்காப்பியமும், மாபுராண மும், இசை நுணுக்கமும், பூத புராணமுமென இவை யென்ப. அவர் மூவாயிரத் தெழுநூற்றியாண்டு சங்க மிருந்தாரென்ப. அவரைச் சங்கமிரீ இயினுர் வெண்டேர்ச் சேழியன் முதலாக முடத்திருமாற னீருக ஐம்பத்தொன் பதின்மரென்ப. அவருட் கவியரங்கேறினுர் ஐவர் பாண்டிய ரென்ப அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கபாடபுரத் தென்ப. அக்காலத்துப் போலும் பாண்டிய நாட்டைக் கடல் கொண்டது.

"இனிக் கடைச் சங்கமிருந்து தமிழாராய்ந்தார் சிறு மேதாவியாரும் சேந்தம் பூதனுரும் அறிவுடையரனுரும், பெருங்குன்றூர்க் கிழாரும், இளந்திருமாறனும் மதுரை யாசிரியர் நல்லந்துவனுரும் மருதனிள நாகனுரும், கணக்காயனுர் மகனுர் நக்கீரனுரு மென இத்தொடக் கத்தார் நாற்பத்தொன்பதின்மரென்ப. அவருள்ளிட்டு நானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினு ரென்ப. அவர்களாற் பாடப்பட்டன நெடுந்தொகை நானூறும், குறுந்

தொகை நானூறும், நற்றிணை நானூறும், புறநானூறும், ஐங்குறு நூறும், பதிற்றுப்பத்தும், நூற்றைம்பதுகலியும், எழுபது பரிபாடலும், கூத்தும், வரியும், சிற்றிசையும், பேரிசையுமென்று இத்தொடக் கத்தன. அவர்க்கு நூல் அகத்தியமுந் தொல்காப்பியமுமென்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது ஆயிரத்தொண்ணூற்றைம்பதிற்றி யாண்டு என்ப. அவர்களைச் சங்கமிரீஇயினார் கடல் கொள்ளப்பட்டுப் போந்திருந்த முடத்திருமாறன் முதலாக உக்கிரப் பெருவழுதி யீறாக நாற்பத் தொன்பதின்ம ரென்ப. அவருட் கவியரங்கேறினார் மூவர் பாண்டிய ரென்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது உத்தர மதுரை யென்ப.''

(இறையனா ரகப்பொருளுரை.)

களவியலுரையிற் கூறப்பட்ட சங்கப் புலவர்கள் பலர் சங்கநூற் செய்யுட்களை இயற்றிய புலவர்களாகக் காணப் படுதலின் களவியலுரையிற் காணப்படும் சங்க வரலாறு ஆதாரமற்ற கட்டுக்கதை என்று கருத இடமில்லை. பண்டை நாளிற் சங்கமிருந்து தமிழ் வளர்த்தமையை,

"சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்பலத்து
மென் சிந்தை யுள்ளும்
உறை வானுயர் மதிற்கூட லினாய்ந்த
வொண்டீந் தமிழின்—றுறை''

(திருக்கோவையார்)

"ஞான சம்பந்த னுரைசெய் சங்கமலி செந்தமிழ்''

(சம் - தே.)

"திருவால வாயில் எம்மைப் பவந்தீர்த்தவர் சங்கமிருந்து''

(பெரியபுராணம்)

"சங்கத் தமிழ் மூன்றுந் தா'' (நல்வழில்).

“ நன்பாட்டுப் புலவனாய் சங்கமேறி நற்கனகக்
கிழிதருமிக் கருளினான் காண் ”

(திரு. நா. தே. திருப்புத்தூர்)

எனவரும் தெய்வப்பெற்றியாளர் திருவாக்குகளா னோர்க.

“ மதுரைத் தலபுராணம் குலசேகர பாண்டியன் முதல் மதுரேசுவர பாண்டியனீறாக எழுபத்துநாலு பாண்டியரைப் பற்றிச் சொல்லுகின்றது. இப்போதுள்ள மதுரையில் அரசு புரிந்த பாண்டியர்கள் இவர்கள்தான். கடைசிப் பாண்டியனுக்கு முதல் ஆண்ட கூன் பாண்டியன் அல்லது நெடுமாறன் ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இருந்தவனென்பது துணியப்பட்டது. அவனது ஆட்சியில் சங்கமிருந்ததாக ஒருவரலாறுங் காணப்படவில்லை. கி. பி. நாலாம் நூற்றாண்டு வரையிலிருந்த மாணிக்கவாசக சுவாமிகள் காலத்தில் சங்கத்தைப்பற்றிய செய்தி இறந்தகால நிகழ்ச்சியாகக் காணப்படுகின்றது. கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட சிலப்பதிகாரம், மணிமேகலை யென்னும் நூல்களில் சங்கத்தைப்பற்றிய குறிப்புக் காணப்படவில்லை. மூன்றாஞ் சங்கத்தின் கடைசிப் பாண்டியன் உக்கிரப்பெருவழுதி யென்பது கன்னபரம்பரை. இப்பாண்டியன் காலத்திலேயே திருக்குறள் அரங்கேற்றப்பட்டதென்று சொல்லப்படுகின்றது. இப்போது அப்பாண்டியன் தல புராணத்திற் சொல்லப்படும் 74 பாண்டியருள் எவனென்று தீர்மானிக்க முடியவில்லை. புராணமெழுதியவர் தமிழ்ப் பெயர்களைச் சமஸ்கிருதத்தில் மொழி பெயர்த்து எழுதியதே இதற்குக் காரணம். அப்படி யிருந்தாலும் இப்பாண்டியனுடைய காலத்தை ஒருவாறு நிச்சயித்தல் கூடும். இவன் கரிகாற் சோழனின் தந்தையாகிய இளஞ்சேட் சென்னியின் காலத்தில் இருந்தவனென்று சொல்லப்படுகின்றது. அவன்

காலம் கி. பி. 50—90 வரையிலாகும். ஆகவே சங்கத்தின் இறுதிக்காலம் முதலாம் நூற்றுண்டிலென்று துணிதல் வேண்டும். அதற்குப் பின் சங்கமிருந்ததற்கு உண்மைச் சான்றுகள் கிடைக்கவில்லை. சங்கம் ஒடுங்கியது முதல் நூற்றுண்டின் முற்பகுதியிலாகும். இனிச் சங்கம் தொடங்கிய காலத்தைக் குறித்து ஆராய்வோம். 196 பாண்டியர்கள் 3900 ஆண்டுகளாகச் சங்கம் நடத்திஞர்களென்று முன் ஓரிடத்தில் கூறப்பட்டது. ஒரு அரசனுக்குரிய காலம் இருபது என வைத்துக் கணக்கிட்டமையின் இக் காலக் கணக்கு ஏற்பட்டது. தென் மதுரையிலே நடந்த சங்கம் 86 அரசர் ஆதரவின்கீழ் நடை பெற்றதென்றும் சொல்லப்படுகின்றது. அப்படியா யிருந்தால் 89 பாண்டியருக்குரிய கால எல்லை 1780 ஆண்டுகளாகின்றன. 1780 ஆண்டுகளை 3900 ஆண்டுகளி னின்றும் எடுத்துவிட எஞ்சி நிற்பது 2120 ஆண்டுகளாகும். இதனையே தென்மதுரையைக் கடல் கொண்ட காலமெனக் கொள்ளுதல் வேண்டும். சலப் பிரளய முண்டான காலம் கி. மு. 2105 எனயூதர் குறிப்பிட்டிருக்கின்றனர். இக்காலக்கணக்கு தென்மதுரையைக் கடல் கொண்டதெனச் சொல்லப் படும் காலத்தோடு ஒத்திருக்கின்றது. கிறிஸ்துவுக்கு முன் 3900 வரையில் சங்கந் தொடங்கியதெனப் பெரும்படியாகக் கூறலாம். பழைய தமிழகம் மிகவும் சீர்திருத்தம் பெற்றிருந்த தென்பதையும் அது பிற நாடுகளுடன் வியாபாரம் நடத்திய தென்பதையும் நினைவில் வைத்துக்கொண்டால் தமிழ்ச் சங்கம் அக்காலத்தில் நடை பெற்றிருக்கக் கூடா தென்று ஒருபோதுங் கருத இடம் இருக்கமாட்டாது.

றெகேசின் (Regozin) என்பவர் வேத இந்தியா என்னும் நூலில் கூறியிருப்பது வருமாறு :—" 'ஊர்' என்

னும் பட்டினத்தில் ஊர் எயா என்னும் வேந்தனால் கி. மு. மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன் கட்டுவிக்கப்பட்ட பழைய கட்டிடங்களைக் கிளறிப் பார்த்தபோது தமிழகத்தில் மலையாளக் கரைகளில் மாத்திரம் வளருகின்ற தேக்கமரத் துண்டு ஒன்று கண்டெடுக்கப்பட்டது. விந்தியத்துக்கு வடக்கே அவ்விதமான தேக்க மரம் காணப்படுவதில்லை. இது ஐயாயிரமாண்டுகளுக்கு முன் தமிழர்கள் எவ்வளவு சிர்திருத்த மடைந்திருந்தார்கள் என்பதை விளக்குகின்றது. ஆகவே உலக முழுமையிலும் பாண்டிய வமிசமே மிகப் பழைய தென்றும் தென்மதுரையில் அவர்களால் நிறுவப்பட்ட சங்கமே எல்லாச் சங்கங்களுக்கும் முற்பட்ட தென்றும் சொல்வதில் ஆச்சரியத்துக் குரியது ஒன்றுமில்லை. பழைய மதுரையின் அழிவுக்குப் பிற்பாடு பாண்டியருக்குத் தலைநகராயிருந்தது கபாடபுர மென்று இராமாயணத்திற் படிக்கின்றோம். இரண்டாவது நடத்திய சங்கம் 59 பாண்டியரின் காலம் 1180 ஆண்டுகளாகும். இது இரண்டாஞ் சங்கத்தின் இறுதிக் காலமும் மூன்றாஞ் சங்கத்தின் தொடக்கமாகிய (2120—1180) கி. மு. 940-க்குக் கொண்டுவந்து விடுகின்றது. இரண்டாவது தலைநகரமாகிய கபாடபுரம் கடற்பெருக்கினால் அழிக்கப்பட்டதென்பதும் அவ்வழிவுக்குப் பிழைத்திருந்த பாண்டியனே மறுபடியும் கூடலில் சங்கம் நிறுவினானென்பதும் கன்னபரம்பரை. தலபுராணத்தின்படி மூன்றாவது சங்கத்தை நிறுவினவன் உக்கிரபாண்டியனாவன். மாபாரதத்தில் சொல்லப்படும் பப்புரவாகன் இவனே. இவன் மலையத்துவச பாண்டியனின் பேரனென்றும் மலையத்துவசனின் ஒரே குமாரி அருச்சுனனை மணந்தாளென்றும் மாபாரதம் கூறுகின்றது. தலபுராணத்திற் கூறப்படும் 'சுந்தரன்' என்னும் பெயர் அருச்சுனனைக் குறிக்கும். மலையத்துவசனை அருச்சுனன்

மணலூரிற் சந்தித்ததாக மாபாரதங் கூறுகின்றது. கூடலைத் தலைநகராகக் கொண்ட பாண்டியன் மணலூரிலிருந்து வந் தானென்று பழைய திருவிளையாடல் சொல்லுகின்றது. இதனால் கபாடபுரத்தின் அழிவுக்குப் பிறகும் கூடலைத் தலைநகராகக் கொள்வதற்கு முன்னும் மணலூர் பாண்டிய னுடைய தலைநகராயிருந்ததெனச் சொல்லவேண்டும்; அல் லாவிடில் மணலூரும் கபாடபுரமும் ஒன்று எனக் கொள் ளல் வேண்டும். இராமாயணம் பாரதம் என்னும் இரண்டு நூல்களிலும பாண்டியனுடைய தலைநகரமாகச் சொல்லப்படு மிடங்கள் ஓரே யிடத்தைக் குறிக்கின்றன. இராமாயணததில் வான்மீகி சுக்கிரீபன் வானரவீரருக்குக் கூறிய கூற்றாக வைத்துச் சொல்லுமிடத்து 'கபாடம்' தாம்பிரபர்னி கட லோடு சங்கமிக்கு மிடத்தில் இருப்பதாகச் சொல்லபட் டிருக்கின்றது. அருச்சுனன் தெற்கே தீர்த்தயாத்திரை செய்ததைச் சொல்லுமிடத்து அவன் கலிங்கநாட்டுக் கூடாகச் சென்று கோதாவரியையும் கிழக்குத் தொடர் மலையிலேயுள்ள மகேந்திரத்தையுங் கடந்து காவேரியைப் பின்புறமாக விட்டு கிழக்குக் கடலோரத்திலேயிருந்த மண லூரை யடைந்தானெனச் சொல்லப்படுகின்றது.

மாபாரதத்திற் காணப்படும் மணலூரென்பது 'மணற் பட்டினம்' என்னும் பொருள் தரும் தனித் தமிழ்ப் பெய ராகும். 'கபாடம்' என இராமாயணத்திற் காணப்படுவது 'அலைவாய்' என்னும் தமிழ்ப் பெயரின் சமக்கிருத மொழி பெயர்ப்பாகக் காணப்படுகின்றது. அலைவாய் துறைமுகம் என்பன ஒரு பொருட் சொற்கள். பழந்தமிழ்க் கடவுளாகிய முருகன் கோயிலுக்கு இருப்பிடமாகிய செந்தில்மலை அடி யோரத்தில் இருந்த துறைமுகப் பட்டினத்துக்கு அலை முகப் பட்டினமெனப் பெயருளது. அது இப்போதுள்ள திருச்செந்தூருக்குப் பக்கத்திலே யிருந்தது. பழைய

முருகன் கோயில் கடலுள் மறைந்துள்ளதெனச் சொல்லப் படுகின்றது. கபாடபுரம் அல்லது அலைவாய் அக்காலத்து எல்லாவிடங்களாலும் அறியப்பட்ட பாண்டிய அரசருடைய துறைமுகப் பட்டினமென்றும் அதனருகே அரச னுடைய மாளிகையும் அரசிருக்கையு மிருந்த ஒரு சிறு பட்டினமிருந்த தென்றுங் கருத இடமுண்டு. மணலூரி லிருந்த கடைசிப் பாண்டியன் அலைவாயைக் கடல் கொண்டதற்பின் தனது தலைநகரை மதுரைக்கு மாற்றி யிருக்கவேண்டும். இம் மாற்றம் பாரதப் போருக்குப் பின்னுதல் வேண்டும். இதற்குப் பின் கூட்டப்பட்ட மூன் ருஞ் சங்கத்தை 49 பாண்டியர்கள் நடத்தியிருக்கிருர்கள். இச்சங்கம இடையீடின்றி 10 நூற்ருண்டுகளாக உக்கிரப் பெருவழுதி காலம்வரையில் நடைபெற்றிருக்கின்றது. இவனுடைய காலம் கி. பி. 30-க்கும் 50-க்கும் இடையில் என்று முன்னமே முடிவு செய்யப்பட்டது. கி. பி. 50 சங்கத்தின் இறுதிக்காலமாகும்.

(Notes on Sangam Age by Pandit Savarirayan—Tamilian Antiquary, Vol. 2, No. 1.)

## அகத்தியர்

அகத்தியரைப்பற்றிய செய்திகள் புராணங்களிலும் இதிகாசங்களிலும் மற்றும் நூல்களிலும் மலிந்து காணப் பெறுகின்றன. அப்படியிருந்தபோதும் அவரைக் குறித்த உண்மை வரலாற்றினைத்தையும் ஆராய்ந்து கோவைப்படுத் திக் கூறுவது இலகுவன்று. அவருடைய பிறப்பைக் குறித் துப் பலவகையான கதைகளுண்டு. அவற்றுட் பெரும் பாலன இயற்கைக்கு மாருகக் காணப்படுதலின் அவை நம்பப்படத்தக்கனவல்ல. தென்னுட்டு முனிவருள் ஒரு வர் புலத்தியர். இவருடைய புதல்வருக்கு அகத்திய

ரென்று பெயர். புலத்தியர் இலங்கை வேந்தனாகிய இராவணனின் பாட்டன், அகத்தியர் கலசத்திற் பிறந்தா ரென்பதும், அவர் பெருவிரலினளவின ரென்பதும், கடலைக் குடித்தாரென்பதும், விந்தியமலையை அடக்கினாரென்பதும் புராணக் கதைகள். அக்கதைகள் நேராகப் பொருள் கொள்ளவியலா. சுவாமி திருக்கலியாணத்துக்கு இருடிகளும் முனிவருந் தேவரும் மேருவில் ஈண்டியபோது வடகோடு தாழ்ந்து தென்கோடு உயர்ந்த கதைகளு மப்படியே. புராணக் கதைகளைக் கொண்டு ஒருவகையான முடிவுகளையும் அடைதல் கூடாது. விருத்திரன் மழைமுகி லென்றும் இந்திரன் மழை பெய்தற கிடமாயுள்ள விண்ணென்றும் தத்துவார்த்தம் பகர்கின்றனர். அது உண்மையாயின் அகத்தியர் நகுடனைச் சபித்தது கடலைக் குடித்தது முதலிய கதைகள் கற்பனையாய் மாறுகின்றன. இப்படியே புராணக் கதைகளுக்குத் தத்துவப் பொருள் கூறப் புகுமிடத்து உண்மையென நம்பப்பட்டு வரும் பலகதைகள்கற்பனையாகத் தோன்றுகின்றன. அகத்தியர் இமயமலையை அடுத்துள்ள நாடுகளினின்றும் பெயர்ந்து தமிழ் நாடு போந்தார் என்பதற்குப் புராணக் கதைகளையும் அவற்றைத் தழுவி நச்சினார்க்கினியர் தொல்காப்பியப் பாயிரவுரையில் எழுதிய கதையையுமன்றி வேறு பிரமாணங்கள் இன்று. தமிழ் ஆரியப் போர் உண்டான காலத்து இவைபோன்ற கதைகள் முளைத்தல் இயல்பு. அகத்தியர் மிகப் பழைய காலந் தொட்டே பொதியின் மலையில் வசித்தா ரென்பதற்கு அகத்தியன் என்னும் விண்மீனுக்கு 'பொதியின முனிவன்' என்னும் பெயர் பரிபாடலிற் காணப்படுதலே போதிய சான்று. "தெண்ணீரருவிக்கானார் மலையத்தருந்தவன்" (யாப்பருங்கலக் காரிகை). அகத்தியர் குடகுமலையிற் றங்கி பொதியின் மலைக்கு வந்தமையின் அவர் குடமுனி யெனப்

பட்டார் என்றும் பின்னுள்ளார் இப்பொருளை மறந்து (குடமுனி) கலசயோனி என்னும் பெயரால் வழங்கினர் எனவும் கூறுகின்றனர்.

" இராவணனைக் கந்தருவத்தாற் பிணித்து அவனை ஆண்டுவாராமல் விலக்கி " என நச்சினார்க்கினியர் கூறும் மதுரைக் காஞ்சி உரையால் அகத்தியர் இராவணன் காலத்தவரென்று விளங்குகின்றது. இனிக் கடைச் சங்கப் புலவருளொருவராகிய மதுரைக் கூலவாணிகன் சாத்தனார் தாமியற்றிய மணிமேகலைக் காப்பியத்தில் காவிரிப்பூம்பட்டினத்திருந்த காந்தனென்னும் சோழமன்னன், பரசுராமன் தன்னோடு போர்குறித்து வருதலைத் துர்க்காதேவியா லுணர்ந்து அவளேவற்படி கணிகை வயிற்றுப் பிறந்தமையால் அரசாளுரிமையில்லாத ககந்தனென்பானை நகரைக் காக்குமாறு வைத்துவிட்டு அகத்திய முனிவரைச் சரணடைந்தானென்றும் அவன் வேண்டிக்கொள்ள, அகத்தியர் காவிரியைப் பெருகச் செய்தாரென்றும் கூறுமாற்றால் அகத்தியர் இராமன் காலத்து தென்னாட்டில் உறைந்த செய்தி புலனாகின்றது.

" ஆராய்ந்து பார்க்குங்கால் அகஸ்தியர் பரம்பரையொன்று இருந்ததென்றும் அப்பரம்பரையில் வந்தோரனைவரும் அகஸ்தியர் என்னும் பெயரையே வைத்துக்கொண்டனர் என்பதும், அவருள் ஒருவரே அகத்தியம் என்னும் நூலைச் செய்தவரென்பதும், சில உரைகளில் அகத்தியம் என்று காணப்படும் நூல் இயற்றிய அகத்தியனார் தொல்காப்பியனார்க்குப் பிந்தியவரென்பதும்........."

(கா. நமச்சிவாய முதலியார்)

அகத்தியரிடத்திற் கல்விகற்றோர் பன்னிருவரென்றும் அவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வோர் படலமாகப் புறப்

பொருட் பன்னிருபடல மியற்றினர்களென்றும் அவற்றுட் தொல்காப்பியர் வெட்சிப் படலமியற்றினரென்றும் தொல் காப்பிய உரை புறப்பொருள் வெண்பாமாலை முதலியவற் றால் விளங்குகின்றன. ஆசிரியர் இளம்பூரணவடிகள் பன் னிருபடலத்துள் அடங்கிய வெட்சிப்படலம் தொல்காப்பி யர் செய்ததன்றெனப் பல காரணங்கள் காட்டி மறுப்பர். ஆகவே இளம்பூரண வடிகள் காலத்தில் பன்னிருபடலத்தை ஆக்கியோர்களைக் குறித்துச் சந்தேகம் இருந்ததென விளங் குகின்றது.

## தொல்காப்பியர்

தொல்காப்பியர் அகத்தியர் மாணவர் பன்னிருவருள் ஒருவரென்ப. அவர் இயற்பெயர் யாதெனப் புலப்பட வில்லை. ஜமதக்கினி முனிவரின் புதல்வர் தொல்காப்பிய ரென நச்சினார்க்கினியர் கூறுவர். ஜமதக்கினியைப் பற்றி எழுந்த புராணப் பகுதிகளில் அங்ஙனம் கூறப்படாமையான் அக்கூற்று வலியுடைய தாகாது. தொல்காப்பியர் அகத்தியத்தைப் பின்பற்றி நூல் செய்தா ரென்பது பாரம்பரியம். அவர் தமது நூலகத்து தாம் அகத்தியத்தைப் பின்பற்றி நூல்செய்தா ரென்றாவது அகத்தியர் தமது ஆசிரிய ரென்றாவது குறிப்பிட்டிலர். தொல்காபபியத்துக்குச் சிறப்புப்பாயிரஞ் செய்த பனம் பாரனாரும் இவ்வரலாறு ஒன்றனையேனும் கூறிற்றிலர். இது ஆராய்ச்சிக் குரியது.

## தொல்காப்பியம்

தொல்காப்பியம் என்பதற்குப் பழமையைக் காப்பது என்பது பொருள். தொல் என்பது பழமை. காப்பு + இயம் காப்பதாகிய நூல். பழைய நூல்கள் பற்பல காரணச்

செறிவால் மாண்டுபோதலும் இறந்தகால நிலைமையைக் காப்பதற்கு நூல் எழுதல் வேண்டியதாயிற்று. தமிழ் நாட்டைக் கொடுங்கடல் கொண்டது. மக்கள் நூலொடு மாண்டனர். எஞ்சியோர் எஞ்சிய உணர்ச்சி கொண்டு நூல்களைப் புதுப்பிக்குங்கால் கொள்கைமாறு கொண்டு கலாய்த்தனர். அவற்றிற்கெல்லாம் தலைகொடுத்து நிலைத்து நின்றது இந்நூல் ஒன்றேயாதலின் இது தொல்காப்பிய மெனத் தகுவதென்க. தொல்காப்பியர் செய்தமையின் தொல்காப்பியம் என்னும் பெயருண்டாயிற்றே அன்றித் தொல்காப்பியஞ் செய்தமையின் தொல்காப்பியர் என்னும் பெயருண்டாயிற்றே யென்பது ஆழ்ந்து கருதி அறிதிற்பாலது. தொல்காப்பியம் என்னும் நூற் பெயரிலுள்ள காப்பியம் என்னுஞ் சொல் காவியம் என்னும் வடசொல் லின் திரிபாமென்பது பிற்காலத்தார் கற்பனை.

ஐயாயிரம் ஆண்டுகளுக்குமுன் இயற்றப்பட்ட தொல் காப்பியத்துக்கு எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னிருந்த இளம்பூரணர் பேராசிரியர் நச்சினார்க்கினியர் முதலியோர் எழுதிய உரைகளே காணப்படுகின்றன. பழைய உரைகள் ஒன்றையுங் காணேம். இடையிட்ட சில ஆயிரமாண்டு களுக்குத் தொல்காப்பியம் உரையின்றி யிருத்தல் கூடுமோ? உரைகளிருந்தன. அவைகளெல்லாம் சாதிச் சண்டை சமயச் சண்டைகளால் அழிக்கப்பட்டன என்றே கொள் ளல் வேண்டும். வேறு காரணங் கூற வியலா. உரையாசி ரியர்கள் பிற்காலத்து வழக்க ஒழுக்கங்களையும் மிருதிகளை யும் பின்பற்றி உரை செய்திருத்தலின் உரைகள் நூலிலுள்ள உண்மைப் பொருள்களைப் பலவிடங்களில் விளக்கா தொழிந்தன.

சீவக சிந்தாமணி, பெரிய புராணம், திருமந்திரம், தேவாரம் முதலிய நூல்களில் இடையிடையே இடைச்

செருகலாகப் பிற்காலத்துப் புலவர்கள் பலபாடல்களைப் பாடிச்சேர்த்திருக்கின்றனர். சில நூற்றாண்டுகளுக்கு முன் தோன்றிய நூல்களுக்கு நேர்ந்த கதி யிதுவாயின் சில ஆயிரம் ஆண்டுகளுக்குமுன் தோன்றிய நூலின் கதி எதுவா யிருத்தல் கூடும். மரபியலுட் பல சூத்திரங்கள் இடைச்செருகலெனத் துணிவதற்குப் பல ஏதுக்கள் உண்டு. சிறப்புப்பாயிரத்திற் கூறப்பட்ட "ஐந்திரம்" தமிழுக்குரியதோ வடமொழிக்குரியதோ வென்று துணிதற்கிடமில்லை. சிலப்பதிகாரத்தில் ஓரிடத்தின் "விண்ணவர் கோமான் விழுநூல்" என ஓர் சைனநூல் சுட்டப்படுகின்றது. இதனை ஐந்திர வியாகரணம் என்பர் அடியார்க்கு நல்லார். புத்த சமயத்துக்குப்பின் தோன்றிய சைனமத நூலாகிய ஐந்திரம் தொல்காப்பியப் பாயிரத்திற் குறிக்கப்பட்ட நூலெனக் கொள்ள இடமில்லை. இந்திரன் என்னும் பெயருடன் பல காலங்களில் விளங்கியபலர் நூல்கள் யாத்திருத்தல் கூடும்.

தொல்காப்பியம் கி. மு. மூன்றாம் நூற்றாண்டுக்கு முற்பட்டதெனக் கொள்வதற்கு அதனகத்துற்றனே பல சான்றுகள் காணப் பெறுகின்றன. தொல்காப்பியம் எழுத்ததிகாரம் சூ. 24, 27, 28-களால் அக்காலத்து ஞ்ய, ங்ய, ம்ய, ம்வ என மொழிக்கிடையில் வருஞ் சொற்கள் உண்டு என விளங்குகின்றது. இக்காலத்துள்ள தமிழ் நூல்கள் ஒன்றிலேனும் அவ்வகையான சொற்கள் காணப்படவில்லை. கி. பி. முதல் நூற்றாண்டில் செய்யப்பட்ட திருக்குறளிலும் அவ்வகையான சொற்கள் ஆளப்பட வில்லை. அவ்வகையான சொற்கள் வழங்கிய காலம் குறைந்த பட்சம் திருக்குறளுக்கு மூன்று நூற்றாண்டு வரையிலிருத்தல் கூடும்.

தொல்காப்பியம் சொல் சூ. 29, 32-க்கு மாறாக சமைத்து, சலம், சதுக்கம், சந்தி, யூகம், யவனர், சங்கு,

சமம் முதலிய சகர முதற் சொற்களும் பிறவும் கடைச் சங்க நூல்களிற் காணப்படுகின்றன.

தொல்காப்பியர் கடைச்சங்க காலத்தில் நூலியற்றி யிருப்பாராயின்,

"சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே
அ, ஐ, ஔ வெனும் மூன்றலங் கடையே."
"ஆ, எ, ஒ வெனும் மூவுயிர் ஞகாரத்துரிய
ஆவோ டல்லது யகர முதலாது"

எனச் சூத்திரஞ் செய்திருக்க மாட்டார். ஆகவே தொல் காப்பியஞ் செய்யப்பட்டு நீண்ட காலத்துக்குப் பின்னரே தவிர்க்கப்பட்ட சகர முதற் சொற்களும் பிறவும் நூல்களில் வழங்கப்பட்டிருத்தல் வேண்டும்.

"பாணினி முனிவர் குறிப்பிடுகின்ற 64 ஆசிரியர்களுள் இந்திரன் என்பார் ஒருவராகக் காணப்படுகின்றனர். பாணி னிக்குப் பின் பாணினீயமே எவராலும் கைக்கொள்ளப் பட்டு வருகின்றது. தொல்காப்பியர் பாணினிக்குப் பின் னிருந்தவராயின் தொல்காப்பியத்தில் ஐந்திரம் என்பதற் குப் பதில் பாணினீயமே கூறப்பட்டிருக்கும். பாணினி முனிவர் கி. மு. 7-ம் நூற்றாண்டில் விளங்கியவர் என்று சிலரும், கி. மு. 4-ம் நூற்றாண்டில் விளங்கியவரென வேறு சிலரும் கூறுவர். ஆகவே தொல்காப்பியர் கி. மு. 4-ம் நூற்றாண்டுக்குப் பிந்தியவரல்லர்." (Tamil Studies.)

## வடசோல்

"வடசொல்" என்பதற்கு இளம்பூரணவடிகள் "ஆரி யச் சொற்போலுஞ் சொல்" எனப் பொருள் கூறினர். தமி ழின் பகுதியாகிய வடசொல் நன்றாகச் செய்யப்பட்டு சமக் கிருதம் என்னும் பெயர் பெற்றதென்பது சிலர் கருத்து.

யாழ்ப்பாணத்துப் பேரகராதியில் வடசொல் கிரந்தம் என்னுஞ் சொற்களுக்கு வடதமிழ் என்னும் பொருள் காணப்படுகின்றது. வடசொல் வடதமிழாயில் அது தமிழேயென்பது துணிபு.* ஆரியர் பேசுந்தமிழை நகைச்சுவைக்கு உதாரணமாகப் பேராசிரியர் காட்டுகின்றனர். ஆரியர் திருத்தமில்லாத பேச்சுடையவராதலினாலேயே அவரைத் தமிழர் திருந்தாத மொழியுடையவர் என்னும் பொருள்பட மிலேச்சர் என்னும் பெயராலழைத்தனர்.

திருவாளர் பா. வே. மாணிக்க நாயக்கரவர்கள் வடசொல்லைக் குறித்துக் கூறுவது வருமாறு :—" வடசொல் ஆரியம், சமஸ்கிருதம் என்பன ஒரு பொருட் கிளவிகளாக அணித்தில் வழங்கிவருவது அறிவேன். ஆனால், தொல்காப்பிய காலத்தில் வடசொல் தவிர மற்ற இரண்டு சொற்களும் உலகில் எங்கேனும் இருந்தனவா ? இருப்பின் தமிழ்

* "Dialects of the same family of languages were spoken throughout India, except in the Vindhyan regions in the Neolithic Age; and that is what has been called the Dravidian family. The distinction between the spoken dialects of North India, to which the name Gaudian has been given by modern scholars and which have been held to be degenerations of Sanskrit or of Prakrit, and those of Southern India, to which the name Dravidian has been given, is, I hold, a distinction without a difference, except that the North Indian dialects have been very much more profoundly affected by Sanskrit than those of South India. The Neolithians of North India spoke languages of their own which, I hold, were structurally allied to the so-called Dravidian family of languages and not to Sanskrit or prakrit." (Stone age in India, p. 43.)

கூறு நல்லுலகத்தில் வழங்கினவா ? வழங்கின் மூன்று சொற்களும் ஒரு பொருளினவாக வழங்கினவா என்பன இன்னும் ஆராய்ந்து தெளிதற்குரியன.

" தமிழில் வழங்கும் சொல் வகைகள் நான்கினுள் இயற்சொல் முதன்மையானது ; வடசொல் கடைப்படியி னுள்ளது..வடசொல்லென்பது தமிழுக்குரிய சொல்லென்று நேராகவே பொருள்கொள்ள இடங்கொடுப்பது. உய்த்துப் பொருள் கோடல் வேண்டாதது.

" அத்தகைய வடசொல் என்னுந் தமிழ்ச்சொல்தான் என்னை ? என்கிற ஆராய்ச்சிக்கு தொல்காப்பியத்தினின்றே ஆரியச் சொல்தான் அல்லது சமஸ்கிருதந்தான் என்று தெளிவிக்கக் கூடிய கூற்று எனக் கெட்டியவரையில் கிடைக்கவில்லை.

"வடசொல் என்பதை வடக்குத் திசையிலிருந்து வந்த சொல் எனல் எளிதாயினும் அளவைக் கிணங்க நோக்கின் வடசொல்லென்பதுதிசைச்சொல்லென்பதனுள் ஒருபகுதி யாக அடங்கும். அவ்வாறாகத் திசைச்சொல்லென்பதையுஞ் சொல்லி, வடசொல்லென்பதையுஞ் சொல்லவேண்டியதன் பொருட்டு விளங்க வில்லை. வடசொல்லென்பதைத் திசைப் பொருளில் வழங்கியிருத்தல் பொருந்தாததாகத் தோன்று கிறது. தொல்காப்பிய காலத்தில் வடக்கு என்னுஞ் சொல் எவ்வெப்பொருளில் வழங்கியதென்பது காட்ட நமக்கு நிகண்டுமில்லை அகராதியுமில்லை.

" வடக் கிருத்தல் என்னுஞ் சொற்றொடரொன்று உளது. அத்தொடரிலேனும் வடக்கென்பது திசையைக் குறிக்காது. ஊண் துறந்திருத்தலையே குறிக்கின்றது. அவ் வாறே வடசொல்லென்பதிலும் 'வட' வென்பது துற வைக் குறிக்குமேல், வடசொல்லென்பது 'நூலே கரகம்

முக்கோல் மணையே' உரியனவாகக் கொண்டிருந்த தமிழ் நாட்டந்தணர்களாகிய துறவொழுக்கமே மிகுதியாகக் கொண்டவர்கள் வழங்கிய தமிழின் பகுதியாகிய சொல்லா தல் வேண்டும். ஆனால் தீர்க்கமாகச் சொல்வதற்கேற்ற சான்றுகள் இதுவரையிற் கிட்டவில்லை."

## தொல்காப்பியர் கூறும் மறை

தொல்காப்பியர் பல்விடங்களிற் குறிப்பிட்டுள்ள மறை தமிழ் நூலே யெனக் கருத இடமுண்டு. வியாசர் வேதங்களை நான்கு கூறு படுத்துவதன் முன் தொல்காப்பியம் இயற்றப்பட்டதென்பது நச்சினார்க்கினியர் கூற்று. அதர்வணம் தலையாய வேதம் அன்று என்றும், பௌடிகம் தலவகாரம் சாமம் என்பன ஏனைய மூன்று வேதங்களின் பெயர்களென்றும் நச்சினார்க்கினியர் கூறியுள்ளார்.

"திருவாளர் பா. வே. மாணிக்க நாயகரவர்கள் மறையைக் குறித்து செய்துள்ள ஆராய்ச்சி வருமாறு :—

"தொல்காப்பியத் துட் சொன்ன மறை ஆரிய மறையென ஒப்பினுங் கூட உரையாசிரியர்கள் கொள்கைப் படி, வியாசர் ஆரியவேதங்களைச் சிக்ககற்றித் தொகுப்பதற்கு நெடுங்காலத்துக்கு முன்னரே தொல்காப்பியம் இயற்றலாயின தென்றலின், வியாசருக்குச் சில ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின் வந்த உரையாசிரியர் காலத்து வழங்கிய, இப்போது வழங்குகிற, வுட்ராப் துரையோ, மாக்ஸ்முல்லரோ பதிப்பித்த நான்கு வேதங்களல்ல வென்பது உரையாசிரியர் கூற்றாலேயே வெளிப்படை. வியாசருக்கு முந்திய ஆரியவேதமும், அவருக்குப் பிந்திய ஆரிய வேதமும் ஒன்றற் கொன்று படியாயின் வேதவியாச ரென்னும் பெரும் பெயர் பெற்றார் புரட்டியது தான் என்னை?

வியாசருக்கு முந்திய தொல்காப்பியத்தில் வியாசருக்குப் பிந்தியதும் அவரால் திருத்தப்பட்டதுமான ஆரிய வேதங்களினின்று உய்த்துப் பொருள்கோடல் ஆர்க்கியலாஜிகல் முறைக்கு ஒவ்வாது. தொல்காப்பியத்திற் சொன்ன மறை இத்தகைய தென்பது தெரிவதற்கு நாலாவது சுருதியாவது இப்போதில்லை.

'அந்தணர் மறை' யைத் தழுவியே தொல்காப்பியம் எழுதப்பட்டிருக்கிற தென்பதும் தொல்காப்பியத் துட் காணுதது அந்த அந்தணர் மறையிற் காணலாகும்படியும், அவ்வந்தணர் மறையிற் காணுதவை இத் தொல்காப்பியத் திற் காணலாகும்படியும் தொல்காப்பியம் அமைந்திருக்கிற தென்பது எனது நம்பிக்கை.

"ஆனல் அந்த அந்தணர் யாவர்? அவர் மறை யாது என்பனதான் புலப்படாத வற்றுட் சில. வடவேங்கடந் தென்குமரி ஆயிடைத் தமிழ் உலகத்து அந்தணர் என்பாரும் சிந்து நாட்டுப் பிராமணரென்பாரும் ஒன்றேயா? தமிழ் நாட்டு அந்தணர் மறையும் சிந்து நாட்டுப் பிராமணர் வேதமும் ஒன்றேயா? நான் மறை சதுர் வேதம், அந்தணர், அரசர், வணிகர், வேளாளர்; பிராமண க்ஷத்திரிய வைசிய சூத்திர என்னும் போலி ஒற்றுமை கொண்டு இரண்டும் ஒன்றென்பதா? உட்கிடை வேற்றுமைகண்டு அன்றென்பதா?

"தொல்காப்பியஞ் சொன்ன தமிழகத்து அந்தணர் மறை, வியாசருக்குப்பிந்திய ஆரிய வேதமன்றென்பதற்குச் சான்று தொல் காப்பியநூலிற் பல்லிடங்களிற் காணலாம். சிற் சிலவே இம்முடங்கலிற் குறிக்க வியலும். தமிழகத் தந்தணர் மறையோ தெய்வம் அஃறிணை யென்பது; மந்திரங்கள் மாந்தர் கிளந்தவை யென்பது; அம்மந்திரங்க

ளுக்கு ரிக்குகள் போன்ற அளவு முதலாகிய கட்டுப்பாடில வென்பது; கொடி, நிலை, கந்தழி, வள்ளி யென்ற சிறப்பின் மூன்றும் முதல வென்பது; ழ, ற, ன, எ, ஒவ்வுமன்றி ஆய்தம் முதலிய முச்சார்புவகை தொகையாகச் சாரவரும் எண்ணிறந்த எல்லா எழுத்துக்களுக்கும் அகத்தெழுவளி யிசை நுவல்வது. இத்தகையான பல அடிப்படையான கொள்கையினாலேயே இப்போதைய ஆரிய வேதத்தினின் றும் முற்றும் வேற்றுமைப்பட்டிருத்தல் காணலாம்.''

"'ஆர்ய' என்னுஞ் சொல் தொல்காப்பிய காலத்திற் குப் பின்னும் திவாகர காலத்துக்கு முன்னும் வந்து நுழைந்திருத்தல் கூடும். அப்போது அதற்கு மிலேச்சன்* என்னும் பொருள் இருந்ததும் நமக்குத் தெரியுமல்லவா? இன்னும் பிற்காலத்தில் 'ஆர்ய' என்பது மிலேச்சன் என் னும் பொருளை இழந்து ஆசான் என்னும் பொருளில் வந்ததும் தெரிந்ததே. ஆதலால் ஆர்யன் ஆசானென சில நூற்றாண்டுகளிற்றான் அந்த ஆர்யர் தமிழர்க்கு நெறி கற்பிக்கக் கூடுமேயன்றி ஆரியன் மிலேச்சனாயிருந்த காலத் தும் ஆரியன் என்பானே உண்டாயிராத தொல்காப்பிய காலத்தும் அதன் முற்காலத்தும் முந்த நாளையில் ஆரியன் போய், வியாசருக்குப் பிந்திய ஆர்ய வேதத்தை வைத்துக் கொண்டு பண்டைத் தமிழர்களுக்கு நெறி கற்பித்திருப் பானென்பது ஆர்க்கியலாஜிகல் ஆராய்ச்சிக்கும் பொருந் தாது. அவையல் கிளவிகள் அடுக்கடுக்காய்க் கிடக்கும் வேத வேதாங்கங்கள், வியாகரணங்களையுடைய பிற்கால சிந்து நாட்டு ஆர்யன், முந்திய தொல்காப்பிய காலத் தமிழ னுக்கு நெறி கற்பித்திருப்பானேல் அவையல் கிளவிக்கு

---

* "மிலேச்சாாரியர்" (பிங்கலம், திவாகரம்) "மிலேச்சரேயா ரியர்க் காமமிலேச்சரும் விதித்த பெயரே" (சூடாமணி நிகண்டு.)

மறுப்பு தொல்காப்பியத்திற் றோன்றியிராது. ஆரியன் ஆசானுன சில நூற்முண்டுகளில் அவன் நெறிகளைக்கடைப் பிடித்துத் தமிழரும் அவையல் கிளவிகளைப் பேச்சிலும் எழுத்திலும் வழங்கிவருவது வெட்டவெளியாகத் தெரி கின்றதன்றே? ஆயினும் அவையல் கிளவிகளை மாத்திரம் ஆரிய மொழியில்தான் வழங்குவார்கள்.''

"The hatred which existed between the early Dravidians and the Aryans is best preserved in the Kurichchans, a hill tribe in Malabar, (corresponding to the Kuravas of the Tamil country) custom of plastering their huts with cowdung to remove the pollution caused by the entrance of a Brahman."

(Tamil Studies, p. 90.)

மந்திரம்

"நிறைமொழி மாந்தர் ஆணையிற்கிளந்த மறைமொழி தானே மந்திர மென்ப" என மந்திரப் பண்பு தொல்காப் பியத்துட் கூறப்பட்டது. இதனுரை "சொல்லிய சொல் லின் பொருண்மை யாண்டுங் குறைவின்றிப் பயக்கச் சொல் லும் ஆற்றலுடையார் ஆணையாற் கிளக்கப்பட்டுப் புறத் தார்க்குப் புலனுகாமல் மறைத்துச் சொல்லுஞ் சொற் ருெடர்." இளம்பூரண வடிகள் தமிழ் மந்திரத்துக்கு உதாரணம்,

" திரி திரி சுவாகா கன்று கொண்டு
கறவையும் வத்திக்க சுவாகா "

எனக் காட்டியுள்ளார்.

"வச்சிரம் வாவி நிறைமதி முக்குடை
நெற்றிநேர் வாங்கல் விலங்கறுத்த
லுட்சக்கர வடத்துட் புள்ளியென்பதே
புட்கரனார் கண்ட பண்பு"

"இது மந்திர நூலிற் புட்கரனார்கண்ட எழுத்துக் குறி வெண்பா" என்னும் யாப்பருங் கலவிருத்தியால் அக் காலத்து மந்திர நூல்கள் பல விருந்தனவென்று விளங்கும். சமஸ்கிருத மொழியிற் சொல்லப்படுவனவெல்லாம் மந்திரங்களென ஓர் பிழையான விளக்கம் நம்மவர் பெரும் பாலார் உள்ளத்தில் வேரூன்றி யிருக்கின்றது. இது சமஸ்கிருத மொழியைச் சமய மொழியாகக் கொண்டதினால் நேர்ந்ததாகும்.

"மன்னியவித் தமிழ்க்கிளவி மந்திரங்கள் கணித்தடியேன்
செங்நெறியின் வழுவாதித்திருக்காஞ்சி வரைப்பி
னுன்னனுக்க ணுயினிதுறைந்திடவும் பெறவேண்டு
மின்ன வரமெனக் கருளா யெம்பெருமா னென்றிரந்தான்"

என அகத்திய முனிவர் சிவபெருமானை வேண்டிக் கொண்டதாகக் காஞ்சிபுராணங் கூறும்.

## தமிழ் நூல்களின் அழிவு

"தமிழுக்குக் காலாந்தரத்தில் இரண்டு பெரும் பூதங்களால் இரண்டு பேரிடையூறுகள் நிகழ்ந்தன. குமரியாறும் அதன் தெற்கேயுள்ள நாடுகளுஞ் சமுத்திரத்தின்வாய்ப்பட் டமிழ்ந்தியபோது தமிழ்ச் சங்கத்துக்கு ஆலயமாய் சர்வ கிரந்த மண்டபமா யிருந்த கபாடபுரம் அதன்கண்ணிருந்த எண்ணுயிரத் தொருநூற்று நாற்பத்தொன்பது கிரந்தங்களோடு வருண பகவானுக்கு ஆசமனமாயிற்று. பாண்டிய நாட்டின் வடபாலில் ஆங்காங்கு சிதறுண்டு குலாவிய சாதா

ரண சனவினோதார்த்தமான சில கிரந்தங்களும் பள்ளிக் கூடச் சிறுவர் தங்கல்வித் தேர்ச்சிக்குரிய வாய்வழங்கிய சில நூல்களுஞ் சில்லறை வாகடாதிகளுமே பிற்காலத்தார் கைக்கு எட்டுவனவாயின.

'ஏரண முருவம் யோகமிசை கணக்கிரதஞ் சாலந்
தாரண மறமே சந்தந் தம்பநீர் நிலமுலோகம்
மாரணம் பொருளென் றின்னமான நூல் யாவும்வாரி
வாரணங் கொண்ட தந்தோ வழிவழிப் பெயருமான'

எனப் புலம்பிய நம்முன்னோ ரிடத்திலிருந்து நாமடைந்த பிதிரார்ச்சிதம் வெறும் பெயரினுஞ் சிலவேயாம்.

"இப்பால் வடமதுரைச் சங்கமேற்பட்டு இடமிடந் தோறும் நடைபெற்றுள்ள சுவடிகளைச் சேகரித்துப் புது நூல்களை அரங்கேற்றி வைத்தது. அதன் பின் சமண வித்துவான்கள் தலையெடுத்துப் பல பல நூல்களியற்றித் தமிழை வளர்த்தனர். அதன் மேல் இதிகாச புராணாதிகள் சமஸ்கிருத மொழியினின்று வித்துவான்களால் மொழி பெயர்க்கப்பட்டு மறுபடியுந் தமிழ் தலையெடுத்தபோது நாடு மகமதியர் கைப்பட அவர்கள் கோருனுக்கு மாறாக வும் வேறாவதோ கிரந்தங்கள் மண்மேலென்று மதவைராக்கி யங் கொண்டு அந்தோ நமது நூற் சாலைகளனைத்தும் நீறாக அக்கினி பகவானுக்குத்தத்தஞ் செய்தனர். இவர்கள் கைக்குத் தப்பிய சின்னூல்களே நமக்குப் பெரிய அரிய நூல்களாயின. அவையும் இக்காலத்து இன்னும் நமக்கு என்ன பேரவதி வருமோ வென்று பயந்தாற் போல அங்கு மிங்கு மொளித்துக்கிடந்து படிப்பாரும் எழுதுவாரும் பரிபாலிப்பாருமின்றிச் செல்லுத்துளைத்த புள்ளி யன்றி மெய்ப்புள்ளி விரவாத செந்தாளேட்டிற்—பல் துளைத்து வண்டு மணலுழுத வரி யெழுத்து உடையவாய்ச் செல்லா

லரிக்கப்பட்டும் பாணங்களாற் றுளைக்கப் பெற்றும் மூன்று வது பாணமாகிய மண்ணின் வாட்பபடுகின்றன" (கலித் தொகைப் பதிப்புரை. திருவாளர் சி. வை. தாமோதரம் பிள்ளை.)

"அறம் பொருள் இன்பம் வீடு பெறுமாறு சொன்ன நூல்களும் அவை சார்பாகவந்த சோதிடமும் சோகினமும் வக்கின கிரந்த மந்திரவாதமும், மருத்துவநூலும் சாமுத் திரிபமும் நிலைத்து நூலும் ஆயுத நூலும் பத்துவிச்சையும், ஆடை நூலும் அணிகல நூலும் அருங்கல நூலும் முத லாயவற்றுள்ள மறைப் பொருளுபதேசமும்" என்னும் யாப்பருங்கல விருத்தியால் இலக்கண இலக்கியங்களல்லாத பல தொழில்களைக் கற்பிக்கும் பல கருவி நூல்களும் இருந் தன வென்பது புலனாகின்றது. ஓர் நாவிதன் அலங்காரம் என்னும் நாவித நூல் இயற்றி அரசனிடம் பரிசு பெற்ற தாக சிந்தாமணியிற் சொல்லப்படுகிறது. வீமனாற் செய்யப் பட்டமடை நூலொன்று உளதாக சிறுபாணாற்றுப்படை கூறுகின்றது. இன்ப சாகரம் முதலிய பல இன்ப நூல்கள் இறந்தன என்பர். காமக்கணிகையர்க்கு அறுபத்துநான்கு கலைகள் உரித்தாக மணிமேகலையிற் சொல்லப்படுகிறது. இன்னும் கந்தர்வநூல் கருடநூல் மந்திரநூல் கணக்குநூல் முதலிய பல நூல்களைப்பற்றி யாப்பருங்கல விருத்தியிற் சொல்லப்படுகின்றது.

## தமிழில் பிறமொழிக் கலப்பு

ஒருமொழி பேசும் மக்கள் இன்னொருமொழி பேசும் மக்களோடு கலக்க நேர்ந்தால் ஒருவர் பேசும் மொழியில் மற் றவர் மொழிச் சொற்கள் சென்று கலத்தல் இயல்பு. தமிழ் மக்கள் பிறநாடுகளிற் சென்று வாணிகம் நடத்தினமையா னும் அரசரின் கீழ் பல தொழில்களில் அமர்ந்தமையானும்

பிறமொழிச் சொற்கள் தமிழிலும் தமிழ்ச் சொற்கள் ஆரியம் எபிரேயம் கிரீக் முதலிய மொழிகளிலும் புகுந்தன. தமிழ்ச் சொற்கள் பிறமொழிகளில் புகுங்கால் அம்மொழி இயைபுக்கேற்பத்திரித்து வழங்கப்படும். அப்படியே பிற மொழிச் சொற்கள் தமிழிற் புகுங்கால் அவை தமிழின் அமைதிக்கேற்பத்திரித்து வழங்கப்பட்டன. இம்முறையினால் அவை தமிழ்ச் சொற்களோ அன்றோவெனப் பிரித்தறிவது அரிதாயிருந்தன. பிற்காலங்களில் இம்முறை கவனிக்கப்படாது விடப்பட்டது. ஆரியச் சொற்கள் கணக்கின்றித் தமிழுடன் கலக்கப் புகுந்த பிற்காலத்தில் அவை தம்முருவுடனேயே வழங்கப்படலாயின. அதனால் தமிழின் சுவை பெரிதுங் குறைவுற்றது. ஒரு பொருளைக் குறிப்பதற்குரிய தமிழ்ச் சொல்லிருப்ப அதனைப் பிறமொழிச் சொற்களால் வழங்கத் தலைப்படுதல் தமிழில் அழிவுக்கு ஏதுவாகும்.

"அநேக சமஸ்கிருத பதங்கள் தமிழில் வந்து கலந்தனவாயினும் வண்டு கைக்கொண்ட கிருமிபோலவும் வேரின் வாய்ப்பட்ட எருப்போலவும் சமஸ்க்ருத நிறமுங் குணமுமின்றி ஆர்த்தபம், மயிடம், பகுதி, விகுதி முதலியன போலச் சுத்த தமிழுருவாகவே திரிந்து வந்தன. அப்பால் முன் எண்ணூறு வருஷம் இதிகாச காலம். பற்பல புராண காவியங்களும் கலைஞான நூல்களும் இக்காலத்தில் எழுதப்பட்டனவாயினும் தமிழிற் சிறந்த இதிகாசங்களாகிய நைடதம், பாரதம், இராமாயணம், இரகுவமிசமென்பன தோன்றிய காலமாதலின் இதிகாசகாலமென்றும். வட மொழியிலிருந்து புராணேதிகாசங்கள், சமய சாஸ்திரங்கள், தலமான்மியங்கள்,கணிதசோதிடாதிகள் சுத்த சமஸ்கிருதாகாரமாய்த் தமிழில் மொய்க்கத் தலைப்பட்டதும் வட மொழிப் பிரளயத்தைக் கண்டு தமிழ் சகிக்கலாற்றாது

மூழ்கியதும் இக்காலத்திலேதான். போகர் முதலிய ஆயு ளூலாரும் பிரமர் முதலிய கணித வல்லாரும் செந்தமிழ் அணங்கின்மேனியெல்லாம் வெந்தணல் கொளுத்தி வெதுப் பிய வாவெனக்-கொடுந்தமிழ் மலிந்து கொப்புளித்தெழுந்து புண்படச் செய்ததிக்காலமே * * * * *. பின்பு தமிழ் படிப்படியாகத் தமிழ்கல்விக்கு ஆசுபரிபாலனங் குறைந்து, சமஸ்கிருதம் வல்லாருக்கு மேன்மையுண்டாயிற்று. தமிழ் தனிநில்லாது தத்தளித்து வடமொழி வல்லார் கைப்பட்டு அம்மைவார்த்த உடம்புபோலத் தேகமெல்லாஞ் சமஸ் கிருதத் தழும்பு ஏறியது. கொப்புளித்த மேனியிற் கொடு முள்ளு மேறியதெனத் திசைச்சொற்களும் வந்து மலிந்தன." (வீரசோழியப் பதிப்புரை.)

"பட்டினப்பாலையில் உள்ள வடசொற்கள் ஒன்று அல்லது இரண்டு என்றும், நெடு நல்வாடையில் 20 வரை யில் என்றும், 782 அடிகளுடைய மதுரைக் காஞ்சியில் 50-க்கு அதிகமில்லை யென்றும், சங்ககாலத்தில் வடசொற் களை தமிழுடன் அதிகம் கலந்து செய்யுளியற்றல் புலமைக் குறைவாகக் கருதப்பட்ட தென்றும், ஒரு மொழியோடு இயைபில்லாத பிறமொழிச் சொற்களைக் கலந்து வழங்கு தல் முத்துகளுடன் மிளகுகளைக் கலந்து கோத்தல்போலாகு மென இரண்டு கன்னடப் புலவர்கள் கூறியுள்ளார்க ளென்றும் Prof. சுந்தரம் பிள்ளை அவர்கள் குறிப்பிட்டிருக் கின்றனர்." (Tamil Studies, p. 174).

## அரசாட்சியார் தமிழுக்குக் காட்டும் ஆதரவு.

அரசாட்சியாருந் தமது வித்தியாசாலை மாணாக்கர் களுக்கு அவரவர் சொந்தப் பாஷையையும் கற்பிக்கும் விருப்புடையராய்த் தமிழ்ப் பிள்ளைகளுக்கும் அவர்களது சுயபாஷையாகிய தமிழை ஒரு அளவில் ஓதுவிக்கின்றனர்.

அது எவ்வித மென்றால் ஒருவனை நீந்தக் கற்பிக்கும் ஓர் ஆசிரியன் அவனை ஏரி, நதி, கிணறு, குளங்களில் இறங்க விடாது குடத்திற் றண்ணீரை மொண்டு சிறுகுழியில் விட்டுக் கால் மறையாத் தண்ணீரில் மாரடிக்கவிட்டாற்போல வாம். கடல் நீரெனில் உடல் கசியும் உப்புப் பூக்கும் குளநீரெனிற் சளிப்பிடிக்கும் தலைநோவுண்டாகும், ஆற்று நீரெனிற் சர்ப்பந்தீண்டும் முதலை பிடிக்கும் என்றவிதமே ஓரோர் நூலுக்கு ஓரோர் குற்றஞ் சாற்றி ஒன்றிலு மிறங்கவிடாது ஒரு நூலில் ஒரு குடமும் இன்னொரு நூலிற் பின்னொரு குடமுமாக அள்ளி வைத்துப் படிப்பிக்கும் அவர்கள் முயற்சியாற் பெரும்பயன் விளைவதேயில்லை. நிகண்டு கற்று இலக்கிய வாராய்ச்சி இல்லாதவர்களுக்கு சிற்றிலக்கணங்களை மாத்திரங் கற்பித்தல் அன்னோர் வா வந்தானெனக் கொண்டு கா கந்தானென்றுஞ் சா செத்தானெனக் கொண்டு தா தெத்தானெனவும கூறுவார் போலத் தமிழைப் பலவாறு விபரீதப் படுத்துகின்றனர். இதனாற் றமிழுக்கு வருங் கெடுதியைக் குறித்து மிகவும் அஞ்சவேண்டியிருக்கிறது.

(வி. ப. உரை).

# இயல் ௫

# தமிழர்

## நாகரிகம்

### நிலப்பாகுபாடும் திணைமக்களும்

"தமிழர்கள் மிகவும் பழைய காலத்தில் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்னும் நான்கு நிலங்களில் வசித்து வந்தார்கள். மலையையும் மலைசார்ந்த இடத்தையும் குறிஞ்சி நிலம் என்றும், காட்டையும் காடுசார்ந்த இடத்தையும் முல்லை நிலமென்றும், வயலையும் வயல்சார்ந்த இடத்தையும் மருதநில மென்றும், கடலையும் கடல்சார்ந்த இடத்தையும் நெய்தல் நிலமென்றும் தமிழர்கள் நிலத்தை நான்கு பகுதிகளாக வகுத்து வழங்கி வந்தார்கள். 'இவற்றால் பூமிக்கு நானிலம் என்னும் பெயர் தமிழில் வழங்குவதாயிற்று. குறிஞ்சி நிலத்தினும், முல்லை நிலத்தினும் சில பகுதிகள் சூரியனது வெப்ப மிகுதியால் தம்மியல் பிழந்து மணல் வெளியாக மாறுதலுமுண்டு; அதனைப் பாலை நில மென்ப. அவ்வந்நிலங்களுக்கு இவர் இவர் இன்ன இன்ன நிலத்தில் உறைபவர் என்பதைக் குறிக்கும் பெயர்களுண்டு. அப்பெயர் ஆடவருக்கும் மகளிருக்கும் வெவ்வேறாக வழங்கின.

"குறிஞ்சி நிலமக்களுள் கல்வி, கேள்வி, வீரம் முதலியவற்றால் ஒப்புயர் வற்றவஞ்கிய ஆடவன், பொருப்பன், வெற்பன், சிலம்பன் எனப்படுவன். இவனே இந்நிலமக்களின் தலைவன். மற்ற ஆடவர் கானவர் எனப்படுவர்.

"கல்வி முதலியவற்றால் அங்ஙனஞ் சிறந்த பெண், குறத்தி, கொடிச்சி யெனப் படுவாள்; இவள் இந்நிலத்

தலைவன் மனைக்கிழத்தி. மற்றைப் பெண்கள் நுறத்தியர் எனப்படுவர்.

" முல்லை நிலமக்களுள் முற்கூறியாங்கு சிறந்த ஆடவன் குறும்பொறைநாடன் தோன்றல் எனப்படுவன்; இவன் இந்நிலமக்களின் தலைவன். மற்றை ஆடவர் இடையர், ஆயர் எனப்படுவர்.

" முற்கூறியாங்குச் சிறந்த பெண் மனைவி, கிழத்தி எனப்படுவாள். இவள் இந்நிலத்தலைவன் மனைவி. மற்றைப் பெண்கள் இடைச்சியர், ஆய்ச்சியர் எனப் படுவார்கள்.

"மருதநிலமக்களுள் அங்ஙனம் உயர்ந்த ஆடவன் ஊரன், மகிழ்நன் எனப்படுவன்; இவன் இந்நிலமக்களின் தலைவன். மற்றை ஆடவர் உழவர் கடையர் எனப்படுவர்.

" முற்கூறி யாங்குச் சிறந்த பெண் கிழத்தி, மனைவி எனப்படுவாள்; இவள் இந்நிலத் தலைவன் இற்கிழத்தி. மற்றைப் பெண்கள் உழத்தியர், கடைச்சியர் எனப்படுவார்கள்.

" நெய்தல் நிலமக்களுள் முற்கூறியாங்கு சிறந்த ஆடவன் சேர்ப்பன், புலம்பன் எனப்படுவன்; இவன் இந்நில மக்களின் தலைவன். மற்றை ஆடவர் பரதர், அளவர், நுளையர் எனப்படுவர்.

" முற்கூறியாங்கு சிறந்த பெண் பரத்தி, நுளைச்சி எனப்படுவாள்; இவள் இந்நிலத்தலைவன் மனைவி. மற்றைப் பெண்கள் பரத்தியர், அளத்தியர், நுளைச்சியர் எனப்படுவார்கள்.

பாலை நிலமக்களுள் முற்கூறியாங்குச் சிறந்த ஆடவன் விடலை, காளை, மீளி எனப்படுவன்; இவன் இந்நிலமக்களின் தலைவன். மற்றை ஆடவர் எயினர், மறவர் எனப்படுவர்.

"மூர்கூறியார்க்குச் சிறந்தபெண் எயிற்றி எனப்படு வாள்; இவள் இந்நிலத்தலைவன் மனையாள். மற்றைப் பெண்கள் எயிற்றியர், மறத்தியர் எனப்படுவார்கள்.

"தமிழர்கள் பண்டைக் காலத்தில் இங்ஙனம் நிலம் பற்றிய பகுப்பையே உடையவர்களா யிருந்தார்கள். இவர்களுள் ஒரு நிலத்து ஆடவன் தன்னிலத்துப் பெண்ணை மணந்து கொள்ளினுங் கொள்ளுவன்; வேறு நிலத்துப் பெண்ணை மணந்து கொள்ளினும் கொள்ளுவான். நிலம்பற்றிய இப்பகுப்பு உயர்வு தாழ்வைக் குறித்து வந்ததன்று; இவர் இன்ன நிலமக்கள் என்பதை உணர்த்தும் அளவினதேயாகும். இப்பகுப்பு எதுபோன்றதெனில் இவன் கோயூரான், இவன் குன்றத்தூரான், இவன் காஞ்சிபுரத்தான் இவன் காவேரிப்பாக்கத்தான் என்பனபோன்றதாகும்."

## சாதி

பழைய தமிழர்கள் பிறப்பினால் உயர்வு தாழ்வு கற்பிக்கவில்லை. எல்லா நாடுகளிலும் எப்படி அந்தணர் (priests அரசர் (rulers), வணிகர் (merchants) வேளாளர் (agriculturists), கைத் தொழிலாளர் (labourers) கீழோர் (menials), காணப்படுகின்றனரோ அப்படியே தமிழ்நாட்டிலு மிருந்தனர். ஒவ்வொருவரும் தம் சீவனத்தின்பொருட்டு மேற்கொண்ட தொழில்கள் பற்றியே சாதி ஏற்படுவதாயிற்று. தகப்பனுயுள்ள ஒருவன் தான் பிழைப்புக்காகச் செய்துவந்த தொழிலையே தன் மகனும் பின்பற்ற வேண்டுமென விரும்புவதியல்பு. இவ்விருப்பமே தொடக்கத்தில் தனித்தனி சாதி தோன்றுவதற்குக் காரணமா யிருந்தது. இப்போது ஒவ்வொரு சாதியினரைக் குறிக்கும் பெயரும் அவ்வவர் மேற் கொண்டிருக்கும்

தொழிலைப் பற்றியதாகவே காணப்படுகின்றது. பிற்காலத்து ஒவ்வொரு குலமும் பிறப்பினாலே உண்டான தென்னும் நம்பிக்கை உண்டாயது.

"பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்"

என்னும் குறளும்,

"நல்ல குலமென்றுந் தீய குலமென்றுஞ்
சொல்லள வல்லாற் பொருளில்லை—தொல்சிறப்பி
னொண்பொரு ளொன்றோ தவங்கல்வி யாள்வினை
யென்றிவற்றா னாகுங் குலம்"

என்னும் நாலடியாரும் பிறப்பினால் குலமுண்டு என்பதை மறுக்க எழுந்தனவாகும்.

ஆரிய நாட்டவர்க்குரிய சாதிக் கட்டுப்பாடு, சமயம், பழக்க வழக்கம் முதலாயின தமிழரினின்றும் புறம்பானவை. முதற்கண் அவர்கள் சாதிப்பிரிவு நிறம்பற்றி ஏற்பட்டது. "வருணம" என்னும் பெயரே அதனைப் புலப்படுத்துகின்றது. பிராமணர், க்ஷத்திரியர், வைசியர் எனத் தங் குழுவினைப் பிரித்துக்கொண்டு, தாம் வென்று அடிப்படுத்திய மக்களைச் சூத்திரர் என்னும் நான்காம் பிரிவாகக் கொண்டனர். இவர்களுக்கு அடிமைத் தொழில் மாத்திரம் உரித்து. இவற்றின் விரிவு அவர்கள் நீதி நூல்களாகிய மிருதிகளிற் பரக்கக் காணலாம். மேற் காட்டப்பட்ட வெவ்வேறு வருணத்துப் பெண்கள் ஆண்கள் சோரமாகவோ சோரமில்லாமலோ ஒருவரை ஒருவர் மருவப் பிறந்த சந்ததியாருக்கு ஒவ்வோர் தொழில் உரிமையாக்கப்பட்டது. உதாரணம் :—பிராமணனுக்கு வைசிய நங்கையிடத்திற் பிறந்தவன் அம்பஷ்டன். இவனுக்குத் தொழில் இரண வைத்தியஞ் செய்தல். க்ஷத்திரியனுக்குப் பிராமணப் பெண்ணி

டத்தப் பிறந்தவன் சூதன். இவனுக்குத் தொழில் தேரோட்டுதல்.

ஆரிய மக்கள் தென்னாடடைந்து தமிழருடன் கலந்துறைந்த ஞான்று ஆரியக் கொள்கைகள் பல தமிழகத்திற் சுவறின. அதனால் பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்னும் வடநாட்டாருக்குரிய பெயர்கள் தமிழ் நாட்டு அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்னும் பெயர்களோடு ஒன்றாக வைத்துக் கருதப்படலாயின. இக் கருத்தைத் தழுவியே பிற்காலத்து விளங்கிய இளம்பூரண வடிகள், நச்சினார்க்கினியர், பேராசிரியர் முதலாயினோர் நூல்களுக் குரை வகுத்தனர். "ஒரு பொருளுக்குப் பல பெயர்களைத் தேடிக் கூட்டிக் கூறுதலையே நோக்கமாகக் கொண்ட நிகண்டாசிரியர்களும் பிற்காலத்து இலக்கியஞ் செய்த சில ஆசிரியர்களும் தொல்காப்பியர் முதலிய தொல்லாசிரியர்களின்கருத்தினைக் கருதாது, வேளாளர்க்குச் சூத்திரர் என்னும் பெயரினையுங் கூட்டிக் கூறிவிட்டார்கள். அது பெரும்பிழையாம். கவிச் சக்கரவர்த்தியாகிய கம்பநாடர் தொல்லாசிரியர்களின் கருத்தை நன்குணர்ந்தவராதலின் வேளாளரைச் சூத்திரரென எங்குங் கூறாராயினர்" (சங்க நூல்)

" The Hindu theory that mankind is divided into four Varnas, or groups of castes—Brahman, Kshatriya, Vaisya and Sudra was wholly foreign to the southerners" "Dravidan culture :—The Brahamanical ideas and institutions, although universally diffused in every province have not been wholly victorious. Prehistoric forms of worship and many utterly un-Aryan social practices survive specially in the peninsula among the People speaking Dravidian languages. We see there the strange spectacle of

any exaggerated regard for caste co-existing with sorts of weird notions and customs alied to Brahman tradition. While it is probable that the Dravidian civilization is even older than the Indo-Aryan Brahmanical culture of the north which long regarded in the south as an unwelcome intruder to be resisted strenuously."

" The amount of Aryan blood in the people to the south of the Narbada is extremely small in fact negligible." (Oxford History of India—Vincent Smith, C. I. E.).

### அந்தணர்

திருக்குறள் நீத்தார் பெருமை என்னும் அதிகாரத்துள்,

" அந்தணரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுகலான் "

என அந்தணரென்னும் பெயர் நீத்தாருக்குரித்தாகத் திருவள்ளுவ நாயனார் கூறியிருக்கின்றனர். இதற்குப் பரிமேலழகர் விசேட வுரையில், "அந்தணரென்பது அழகிய தட்பத்தினையுடையாரென ஏதுப் பெயராகலின் அஃது அவ்வருளுடையார் மேலன்றிச் செல்லாதென்பது கருத்து " என்று கூறினார்.

" நூலேகரக முக்கோன் மணையே
ஆயுங் காலை யந்தணர்க் குரிய "

என்னும் தொல்காப்பிய மரபிற் சூத்திரத்தானும் அந்தணரென்போர் துறவிகளே யென்பது இனிது புலனாகின்றது.

' அந்தத்தை அணவுவோர் அந்தணர் என்றது வேதாந்தத்தையே பொருளெனக் கொண்டு பார்ப்பார்,

என்றும், 'அந்தணர்காஷாயம் போர்த்தகுழாங்கள் என்றும் நச்சினார்க்கினியர் உரைப்பர்.

"அந்தண்மை பூண்ட வருமறை யந்தத்துச்
சிந்தை செய்யந்தணர்"

என்னும் திருமந்திரமும் வேதாந்தத்தை அணவுவோர் அந்தணர் என்பதையே உணர்த்திற்று. வேதாந்தத்தையே பொருளெனப் பார்த்தலின் பார்ப்பானென்னும் பெயரும் அந்தணர்க்குரியதாயிற்று. அந்தணர் தமிழ் மக்களல்லாத பிறரெனச் சிலர் கருதுவது பிழையான கோட்பாடாகும்.

"எறித்தரு கதிர்தாங்கி யேந்திய குடை நீழ
லுறித் தாழ்ந்த கரகமு முரைசான்ற முக்கோலு
நெறிப்படச் சுவலசை இ வேறோரா நெஞ்சத்துக்
குறிப் பேவல்செய்மாலைக் கொளைநடை யந்தணீர்."
(கலி—பாலை, 91.)

பார்ப்பான்

அகப் பொருட்டுறையில் வாயில்களில் ஒருவராகச் சொல்லப்படும் பார்ப்பான் வேறு அந்தணன் வேறு என்பது,

"தோழி தாயே பார்ப்பான் பாங்கன்
பாணன் பாடினி யிளையர் விருந்தினர்
கூத்தர் விறலியர் அறிவர் கண்டோர்
யாத்த சிறப்பின் வாயில்க ளென்ப"

"காமநிலை யுரைத்தலும் தேர்நிலை யுரைத்தலும்
கிழவோன் குறிப்பினை யெடுத்தனர் மொழிதலும்
ஆவொடு பட்ட நிமித்தங் கூறலும்
செலவுறு கிளவியும் செலவழுங்கு கிளவியும்
அன்னவை பிறவும் பார்ப்பார்க்குரிய"

என்னும் தொல்காப்பியச் சூத்திரங்களால் புலனாகும். பார்ப்பான் என்பதற்கு நன்றும் தீதும் ஆராய்ந்துரைப் போன் எனப் பொருள் கூறுவர் பேராசிரியர்.

## அறிவர்

இவர்கள் இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் மூன்று காலத்தையும் அறிந்த பெரியோர். "யோகிகளாய் உபாயங்களால் முக்காலமுமுணர்ந்த மாமூலர் முதலியோர் இவ்வறிவரில் ஒரு சாரார்" என்று கூறுவர் நச்சினார்க்கினியர்

"மறுவில் செய்தி மூவகைக் காலமு
நெறியினாற்றிய வறிவன் றேயமும்"

என்பது தொல்காப்பியம்.

"மூவகைக்காலமும் நெறியில் ஆற்றலாவது பகலுமிரவும் இடைவிடாமல் ஆகாயத்தைப் பார்த்து ஆண்டு நிகழும் வில்லும், மின்னும், ஊர்கோளும், தூமமும், மீன் வீழ்வும் கோணிலையும், மழை நிலையும், பிறவும் பார்த்துக் கூறுதல்" என்பர் இளம்பூரணவடிகள்.

## தாபதர்

இவர் தவ வேடம் பூண்டு விரதவொழுக்கம் மேற்கொண்ட பெரியோர். "தவஞ் செய்வார்க்குரியன ஊணசையின்மை, நீர் நசையின்மை, வெப்பம் பொறுத்தல் தட்பம் பொறுத்தல் இடம் வரையறுத்தல், வாய்வாளாமை என எட்டும்; இவற்றிற்கு உணவினும் நீரினுஞ் சென்ற மனத்தைத் தடுத்தலும், ஐந்தீ நாப்பணும் நீர் நிலையினும் நிற்றலுங், கடலுங்காடும் மலையும் முதலிய வற்றில் நிற்றலுந் தாமரையும் ஆம்பலும் யாமையும் முதலிய ஆசனத்திருத்

தலும். உண்டற்காலை உரையாடாமையும், துறந்தநாட்டொட்டும் வாய்வாளாமையும் பொருளென்றுணர்க. "இனி யோகஞ் செய்வார்க்குரியன, இயமம், நியமம், வளி நிலை, தொகை நிலை, பொறை நிலை, நினைதல், சமாதி, என எட்டும்

'பொய் கொலை களவே காமம் பொருணசை
யிவ்வகை யைந்து மடக்கிய தியமம்'

'பெற்றதற் குவத்தல் பிழம்பு நனியுணர்தல்
கற்பன கற்றல் கழிகடுந் தூய்மை'

'பூசனைப் பெரும்பய மாசாற் களித்த லொடு
நயனுடை மரபி னியம மைந்தே'.

'நிற்ற லிருத்தல் கிடத்தல் நடத்தலென்
றொத்த நான்கி னொல்கா நிலைமையோ
டின்பம் பயக்குஞ் சமய முதலிய
வந்தமில் சிறப்பி னாசன மாகும்'

'உந்தியொடு புணர்ந்த விருவகை வளியுந்
தந்த மியக்கந் தடுப்பது வளிநிலை'

'பொறியுணர் வெல்லாம் புலத்தின் வாழாம
லொருவழிப் படுப்பது தொகை நிலைப்புறனே'

'மனத்தினை யொருவழி நிறுப்பது பொறையே'

'நிறுத்திய வம்மன நிலை திரியாமற்
குறித்த பொருளொடு கொளுத்த னினைவே'

'அங்ஙனங் குறித்த வாய்முதற் பொருளொடு
தான் பிறனாகாத் தகையது சமாதி"

(ந. உரை மேற்கோள்)

## தவத்தினியல்பு

" நீஇ ராட னிலக்கிடை கோட
ரேூ லுடுத்த றெல்லெரி யோம்ப
லூரடை யாமை யுறுசடை புனைதல்
காட்டி லுணவு கடவுட் பூசை
யேற்ற தவத்தி னியல்பென மொழிப "

" மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்த தொழித்து விடின் "

என்னும் குறளால் சடைபுனைதலும் மழித்தலும் தாபதருக்கு இயல்பு என விளங்குகின்றது. மழித்தல் புத்த சமய வழக்குப் போலும்.

## தமிழர் சமயம்

தமிழ் மக்கள் தொன்மை தொட்டுக் கைக்கொண்டு வரும் சமயம் சைவமேயாம். புத்த சமயம் தலையெடுப்பதன்முன் சைவ மதமே இந்தியா இலங்கை முழுமையும் பரவி யிருந்தது. கி. மு. 543-ல் வட தேயத்தினின்றும் இலங்கையை அடைந்த விஜயனின் மதம் சைவம் என இலங்கைச் சரித்திரத்திற் படிக்கின்றோம். விஜயனுக்குப் பின் இராச்சியம் எய்திய மன்னர்கள் தம் பெயரோடு சிவன் என்னும் பெயரையும் வைத்துச் சிறப்பித்தனர். விஜயனுடைய வருகைக்குப் பன்னெடுங் காலத்துக்குமுன் நிகழ்ந்த பாரதம் இராமாயணத்திற் சொல்லப்படும் அருச்சுனன், அஸ்வத்தாமன், இராமர் முதலிய வீரர்கள் சிறந்த சிவபத்தர்கள் என அறிகின்றோம்.

"ஏர்தரு மேழுலகேத்த வெவ்வுருவுந் தன்னுருவா
யார்கலி சூழ்தென் னிலங்கை யழகர் வண்டோதரிக்கு
பேரருளின்ப மளித்த பெருந்துறை மேயபிரானைச்
சீரிய வாயாற் குயிலே தென்பாண்டி நாட்டானைகூவாய்"

என மாணிக்கவாசக சுவாமிகள் திருவாசகத்திற் கூறியிருக்கின்றார். இராமாயண காலத்துக்கு முற்பட்ட சிங்கன் சூரன், தாருகன், காசிபர் முதலானோரும் சிவமதத்தவர்களே.

"தென்னாடுடைய சிவனே போற்றி" பாண்டி நாடே பழம்பதியாகவும் "பத்தி செய்யடியரைப் பரம்பரத்துய்ப்பவன்" "தன்னார் தமிழளிக்குந் தண் பாண்டி நாட்டானை, என மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச் செய்திருக்குமாற்றான் தென்னாட்டிற் றொன்மையே தமிழ் மொழியும் சிவநெறியும் உண்டென விளங்கும்.

கலித்தொகை, அகநானூறு, புறநானூறு முதலிய சங்க விலக்கியங்களிற் காணப்படும் கடவுள் வாழ்த்துகளால் சிவ வழிபாடு தென்னாட்டில் வியாபித்திருந்ததென்பது வெளிச்சமாகின்றது.

முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் பாலை என்னும் நிலங்களில் வாழ்ந்தோர் முறையே மாயோன் முருகன் வேந்தன் வருணன் காடுகிழாள் முதலிய கடவுளரை வழிபட்டனர். முருக வழிபாட்டைக் குறித்துத் திருமுருகாற்றுப்படை விரிவாகக் கூறுகின்றது.

"முல்லை நிலத்துக் கோவலர் பல்லா பயன்தருதற்கு மாயோன் ஆகுதி பயக்கும் ஆபல காக்கவெனக் குரவை பல தழீஇமடை பல கொடுத்தலின் ஆண்டு அவன் வெளிப்படுமென்றார்."

"குறிஞ்சி நிலத்துக்குறவர் முதலியோர் குழீஇவெறி யயர்தற்கு வேண்டும் பொருள் கொண்டு வெறியயர்பவாக லின் ஆண்டு முருகன் வெளிப்படுமென்றார். நெய்தல் நிலத்தில் நுளையர்க்கு வலைவளந்தப்பின் அம்மகளிர் கிளை யுடன் குழீஇச் சுறவுக்கோடு நட்டு ஆண்டுபரவுக் கடன் கொடுத்தலின் ஆண்டுவருணன் வெளிப்படும்".

(நச்-உரை).

இருக்கு முதலிய வேதங்களிற் சொல்லப்படும் விஷ்ணு வருணன் இந்திரன் முதலியோரும் தமிழ்நாட்டு மாயோன் வேந்தன் வருணன் முதலானோரும் ஒருவரல்லர்

"கொடிநிலை கந்தழி வள்ளியென்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"

என்னும் தொல்காப்பியச் சூத்திரம் தமிழ் மக்கள் கடவுளை சந்திரன் சூரியன் முதலிய ஒளியுடைப் பொருள்கள் வாயி லாக வழிபட்டார்கள் என்பதைப் புலப்படுத்துகின்றது. கொடி நிலை-சூரியன்; கந்தழி-ஒரு பற்றுக்கோடுமின்றித் தானே யாய்த் தத்துவங்கடந்த பொருள். வள்ளி—சந்திரன். கந்தழி என்பது பற்றுக் கோட்டை அழிப்பது என்னும் பொருளில் அங்கியைக் குறிக்கும் எனச் சில விவேகிகள் கூறுகின்றனர்.

கடவுளைக் குறிக்கும் தமிழ்ப்பெயர்களாகிய இறைவன், இயவுள், கடவுள் முதலிய சொற்கள் தமிழ் மக்கள் கடவு ளைக் குறித்து எவ்வகையான விளக்கம் உடையவர்களாய் இருந்தார்களென்பதை வெளியிடுகின்றன.

முருகக் கடவுள், ஆலமர் கடவுளுக்கும் (சிவன்) கொற்றவைக்கும் புதல்வன் என இலக்கியங்கள் அறைகின்றன. கொற்றவையே உமையாம்.

முற்காலத்தில் மக்கள் இறைவனின் அடையாளமாகத் தறிகளை மரங்களின்கீழ் நிறுத்தி வழிபட்டு வந்தனரென்றும் அவ்விடங்களிலேயே பின் பெரிய கோயில்களெடுக்கப்பட்டன வென்றும் அதற்குச் சான்று, மூங்கிலடியில் கடவுள் வீற்றிருந்தமையால், திருநெல்வேலி வேணுபுரமென்றும், குறுகிய ஆலமரத்தடியிலும் குறுகிய பலாமரத்தடியிலும் இருந்தமையால் திருக்குற்றாலமென்னும், குறும்பலாவென்றும், தற்காலம் மதுரையில் கடம்பவனத்தடியில் இருந்தமையால் கடவுள் கடம்பவனேசுவரர் என்றும், நாவல்மரத்தடியில் இருந்தமையால் திருவானைக்கா ஜம்புகேசுவரரென்றும், தில்லை வனத்தில் இருந்தமையால் சிதம்பரம் தில்லை யென்றும் அழைக்கப்பட்டதுமன்றி அதுபோன்ற மகிழடி முதலான மரத்தடிகள் கடவுள் இருப்பிடமாயிற்றென்றுஞ் சொல்லப்படுகிறது.

திருமந்திரம், தேவாரம், திருவாசகம், சித்தாந்த சாத்திரம் பதினொன்கு முதலியவற்றுடன் காணப்படுகின்ற கோட்பாடுகளே தமிழர் சமயக்கொள்கைகளாகும். தேவாரம் திருவாசகம் பாடியவர்கள் காலத்து விளங்கிய சிவாலயங்களின் பெருக்கமே சைவமதம் தென்னாடுகளிற் பழமையே நிலைபெற்றிருந்த தென்பதற்குச் சான்றாகும்.

தமிழ் இலக்கணத்திற் சொல்லப்படும், உயிர், மெய், உயிர்மெய், வேற்றுமை முதலிய சொற்களே தமிழ்மக்களின் உயரிய சமய உணர்ச்சிக்கு உறுசான்று.

"பழந்தமிழர்களது சமயம் ஆரியர் சம்பந்தம் பெற்றிருக்கவில்லை. காலகதியில் தமிழர்களுடைய சமயம் ஆரியர்

சமயக் கோட்பாடுகளுடன் கலப்புற்று தற்கால நிலைமையை அடைந்திருக்கின்றது. தென்னிந்தியருடைய சமய நூல்கள் சமஸ்கிருத மணம் பெற்றிருந்தாலும், தமிழ் நாட்டுக்கே சொந்தமான கொள்கைகள் உடையனவாயிருக்கின்றன வென்று மாக்ஸ் மூலர் போப்பையர் முதலியோர் கூறுகின்றனர். ஆகமங்கள் தமிழருடைய பழக்க வழக்கம் சமயம் முதலியவற்றைத் தழுவிச் செய்யப்பட்டன வென்று Prof. சேஷகிரி சாத்திரியார் கூறுவர். ஆரியர் சமயக் கொள்கை தமிழ் நாட்டிற பரம்புவதன்முன் அந்நாட்டுக்குச் சொந்தமான சமயக் கொள்கைகள் இருந்தன வென்பது உண்மையே.

"சரித்திர காலத்துக்கு முன் கொற்றவை முருகன், வருணன் முதலிய கடவுளர்களைத் தமிழ்மக்கள் வழி பட்டு வந்தனர். ஆனால் அவர்கள் ஒரே முழு முதற் கடவுள் உண்டென்னும் நம்பிக்கை இல்லாதவர்களாயிருந்தார்களல்லர். சிவ வழிபாடு ஆதியில் தமிழருக்குள் இருந்தது என றெகோசின் (Ragozen) என்னும் பண்டிதர் கூறுவர். சிவவழிபாடு வட நாட்டிற் பார்க்கிலும் தென்னாட்டுக்கே உரிமை பூண்டது என வேர்கூசன் (Fergusson) என்னும் அறிஞர் 'மரமும் சர்ப்பவணக்கமும்' என்னும் நூலில் கூறுகின்றனர். சிவபெருமான் தமிழ்க்கடவுளென்றும், அவர் தியானப் பொருளாகவும், புலனுக்ககப்படாததைக் கட்புலன்கதுவும்இலிங்கவடிவாகவும்பாவிக்கப்பட்டாரெனஸ்டிவென்சன்(Dr. Stevenson)என்னும்அறிஞர் கூறுவர்.பூவும் புகையுங் கொண்டு கடவுளைவழிபடுதலே பழந்தமிழர் மரபு. பூ இதயத்தையும் புகை அது உருகுவதையும் குறிப்பிடுவன. தென் னாட்டவனாகிய இராவணன் சிவலிங்க பூசை புரிபவனென்றும் அவன் செல்லும் இடங்களுக்கெல்லாம் பொன் இலிங்கத்தை எடுத்துச் சென்று பூவும் புகையுங் கொண்டு

வழிபட்டாரென்று சொல்லப் படுகின்றது. சுவாமி விவேகானந்தர் சொல்வது போல இலிங்கம் ஆண்குறி சம்பந்தமானதல்ல. ஆநந்தக் குமார சுவாமி அது மக்கள் சம்பந்தமானதல்ல எனப் புகன்றதே பொருத்தமுடையது. தென்குமரி முதல் வடபெருங்கல் ஈறாக இலிங்க வழிபாடு காணப்பெறுகின்றது. இவ்வழிபாடுதான் மிகவும் பழமையானது. இலிங்க வழிபாடுமா பாரதத்திற் கூறப்படுகின்றது. அசுவத்தாமா அருச்சுனனுக்குத் தோற்றான். அருச்சுனன்வெற்றிக்குக் காரணம் அவன் கடவுளை இலிங்க வடிவில் பூசித்ததும் அசுவத்தாமா மூர்த்திவடிவில் வழிபட்டது மேயாமென வியாசமுனிவர் கூறுகின்றார். வேதங்களும் உபநிடதங்களும் இவ்வழிபாட்டைக் குறிப்பிடுகின்றன. தென்னிந்தியாவில் புதிய கற்கால லிங்கங்கங்கள் கண்டெடுக்கப்பட்டன. வேதகாலத்துக்கு முற்பட்ட இலிங்கவடிவில் சிவ வழிபாடு இருந்ததெனக் கூறும் P. T. ஸ்ரீனிவாச ஐயங்கார் கூற்றுக்கு இது சிறந்த சான்றாகும். (திராவிட இந்தியா.)

ஆரியர் தமிழர்களோடு கலக்க நேர்ந்த ஞான்று ஆரியர் தமிழகத்துப் பரவியிருந்த சிறந்த பல கொள்கைகளைப் பின்பற்றித் தமது சமயத்தைச் சீர்திருத்தஞ் செய்துகொண்டனர்.

" The Vedic culture which resembles that of the Homeric Greeks or the Celtic Irish at the beginning of the Christian era, or that of the pre-Christian Teutons and slaves becomes transformed in the epics into the Hindu culture through the influence of Dravidians. The Aryan idea of worship during the earliest period was to call on the Father sky or some other shining one to look from on high on the sacrificer, and receive from him the offerings

of fat or flesh ; cakes and drink. But soon Puja or worship takes the place of Homa or sacrifice. Image worship which was a striking feature of the Dravidian faith was accepted by the Aryans. The ideals of vegetarianism and non-violence (Ahimsa) also developed. The vedic tradition has dominated by the agamic and today Hindu culture shows the influence of the agama as much as that of the vedas. The Aryan and the Dravidian do not exist side by side in Hinduism. (Sir Radhakrishna)

" Contact with the highly civilized Dravidians led to the trasformation of Vedism into a theistic religion."

" It need not be thought that the Aryan was always the superior force. There are occasions when the Aryan yielded to the non-Aryan and rightly too the epic relates the manner in which the different non-Aryan ones Kristna's struggle with Indra, the prince of the Vedic gods, is one instance. The rise of the cult of Siva is another." (Sir Radhakrishna)

## நான்மறை

தமிழர் சமயத்துக்குப் பிரமாணநூல்கள் நான்மறை. " நான்மறை முற்றிய வதங்கோட்டாசான் " என்னும் தொல் காப்பியச் சிறப்புப் பாயிரத்தால் பண்டைமறைகள் நான்கு இருந்தன வென்பது புலனாகும். இன்னும் சங்கநூல்கள் நான்மறையைக் குறித்துப் பல்லிடங்களிற் கூறின. " அள பிற்கோடல் அந்தணர் மறைத்தே " (தொல்—எ 102.) என்பதால் அம்மறை இசையுடன் பயிலப் படுவது என்ப தும் 'மறையோர் தேஎத்து மறை லெட்டனுள் " (தொல்—கள—1) என்பதால் மண ஒழுக்கங்கள்போன்ற

உலகியல் ஒழுக்கங்களும் அதன்கட் கூறப்படும் என்பதும் விளங்குகின்றது. அந்தணர் மறை என்றதனால் அம்மறைகள் அறவொழுக்கத்தின்பால் நின்றோராகிய அந்தணரால் பயிலப் பட்டன வென்பதும் அறியக் கிடக்கின்றன. துறவிகளாகிய மறையவர்கள் வாக்கினின்றும் போந்த நிறைமொழிகளே மந்திரமெனப்படும்.

"வினையி னீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதனூலாகும்"

எனமுதனூலுக்கிலக்கணம் தொல்காப்பியத்திற் கூறப்பட்டுள்ளது.

"ஆறறி அந்தணர்க் கருமறை பலபகர்ந்து"
(கலி—கடவுள்)

கல்லாலந் தண்ணிழற்கீழக் கலைத்துறை பயந்த காமாகாட்சி
நல்லானை நல்லா ளொருபாக மாகிய ஞானத்தானை [டாருக்
கெல்லாரு மேத்தத் தருவானை யெஞ்ஞான்றுஞ் சொல்லா
கெல்லாந் துயரல்ல தில்லை தொழுமின் கண்டீர்.

(தொ. செ. மேற்கோள்)

இன்னும் தேவார திருவாசகங்களில் பல்லிடங்களில் இறைவன் ஆலநீழலில் அமர்ந்து பக்குவம் வாய்ந்த நான்கு தவத்தர்களுக்கு மறைகளை அருளிச் செய்த வரலாறு கூறப்படுகின்றது. * சங்க நூல்களில் ஆலமர் செல்வன் என்

* "ஆல் கெழு கடவுட் புதல்வ" (முருகு)
"நீல நாக நல்கிய கலிங்க
மாலமர் செல்வர்க் கமர்ந்தனன் கொடுத்த" (சிறுபாண்)
"ஆலமர் செல்வனணி சால் பெருவிறல்" (கலி)
"ஆலமர் செல்வன் மகன்" (மணிமே)

னும் பெயர் இறைவனுக்குப் பெயராக வந்திருக்கின்றது. தொல்காப்பியர் "செந்தமிழியற்கைசிவணிய நிலத்து" வழக்குக் கூறப் புகுந்தாராதலின் அவர் கூறிய மறைகள் சிந்து நாட்டாருக்குரியதன் றென்பது தானே பெறப்படும்.

"சதாசிவந் தத்துவம் முத்தமிழ் வேதம்"

"தங்கிமிதாமை வைத்தான் தமிழ் சாத்திரம்"

"ஈறான கன்னி குமரியே காவிரி
வேறா நவதீர்த்த மிக்குள்ள வெற்பேனுள்
பேறான வேதாகமமே பிறத்தலான்
மாறான தென்றிசை வையகஞ் சுத்தமே"

"தமிழ்மண் டலமைந்துந் தாவிய ஞான
முமிழ்வது போல வுலகந் திரிவர்"

"அவிழு மனமு மெம்மாதி யறிவுந்
தமிழ் மண்டல மைந்துந் தத்துவமாமே"

(திருமந்திரம்)

என வருவனவற்றால் தமிழருக்குரிய முதனூல்களாகிய மறைகள் தமிழில் இருந்தன வென்பது புலனாகும்.

வேதாகமங்கள் சதாசிவமூர்த்தி வாயிலாக வெளி வந்தன என்னும் ஐதிகமும்,

"சதாசிவந் தத்துவம் முத்தமிழ் வேதம்"

என்னும் திருமந்திரமும்

"மற்றவை தம்மை மகேந்திரத் திருந்து
உற்றவைம் முகங்களாற் பணித் தருளியும்"

என்னும் திருவாசகமும்

" சதாக்கிய மென்னுந் தத்துவத்தில் வீற்றிருந்து
சதாசிவன மலன்றான்"

" நயந்தாருயி ரெல்லா நண்ண வறமாதி
யியம்பினு னுகம நாலேழு"

என்னும் சைவ சமய நெறியும், தென்னாட்டுச் சிவப் பிராமணர்கள் தங்கோத்திர முதல்வர்கள் சதாசிவமூர்த்தியின் முகங்களினின்றும் தோன்றினார்களெனக் கூறுகின்றமையும், ஒத்த கருத்துடையனவாகக் காணப்பெறுகின்றன.

தமிழ்மொழியிற் காணப்பட்ட மறைகளும் ஆகமங்களும் அங்கங்களும் இறந்துபட்டன. திருமந்திரம் ஞானுமிர்தம், சித்தாந்த சாஸ்திரங்கள் முதலியன பழய தமிழர் மறைப் பொருள்களை அடிப்படையாகக் கொண்டெழுந்தனவேயாம்.

இப்பொழுது ஆரிய மொழியிற் காணப்படும் மறைகளும் அங்கங்களும் பிறவும் பழந்தமிழர் கைக்கொண்ட நூல்களாக மாட்டா. இருக்கு முதலிய நூல்கள் ஆரியர் இந்தியாவை அடைந்த பின்னர் அவர்களாற் பாடிச் சேர்க்கப்பட்ட பாடற்றொகைகளாகக் காணப்பெறுகின்றன. அவ்வேதங்கள் சிவபெருமானை முழு முதலாக ஒப்புக்கொள்ளவில்லை. வேதங்கள் அக்னி, வாயு, சூரியன் முதலியவர்களால் வெளியிடப்பட்டனவென்று மனுப் பிரசாபதி கூறுகின்றார்.

யாகங்கள் நிறைவேறும்பொருட்டு இருக்கு 'எசுர்' சாமம் என்னும் பெயர்களையுடைய அநாதியான வேதத்தை அக்னி, வாயு, சூரியன் இவர்கள் மூவரிடத்தினின்றும் வெளிப்படுத்தினர் (பிரம்மா) (மனு—அத். க—உஙு)

வேதங்கள் மூன்றென்னும் பொருளில் "வேதம் த்ரயீ" என்று நெடுகிலும் வழங்கப்பட்டது; சிவத்தியாநாநந்த அமர

சிம்ஹமும் மூன்றெனக் கூறுகின்றது*: ஆரிய வேதங்களும் அங்கங்களும் பிறவும் மக்களாற் செய்யப்பட்டன வென்பது சிவத்தியாநாநந்த மகரிஷி என்னும் அறிஞரால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட வேத பாடல்களைக் கொண்டுமே இனிதறியலாகும். ஆரியமறைகள் கொலைவேள்வியைவற்புறுத்திக்கூறும். வேதமார்க்கத்தைக்கைக்கொண்டுஉஞற்றப்பட்ட கொலைவேள்விகளைக் கண்டிப்பதற் கெழுந்ததே புத்தமதம். "தக்கன் வேள்வித் தகர்தின்று நஞ்சமஞ்சி" (திருவாசகம்) என்பதால் யாகங்களிற் கொல்லப்படும் மிருகங்களின் ஊனை வேள்வி யாசிரியரும் பிறரும் பாதிடு செய்வது வழக்காறெனத் தெரிகின்றது. நீதி நூல்களும் சைவ நூல்களும் கொலைபாவமென விள்ளுகின்றன. ஆரியமதம் தென்னாட்

---

*The Hymns of Rig. Veda :— The hymns which are collected in this work are 1028 in number and were composed during several centuries. They are only the materials we have for the history of this early period, which is called the Vedic Age.

" The people of India recognise four Vedas, and this is how they have grown up, some of the hymns by an ancient custom chanted at sacrifices instead of being recited and a separate collection was made of these chanted hymns and called Sama Veda. Special sacrificial formulas and rules also existed from ancient times for the performance of rites, and these formulas and rules were collected under the form of Yajur Veda and a collection of the latter hymns often consisting of charms and incantations against evil influences grew up under the name of Atharva Veda. " (The civilisation of India by Romesh C. Dutt, *C.I.E.*).

டில் வேரூன்றிய பிற்காலத்தில் சிறந்த அறிவாளிகளும் சித்தார்த்தம் மகம் முதலியவற்றிற் செய்யப்படும் கொலை பாவமாகாதெனத் நம்பத் தலைப்பட்டனர். இந்நம்பிக்கைக் குக் காரணம் கொலை வேள்விகளை வகுத்துள்ள வேதங்கள் கடவுள் வாய்ப் பிறந்தனஎன அன்னோர் விசுவாசித்தமையே யாம்.

" சமிதை யெறும் பிக்குப் பிராயச் சித்தத்தை
யவை யடைவே செய்யென் றறைந்தாய்—இமையோர்
நசிக்கவரு நஞ்சுண்ட நாதா யாகத்திற்
பசுக்கொலை யேன்சொன்னாய் பகர் "

(சிற்றம்பல நாடிகள்)

" பூசுரர்க் கிழிவிலை யாகத்துயிர் கொன்
றருந்தலின் விண்புகுதா நிற்பர்
கோசமெடுத்துரை நவிற்றாசிரியர் சிறார்க்கி
தமதுமுன் கொடுப்பான் முன்னர்
ஆசுமிகு துயர்விளைத்தும் இதம் அதுவாப்
பொருள் பெறலின் அரியவேத
ஓசைமிகு மமரருலகை அவர் வதைத்த
சீவனும் பெற்றுத லாலே " (கொலை மறுத்தல்)

" குழைமுகந் தூங்குஞ் செம்மணிப் பசும்பொற்
குண்டல வேதியர் நாளும்
அழன்முகத் தாற்றும் அருமகத் தன்றிச்
செந்தசை அருந்தின ரில்லை" (காசி காண்டம்)

"அருமகத் தன்றியூன் சுவைத்துடல் வீக்குவோன்"

(மேற்படி)

" மருந்தில் திதியின் உயிருய்யும் வாயின் மகமதனில்
அருந்தற் கியல்பத தெனினும்"

(அருட்பிரகாசம்).

மேற்காட்டியன முன் யாம் கூறிய வாற்றுக்கு எடுத்துக் காட்டுகளாகும்.

அப்பைய தீட்சிதர் தாம் வேள்வி ஆசிரியனாயிருந்து இயற்றிய மகத்தில் வெட்டிக் குவிக்கப்பட்டிருந்த மிருகங் களைப் பார்த்து ஓ வேதமே! உன்னை நம்பினேன் எனக் கதறி ஓலமிட்டனராம்.*

வாணிகம்

தமிழ் மக்கள் காலிற் பிரிவதோடு கலத்திற் பிரிந்துங் கடல் கடந்துங் வியாபாரஞ் செய்துவந்தார்கள். 'காலிற் பிரிதல்,' 'கலத்திற் பிரிதல்' எனவரூஉம் பழந்தமிழ் நூல் களின் வழக்கும், "திரைகடலோடியுந் திரவியந் தேடு" என்னும் பழமொழியும் தமிழர் கடல் கடந்து செய்த வாணிகப் பெருக்கத்தை உணர்த்தும். "முந் நீர் வழக்கம் மகடூஉ வோடில்லை" என்னும் தொல்காப்பியச் சூத்திரமும் தமிழ்மக்கள் பொருளீட்டுவதற்கு கடல் கடந்து தூரதேசங் களுக்குச் சென்றார்களென்பதை நன்கு காட்டும்.

சலோமன் அரசனுடைய காலத்திற் பினீசிய நாட்டுக் கரசனாக டையர் என்னும் பட்டினத்தில் இருந்தோன் ஹிராம். பினீசியர் மாலுமித் தொழிலிற் சிறந்தவர்கள்.

---

*The great Appaya Dikshithar horrified at the sight of the slaughtered animals at a vedic sacrifice he performed is said to have cried out, "Oh Ye Vedas! I believed you." (Tamilian Antiquary No. 2.)

"But there is evidence of its (bulls) having been killed in sacrifices and its cooked flesh offered to the Gods, specially to Indra who seemed to have developed a keen taste and inordinate desire for it."

(Rig. Vedic. India.)

இவர்களைத் துணைக்கொண்டு சலோமன் அரசனுடைய கப்பல்கள் கிழக்குத் தேசங்களுக்குச் சென்று ஓபிர் (உவரி) என்னுந் துறைமுகத்திற் றங்கி பொன், வெள்ளி, யானைத் தந்தம், மயில், குரங்கு, நவமணி முதலியவற்றை ஏற்றிக்கொண்டு திரும்பின. எபிரேய அரசனான சாலமன் கி. மு. 1000 வரையில் சீவித்தவன். தமிழ் நாட்டினின் றும் சென்ற ஒவ்வொரு பண்டங்களும் எபிரேய நாட்டில் தமிழ்ப பெயர்களாலேயே அறியப்பட்டன. தமிழ் அகில் எபிரேயமொழி அஹல்; தமிழ் தோகை (மயில்) எபி ரேய மொழி துகிம்; வடமொழி கவி (குரங்கு) எபிரேய மொழி கொவ். கிரேக்க மொழியில் ஓரிசா என்பது அரிசி என்னும் தமிழ்ச் சொல்லின் திரிபு. பெப்பரி என்பது திப்பலி என்பதன் திரிபு. கிரேக்கரும் தமிழ் நாட்டிலிருந்து அரிசி. மிளகு முதலிய பொருட்களை வாங்கிச் சென்றனர்.

கி. பி. முதல் நூற்றாண்டில் விளங்கிய பிளினி என்னும் ரோமை ஆசிரியர் இந்தியாவிலிருந்து ரோமராச்சியத்துக்கு ஏற்றுமதியாகுஞ் சரக்குகள் ஆண்டொன்றிற்கு 55,000,000 செஸ்டேர்ஷிகள் (987,000 பவுன்) பெறுமதியானவை என்று கணக்கிட்டிருக்கின்றார். இன்னும் அகஸ்து ஜீசர் முதல் சேனோ ஈறாகவுள்ள ஒவ்வொரு ரோம அரசரின் நாணயங்களும் தென்னிந்தியாவிற் பல விடங்களிற் கண் டெடுக்கப்பட்டிருப்பதனால் ரோம நாட்டாருக்கும் தமிழ் நாட்டாருக்கும் கி. பி. 5-ம் நூற்றாண்டுவரையும் இடை விடாத தொடர் பிருந்தமை ஒரு தலையாகும். அரேபி யநாட்டுக் குதிரைகளும் தமிழ் நாட்டுத் துறைமுகங்களில் இறக்குமதியாயின. இக்குதிரை வியாபாரங் காரணமாகவும், பின்னர் கப்பல் மீகாமன்களாகவும், அரேபியர் தென்னிந் திய இலங்கைக் கரையோரங்களில் சில பாகங்களைத் தங்கு மிடமாக்கி நாளடைவில் அங்குக் குடிபதிகளாய் விட்டனர்.

பாபிலோனில் சுமேரிய அரசரின் தலைநகரமாகிய 'ஊரின்' இடிபாடுகளில் மலையாளக் கரைகளில் மாத்திரம் வளருகின்ற தேக்கமரத்தின் துண்டொன்று கண்டெடுக்கப் பட்டது. இதனால்4000 ஆண்டுகளுக்குமுன் சுமேரியர் தமிழகத்தோடு வியாபாரப் போக்குவரத்துடையவர்களா யிருந் தார்களெனப் புலனாகின்றது.

கி. மு. 1462-ல் பதினெட்டாவது தலைமுறையாக முடிவெய்திய எகிப்திய அரசரின் "மம்மீஸ்" என்னும் பிரேதங்கள் இந்திய மசிலின் துணிகளால் மூடப்பட்டி ருந்தன. எகிப்தியர் இந்தியாவில் கிடைக்கும் அவரியிலி ருந்து எடுக்கப்படும் நீலத்தினால் ஆடைகளுக்குச் சாய மூட்டினார்கள். இந்தியாவினின்றும் பிறநாடுகளுக்குச் சென்ற வியாபாரப் பொருட்களுள் பட்டு, மசிலின் முதலியன விசேஷமானவை.

தமிழர் சுமத்திரா, சாவா, மலாயா முதலிய நாடுக ளோடும் வியாபாரம் நடத்திவந்தார்கள். இதற்குச் சான்று மணிமேகலையிலுள்ளது.

அக்காலத்து காலினுங் கலத்தினும் வந்திறங்கிய பண் டங்கள் வருமாறு.

"நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடன் முத்தும் குணதடற் றுகிரும்
கங்கை வாரியும் காவிரிப் பயனும்
ஈழத் துணவும் காழகத் தாக்கமும்
அரியவும் பெரியவும் நெளிய வீண்டி"

(பட்டினப்பாலை)

விடபாரிகள் தாம் கொடுக்கல் வாங்கல் செய்யும் பண்டப் பொதிகளில், அவற்றின் நிறை, அளவு, எண் இவற்றை எழுதிச் சாலைகளில் அடுக்கிவைத்துப் பின்பு எடுத்துச் செல்வர். இவ்வுண்மை

" வம்பமாக்கள் தம்பெயர் பொறித்த
கண்ணெழுத்துப் படுத்த எண்ணுப் பலபொதி
கடைமுக வாயிலும் கருந்தாழ்க் காவலும் "

என்னும் சிலப்பதிகார வடிகளால் விளங்கும்.

" Kautalya was of opinion that the commerce with the south was of great importance than that with the north, because the more precious commodities came from the peninsula while the Northern Regions supplied only blankets. skins and horses. Gold, diamond, pearls, other gems and conch shells are specified, as products of the south " (Oxford History of India, pp. 68, 69.)

## கைத்தொழில்

தமிழ்நாட்டின் வளனும் தொழின்முறைகளும் இந் நட்டார் பண்டை நாளில் பிற நாட்டாரோடு செய்து வந்த வாணிகப் பெருக்கை நோக்குழி நன்கு புலனாகும். பட்டினும் மயிரினும் பருத்திநூலினும்—கட்டும் நுண்வினை கண்டவர்கள் நம்மக்கள். அக்காலத்தில் வழங்கிவந்த பட்டாடைகளின் பெயர் சிலப்பதிகாரத்திற் சொல்லப்படுகின்றன. அவற்றின் பெயர்கள் கேட்பதற்கு இன்பம் பயப்பனவாம். அவை வருமாறு :—

---

* F. N. Chanakya (Kautalya), the great minister of 'Chandragupta' Maura was a native of Dravida, that is Kanchi (History of the Tamils, p. 325.)

“கோசிகம், பீதகம், பஞ்சு, பச்சிலை, அரத்தம், நுண்டுகில், சுண்ணம், வடகம், இரட்டு, பாடகம், கோங்கலர், கோபம், சித்திரக்கம்பி, குருதி, கரியல், பேடகம், பரியட்டக்காசு, வேதங்கம், புங்கர்க்காழகம், சில்லிகை, தூரியம், பங்கம், தத்தியம், வண்ணடை, கவற்றுமடி, நூல்யாப்பு, திருக்கு, தேவாங்கு, பொன்னெழுத்து, குச்சரி, தேவகிரி, காத்தூலம், இறஞ்சி, வெண்பொத்தி, செம் பொத்தி, பணிப்பொத்தி.”

“நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்கனிந்து
அரவுரி யன்ன யறுவை நல்கி”

(பொருநராற்றுப்படை)

(உரை) கண்ணிற் பார்வை, இஃது இழைபோன வழியென்று குறித்துப் பார்க்க வாராத நுண்மை உடையவாய் பூத் தொழில் முற்றுப் பெற்றமையால் பாம்பின் தோலையொத்த துகிலைக்கொடுத்து

“காம்பு சொலித்தன்ன அறுவை” (சிறுபாண்)

(உரை) மூங்கிலாடையை உரித்தாலொத்த மாசில்லாத உடை.

“ஆவியன்ன அவிர்நூற்கலிங்கம்” (பெரும்பாண்)
“புகைவிரித்தன்ன பொங்கு துகிலுடீஇ” (புறம்)

தமிழ் அகத்தில் ஆடை நெய்யப்பட்டு பிற நாடுகளுக்கனுப்பப்பட்டது. முற்காலத்து வீடுகளி லிருந்துகொண்டே அருமையான ஆடை வகைகள் நெய்தற்குரிய நுண்ணிய நூலிழைகள் முழுதும் வீட்டுப் பெண்களால் நூற்கப்பட்டன. இதற்குச் சான்று, “பருத்திப் பெண்டின் பனுவலன்ன” (உரை பருத்தி நூற்கும் பெண்டாட்டியது சுகிர்ந்த பஞ்சுபோல) என்னும் புறப்பாட்டாகும்.

" பஞ்சிதன் சொல்லாப் பனுவ லிழையாகச்
செஞ்சொற் புலவனே சேயிழையா—எஞ்சாத
கையே வாயாகக் கதிரே மதியாக
மையிலா நூன்முடியு மாறு " (நன்னூல்)

மரம், இரும்பு, வெண்கலம், வெள்ளி, பொன் முதலி யவற்றில் நுட்பம் வாய்ந்த தொழில் புரியும் கம்மியரும் பிற தொழிலாளரும் அக்காலத்து இருந்தார்கள் என்பது சிலப் பதிகாரம், மணிமேகலை முதலிய நூல்களா லறியப்படும்.

## ஓவியம்

தமிழ் மக்கள் ஓவியப் பெற்றியை விரித்துக் கூற வேண்டியதில்லை. பழைய சோழக் கட்டிடங்களும், பழைய கோயில்களும், அமராவதி, மாவலிபுரம் முதலிய விடங்களி லுள்ள சிற்ப நுட்பங்களும், பழந்தமிழ் மக்கள் அணிகலன் களும் அவர்கள் பாட்டுகளும் தமிழோவியத்தின் உயர் விற்கு நிலைக்களங்களா யிருக்கின்றன. தாகூர் முதலிய கவி வாணரும் தமிழர் ஓவியத்தைப் போற்றியிருத்தல் கவனிக் கத் தக்கது. 'நெடு நிலைமாடத் திடைநிலத் திருந்துழி' என் றும், 'நிரை நிலைமாடத் தரமிய மேறி' என்றும், 'வேயா மாடமும்' என்றும், 'மான்கட் காலதர் மாளிகை யிடங் களும்' என்றும் இளங்கோவடிகள் தமிழ்நாட்டுக் கட்டிடங் களைச் சிறப்பித்திருத்தல் காண்க.

" சுடுமண் ணோங்கிய நெடுநிலை மனைதொறு
மையறு படிவத்து வானவர் முனிவர்
வெவ்வகை யுயிர்களு வுமங் காட்டி
வெண்சுதை விளக்கத்து வித்தக ரியற்றிய
கண்கவ ரோவியங் கண்டு நிற்குநரும் "

(மணிமேகலை)

மனிதர், மிருகங்கள், கடவுளர் முதலியோர் வடிவங் கள் பலவகை நிறமைகளினால் வீடுகள், அரண்மனைகள், கோயில்கள் முதலியவற்றின் சுவர்களில் தீட்டப்பட் டிருந்தன.

" இந்திரன் பூசை யிவளகலிகை யிவள்
சென்ற கவுதமன் சின்னுறக் கல்லுரு
வொன்றிய படியிதென் றுரைசெய்வோரு
மின்னம் பலபல வெழுத்து நிலைமண்டபம் "

(பரிபாடல்)

## சிற்பம்

" கல்லு முலோகமும் செங்கலு மரமும்
மண்ணுஞ் சுதையுந் தந்தமும் வண்ணமும்
கண்டசர்க் கரையு மெழுகுமென்றிவை
பத்தே சிற்பத் தொழிற் குறுப்பாவன."

என்னும் திவாகரச் சூத்திரமே தமிழர் சிற்பத் திறமைக்குச் சான்று.

## வான ஆராய்ச்சி

தமிழ்மக்கள் வான ஆராய்ச்சியில் வல்லுனராயிருந்தா ரென்பது

" செஞ் ஞாயிற்றுச் செலவுஞ் ஞாயிற்றுப்
பரிப்பும் பரிப்புச் சூழ்ந்தமண் டிலமும்
வளிதிரிதரு திசையும்
வறிது நிலைஇய காயமு மென்றிவை
சென்றளந் தறிந்தோர் போலவென்று
மினைத்தென் போரு முளரே "

எனவரும் புறப்பாட்டால் அறியப்படும். நிகண்டு நூல்களில்

நாள் கோள் ஓரை முதலியவற்றைக்குறிக்கக் கூறப்படும் பல பெயர்களை ஆராய்ச்சி செய்வதால் தமிழர் வானுராய்ச்சி யில் சிறந்து விளங்கினுர்கள் என்பது புலனுகும்.

## சோதிடம்

மறைந்த ஒழுக்கத்தோரையு நாளுந்—துறந்த வொழுக் கங்கிழவோற் கில்லை. "குடையும் வாளும் நாள் கோள்" என்னும் தொல்காப்பியச் சூத்திரங்கள் "கேடில் விழும் புகழ் நாடலைவந்தென" "திங்கட் சகடம் வேண்டிய துகடீர் கூட்டத்து" எனவரூஉம்அகப் பாட்டுகள் முதலியன தமிழ ரின் ஜோதிட உணர்ச்சியை விளக்கும்.

" டாக்டர் தீபா தக்கணத்தில் தமிழ்ப் பாஷை வழங்கு மிடத்தில் சௌர அல்லது வாக்கிய சித்தாந்தமே உப யோகப் படுத்தப்படுகின்றதென உவாரன் ஆசிரியர் கூறி யுள்ளா ரென்றும், அது பிழையற்ற தென்றும் குறித்துள் ளார். மேலும் வேதாங்க சோதிடத்திற் கண்ட சாந்திர மான கணிதம் பிழை பட்டதெனத் திவான் பகதூர் ஸ்ரீமான் சாமிக்கண்ணுப் பிள்ளை அவர்களது 1916-ம் வரு டத்துச் சர்வகலா சங்க சோதிடச் சொற்பொழிவுகளை ஊன்றி நோக்கப் புலனும். தென்னுட்டில் தொன்று தொட்டு வழங்கி வந்தது புலீசனல் இயற்றப்பட்ட வாக்கிய கணன முறை." (செந்தமிழ். * * No. 5.)

## போர்க் கருவிகள் முதலியன

" அரசனுக்கு நால்வகைச் சேனைகளுமிருந்தன. பல படைவீரர் பழகுவதற்காகத் தேரேறு மிடங்களும் குதிரை யேறு மிடங்களும் (செண்டுவெளி) வாட்டொழில் செய்யு மிடங்களும், விற்போர் செய்யு மிடங்களு மிருந்தன. வில் லும் வேலும் வாளுமே இவரது முந்திய ஆயுதங்கள்.

குந்தம், சக்கிரம் முதலிய ஆயுதங்களு மிருந்தன. தமது மெய் வாள் முதலிய படைகளால் ஊறுபடாம லிருத்தற் குக் கேடய மென்னும் மெய் காப்புக் கருவியும் உபயோகித் தனர். இக்கருவி காடித்தோலாற் செய்யப்பட்ட தென்பது தெரிகிறது. புலித்தோலாற் செய்த கவசத்தை வீரர்க ளணிந்துகொள்வது வழக்கம். வாகனங்களிலேறாத வீரர் கவசம் பூணுதல் மரபன்று. விளையாட்டுகளுள்ளே யானைச் செண்டு குதிரைச் செண்டு என இரண்டு வகையுண்டு. இவை யாடும் முற்றவெளியைச் செண்டு வெளி யென்ப. யானைப் போர் அக் காலத்து மிகச் சிறந்தது போலும். யானைகள் நெருங்கி வந்து போர் செய்யாம லிருத் தற்கு இரும்பால் யானை நெருஞ்சி முள்ளாகச் செய்யப் பட்ட கப்பணமென்னுங் கருவியைச் சிதறுவார்கள். யானை மருப்பை யறுத்து கூர்மையிட்டு அது வலிகொள்ளும்படி கிம்புரியென்னும் பூணிடுவார்கள். நகரின் மதிலைச் சார யானைக் கூட்டங்களிருந்தன. மதிலுக்கு உள்ளேயும் புறத் தேயும் ஆழமான அகழிகள் இருந்தன புறத்தே அகழியி னின்றும் கோயில் அகழிக்கு நீர் வருவதற்காக கால்வாய்கள் செய்யப்பட்டிருந்தன. வீதியிற் செல்லும் யானைகள் அத னுள் விழாதிருத்தற் பொருட்டு இது மேலே மூடப்பட் டிருக்கும். இக்கரந்தகற் படை கரந்து படையெனவும் கரந் துறை யெனவும் வழங்கும். இம்மதிலிலே பலவகைப் பொறிகளிருந்தன வென்பதும் அவையவனரால் இயந்தி ரிக்கப் பட்டனவென்பதும் கூறப்பட்டுள. யுத்தத்துக்குச் செல்வோர் பலவகை மாலை சூடிக்கொள்வது வழக்க மென் பது மறிகிறோம்" (செந்தமிழ்ச் செல்வி).

## அரண்

"அது வஞ்சனை பலவும் வாய்த்துத், தோட்டி முண் முதலியன பதித்து காவற்காடு புறஞ் சூழ்ந்ததனுள்ளே

இடங்கர் முதலியன உள்ளுடைத்தாகிய கிடங்கு புறஞ் சூழ்ந்து யவனரியற்றிய பல பொறிகளும் ஏனைய பொறிகளும் பதணமும் மெய்புழை ஞாயிலும், ஏனைய பிறவு மமைந்து, எழுவுஞ் சீப்பு முதலியவற்றால் வழுவின்றமைந்த வாயிற் கோபுரமும் பிற வெந்திங்களும் பொருந்த இயற்றப் பட்டதாம்.

" இனி மலையரணும் நிலவரணும் சென்று சூழ்ந்து நேர்தலில்லா ஆரதர் அமைந்தனவும் இடத்தியற்றிய மதில் போல வடிச்சிலம்பின் அரணமைந்தனவும் மீதிருந்து கணை சொரியும் இடமும் பிற வெந்திரங்கள் அமைந்தனவும் அன்றிக் காட்டரணும் அவ்வாறே வேண்டுவன அமைந்தன வாம. (நச்சினார்க்கினியர்.)

" மறனுடை மறவர்க் கேறவிட மின்றி
நெய்யோ டையவி யப்பி யெவ்வாயு
மெந்திரப் பறவை யியற்றின நிறீஇக்
கல்லுங் கவணுங் கடுவிசைப் பொறியும்
வில்லுங் கணையும் பலபடப் பரப்பிப்
பந்தும் பாவையும் பசிவரிப் புட்டிலு
மென்றிவை பலவுஞ் சென்று சென்றெறியு
முந்தை மகளிரை யியற்றிப் பின்றை
யெய் பெரும் பகழி வாயிற் றூக்கிச்
சுட்டல் போயின் றாயினும் வட்டத்
தீப்பாய் மகளிர் திகழ் நலம்பெற
நோக்குநர் நோக்குநர் நொந்துகை விதிர்க்குந்
தாக்கருந் தானை யிரும் பொறை
பூக்கோட்டண்ணுமை கேட்டோறுங் கலுழ்ந்தே"

(பொன் முடியார்)

அரண்மனை வாயிலில் பந்து பாவை முதலியன தூக்கப் பட்டிருந்தன. "வரிப்புனை பந்தொடு பாவை தூங்க" (முருகு) பகை அரசரைப் பெண்களாகப் பாவித்து அவர் கள் விளையாடுதற் கென்றே அவை கட்டப்பட்டன.

## மதிற் பொறிகள் முதலியன

வளைவிற் பொறி (இது வளைந்துதானே எய்வது), கருவிரலூகம் (இது குரங்குபோலிருந்து சேர்ந்தாரைக் கொல்வது), கல்லுமிழ்கவண், கல்லிடு கூடை (இடங்கணி யென்னும் பொறிக்குக் கல்லிட்டுவைக்குங்கூடை), தூண் டில் (இது தூண்டில் வடிவாகச் செய்து, அகழியிலிட்டு மதிலேறுவார் அதிற் சிக்கியபின் இழுத்துக்கொள்வது), தொடக்கு (கழுத்திற் பூட்டிப்பிழுக்கும் சங்கிலி), ஆண்டலை யடுப்பு (சேவல் வடிவாகச் செய்யப்பட்டுப் பறக்கவிட உச் சியைக் கடித்து மூளையை எடுப்பது), கவை (இது மதி லேறின் மறியத்தள்ளும் ஆயுதம்), கழு, புதை (அம்புக் கட்டு) ஐயவித்துலாம் (இது கதவையணுகாதபடி அம்புகள் வைத்தெய்யும் யந்திரம்) கைபெயர் ஊசி, (மதிற்றலையைப் பற்றுவாரைக் கையைப் பொதிர்க்குமூசி) எரி சிரல். (இது சிச்சிலி வடிவாய்க் கண்ணைக் கொத்துமாயுதம்) பன்றி இது மதிற்றலையில் ஏறினருடலைக் கோட்டாற் கிழிக்க இரும் பாற் செய்தது, பனை (மூங்கில் வடிவாகச் செய்து அடித் தற் கமைத்த பொறி), எழு சீப்பு, கணையம், கோல், குந் தம், வேல், சதக்னி, தள்ளி வெட்டி, களிற்றுப் பொறி, தகர்ப் பொறி, விழுங்கும் பாம்பு, கழுகுப் பொறி, தகர்ப் பொறி, அரி நூற் பொறி, ஞாயில் (குருவித்தலை), பிண்டி பாலம், எழு, மழு, வாள், கவசம், தோமரம், கதை, தண் டம், நாராசம், இருப்பு முள், கழுமுள், கூன் வாள், சிறு வாள், கொடுவாள், அரிவாள், சுழல் படை, ஈர்வாள், உடை

வாள், கைவாள், கணையம், கோடாலி, தோட்டி வேல், வச்சிரம், குறுந்தடி, ஈட்டி, கவண், சிறுசவளம், பெருஞ் சவளம், சக்கரம், கன்னம், உளி, பாசம், தாமணி, சாலம், ஊசி முசண்டி, முசலம், இடங்கணி, அள்பலகை முதலியன கடலோட்டுக் கதையில் ஆயுதங்கள் தொண்ணூற்று நாலு என்று சொல்லப்படுகிறது.

## வீரத்தாய்

நமக்கு வெறுங்கட்டுக் கதைகள் போலத் தோன்றும் வீரச்செயல்களை பண்டைத்தமிழ்ப்பெண்களிடத்திற் காண்கின்றோம். தமிழ்த் தாய்மாரே தம் புதல்வரை வீரச் செயல்களில் ஊக்கிவிட்டார்களென விளங்குகின்றது. பொன்முடியாரென்னும் பெண்புலவர் தாய் தந்தை அரசன் மகன் முதலியவர்க்குரிய கடமைகள் இன்னவென்பதை அடியில் வருமாறு கூறுகின்றார்.

ஈன்று புறந்தருதல் என்றலைக் கடனே
சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே
வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே
நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே
ஒளிறு வாளருஞ்சம முருக்கிக்
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே. (புறம்)

இப்பாட்டால் அக்காலத்து வீரத்தாயரது மனநிலை இத்தகைய தென்பது வெளிப்படும் .மற்றொரு வீரத்தாயைப்பற்றிப் பூங்கணுத்திரை என்னும் பெண்புலவர் பின் வருமாறு கூறுகின்றார்,

மீனுண் கொக்கின் றூவியன்ன
வானரைக் கூந்தல் முதியோள் சிறுவன்
களிறெறிந்து பட்டன னென்னு முவகை
யீன்ற ஞான்றினும் பெரிதே கண்ணீர்
நோன்கழையலம் வரும் வேதிரத்து
வான் பெயத் தூங்கிய சிதரினும் பலவே (புறம்)

இதன்பொருள் :—கொக்கின் இறகுபோல நரைத்த கூந்தலையுடைய முதியவள் தன் புதல்வன் போரிலே யானையை வீழ்த்திக் கொன்று தானும் மடிந்தானென்னுஞ் செய்தி கேட்டு தானவனைப் பெற்றபோது அடைந்த மகிழ்ச்சியினும் அதிக மகிழ்ச்சியடைந்தாளென்பது. இதனால் அக்காலத்தே வீரத்தாயரான பெண்டிர் தாம்புதல்வரைப்பெறுவது ஓர் அற்ப வீரச்செயலையேனும் அவரிடங் கண்டு மகிழ்தற்கே என்று கருதினரென்பதும் அவர் வீரச்செயலில் அப்பெண்டிர்க்கு மனமகிழ்ச்சியே யன்றித் துக்கமில்லை யென்பதும் நன்கு விளங்கும். வீரத்தாய் ஒருத்தி தன் ஒரே மகனைப் போருக்கு அனுப்புகின்ற மாட்சியை ஒக்கூர் மாசாத்தியார் என்னும் பெண் புலவர் வியந்தும் இரங்கியும் அடியில் வருமாறு கூறுகின்றார்.

" கெடுக சிந்தை கடிதிவள் துணிவே
மூதிற் பெண்டி ராதல் தகுமே
மேனுள் உற்ற செருவில் இவள்தன்னை
யானை எறிந்து களத்து ஒழிந்தனனே
நெருநெல் உற்ற செருவிற் கிவள்கொழுநன்
பொருநரை விலங்கி ஆண்டுப் பட்டனனே
இன்றும், செருப்பறை கேட்டு விருப்புற்றுமயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிது விரித்து உடீஇ
மாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி
ஒரு மகனல்லது இல்லோள்
செருமுக நோக்கிச் செல்கெனவிடுமே " (புறம்)

இதன்பொருள்:—(ஒருதாய்) முன்பு அவள் தகப்பன்யுத்த களத்தில் யானையை எறிந்து இறந்து போயிருப்பவும், சமீபத்தில் நடந்தபோரில் தன்கணவன் பகைவரைக் கொன்று தானும் மடிந்து போயிருப்பவும், இவற்றிற்காக மனந்தளர்வின்றி பகைவரின் போர்ப்பறை ஒலிப்பதைக் கேட்டு மகிழ்ச்சி மிகுந்து, தன் சிறுவனுக்கு ஆடை யணிவித்து அவன் குடுமியை எண்ணெயிட்டுச் சீவிமுடிந்து தான் ஒரே புத்திரனை யுடையளாயிருந்தும் சிறிதும் கலங்காது போர்க்களம் நோக்கிச் செல்க என்று அவனை அனுப்புகின்றாள். இச் செய்கையைக் கண்ட என் மனங் கெடுவதாக. இவள் துணிவு அஞ்சத் தக்கதாம். பழைய வீரக்குடியிற் பிறந்தவளென்பது இவட்குத் தகுமென்பது. இதுபோலவே வெண்பாவுடையாரும்.

"கன்னின்றா னெந்தை கணவன் களப்பட்டான்
முன்னின்று மொய்யவிந்தா ரென்னையர்-பின்னின்று
கைபோய்க் கணையுதைப்பக் காவலன் பின்னோடி
எய்போற் கிடாந்தானென் னேறு"

அதாவது:—கல்லிலே பொருந்தி நின்றான் என் தகப்பன். என் கணவன் போர்க்களத்திலே பட்டான். பகைவர் முன்னின்று எதிர்த்து யுத்தத்திலேவிழுந்தார் என்தமையன்மார் தன் சேனை அழியவுந்தான் அழியாமல்பின்னேநின்று, தன் கைசென்று அம்பைச் செலுத்தப் பகையரசன் மேலே பாய்ந்து, பின்முள்ளம்பன்றி போலப்பட்டுக்கிடந்தான்என்னுடைய தலைவன்.

இதிலும் அதிசயமானவீரத்தன்மையைப் புறம் 278ம் பாட்டில் காண்கின்றோம். அதன் தாற்பரியம் யாதெனில் வயதுமுதிர்ந்த ஒருதாய் தன்சிறுவன் யுத்தத்தில் வலியழிந்து. புறங் கொடுத்தோடினனென்று பலர் சொல்லக்

கேட்டு, அவ்வாறு அவன் புறங்கொடுத் தோடினனாயின் அவன்பாலுண்டுவளர்தற்குக் காரணமாயிருந்தஸ்தனங்களை யறுத்திடுவேனென்று வாளைக்கையிற் கொண்டு போர்க்க ளம்புகுந்து, வீழ்ந்துகிடக்கும் பிணங்களைப் புரட்டித்தேடி வருபவள், இருதுண்டாய்க்கிடந்த தன்மகன் உடலைக்கண்டு அவனைப்பெற்ற போதடைந்த மகிழ்ச்சியினும் அதிக மகிழ்ச்சி யடைந்தாளென்பதாம்.

இவ்வீரம் அணைகடந்து வீராவேசமாய் வெளிப்பட் டது முண்டு. தமிழ்ப் பெண்கள் தம் வீர மக்கள் போர்க் குச் சென்று அங்கே சிறிதுமானத் தாழ்வான செயலைச் செய்துவரின் அம்மக்களைச் சினந்து வெறுப்பர். ஒருதாய் தன் மகன் பகைக்களிற்றின்மேலே வேலையெறிந்து அவ் வேலைத்திரும்பப் பெறுமாற்றலில்லாது வெறுங்கையனாய்ப் புறங்கொடுத்தது கண்டு,

“ வாதுவல் வயிறே வாதுவல் வயிறே
நோகேன் அகத்தை நின்னீன்றனனே
பொருந்தா மன்னர் அருஞ்சம முருக்கி
அக்களத்தொழிதல் செல்லாய் மிக்க
புகர் முகக்குஞ்சரம் எறிந்த எஃகம்
அதன்முகத் தொழிய நீ போந்தனையே
அதனால் எம்மில் செய்யாப் பெரும்பழி செய்த
கல்லாக் காளையை ஈன்றவயிறே”

என்று கூறி மிகவும் வெறுத்தனள். இவ்வாறே தமிழகம் முன்னாளில் அறிவாற்றல் மிகுந்த வீரத் தாயர்களை உடைய தாகி அருமை பெருமை கொண்ட செயல்களுக்கு உரிய நிலைக்களமா யிருந்தது.

## காவல் மரம்

காவல் மரமென்பது பண்டைக் காலத்துத் தமிழரசர் ஒவ்வொருவரும் தங்கள் வெற்றிக் கறிகுறியாக ஒவ்வோர் மரத்தைத் தமதூர்ப் புறத்துச் சோலைகளில் வைத்து வளர்த்து அதனைக் குறிக்கொண்டு காப்பார்கள். படையெடுத்துவரும் பகை வேந்தர்கள் அக்கடிமரத்தையே முதற்கண் தடிய முற்படுவார்கள் ; அங்ஙனம் அவர்கள் அதனைத் தடிந்துவிடுவார்களானால், அம்மரத்துக்குரிய அரசருக்குப் பெருந்தோல்வியும், பேரவமானமும் எய்தியதாகக் கருதப்படும். பகை வேந்தர்கள் அம்மரத்தில் தம் யானைகளைக் கட்டுதலும், அதனை வெட்டிக்கொண்டு போய் தங்கள் யானைகட்டுக் கட்டுத் தறியாக நட்டு வைத்தலும், அம்மரத்தால் தங்களுக்கு வீரமுரசஞ் செய்தலும் மரபு.

## தமிழ் வேந்தரின் போர் ஒழுக்கம் முதலியன

தமிழ் மூவேந்தரும் சிற்றரசரும் நெடுகிலும் போர் தொடுத்துக் கொண்டிருந்தனர். ஒருமுறை உறையூருக் கணித்தில் ஒன்பது சோழ இளவரசர்கள் சேரன் செங்குட்டுவனால் தோற்கடிக்கப்பட்டனர். சேர நாட்டின் ஒரு பகுதியாகிய பூழிநாடு சேரனாலும் பாண்டியனாலும் வென்று தோற்கப்பட்டது. கோட்டை காவற்காடு சூழப்பட்ட அகழிகளால் வளைக்கப்பட்டன. அவற்றுள் ஒரு மரம் அரசனால் மிகவும் பரிசுத்தமாகக் கருதப்பட்டது. அதற்குக் காவல் மரமென்று பெயர். போரில் பகை வேந்தனின் முதல் வேலை காவல் மரத்தை வெட்டி அதனால் முரசு இணக்குவதாகும். வீடுகளுக்கு எரியிடுதல், ஆடு மாடு முதலியவற்றைச் சூறையாடுதல், அகழிகளை யானையால் தூர்க்கச் செய்தல் முதலியன அவ்வரசர்களின் வேலைகளாம்.

பகை அரசனால் கோட்டை முற்றுகை செய்யப்பட்ட தாயின் கோட்டைக்குள் ளிருக்கும் வீரர் பலநாட்களுக்கு உணவில்லாமல் போர் செய்வர். அங்ஙனஞ் சென்ற நாட்களை மதிலின் சுவர்களிற் குறித்து வைப்பர். தோற்ற வீரனின் தலையில் நெய்பெய்து இரு கரங்களையும் பின்புறம் நின்று பற்றியிழுப்பர். வென்ற வேந்தனும் வீரரும் உயர்த்திய வாளுடன் போர்க்களத்தில் துணங்கையாடுவர். இறந்த வீரரின் உடல்களும் சிரங்களும் உருண்டு கிடப்ப அரசன் பெருவிருந்திடுவான். இதற்குக் களவேள்வி யென்று பெயர். போரில் வாள் வேல் முதலியவற்றால் போழப்பட்ட காயங்களை நெடு வெள்ளூசியினாற் றைப்பர். அவர் தங்களுக்குச் சொந்தமான யுத்தப் பிரமாணங்களை ஏற்படுத்தி யிருந்தனர் மாரிகாலத்தையே பெரும்பாலும் அவர் போர் செய்வதற்கு ஏற்றதாகக் கொண்டனர்.

(Tamil Studies)

## பத்தினிப் பெண்டிர்

தமிழ்ப் பெண்கள் கற்புக்கணிகலமாய் விளங்கினார்கள். அவர்களைக் குறித்து இலக்கியங்கள் பலவாறு வியந்து கூறுகின்றன. பெண்கள் கற்பினாலேயே மழைபெய்கின்றதென்றும் அது கோடின் மழை வளந்தப்புகின்ற தென்றும் முன்னோர் கருதினர். பத்தினிப்பெண்கள் சிலரின் வரலாறு சிலப்பதிகாரத்திற் கூறப்பட்டுள்ளது. அக்காலத்துக் கணவரை இழந்தோர் உடன்கட்டை ஏறுவோர், உடனுயிர் நீங்குவோர், விதவை நோன்பினர் என மூவகைப் பட்டனர்.

உடன்கட்டையேறுவோர் தம்கணவரிறந்ததும் தாமும் அவருடன் தீயிற் புகுந்து உயிர்துறப்போராவர்.

உடனுயிர் துறப்போர், தம் கணவர் இறந்தமைகேட்ட பொழுதே தம்முயிர் நீங்கும் உத்தமிகள். இன்னோரையே "காதலிறப் பிறகனை யெரிபொத்தி—ஊதுலேக்குருகினு யிர்த்த கத்தடங்காது—இன்னுயிரீவர்" என்று சாத்தனர் ஓதியது. கணவன் இறந்தால் கொல்லனுலைத் துருத்தி போலப் பெருமூச்சு விடாமல் தன்னடைவே உயிர் நீங்குவர் என்பது இதன் கருத்து. இவ்வரிய பெரிய செயல் தொல்காப்பியத்தில் முதானந்தம் என்று கூறப்பட்டது.

[மூது—பெரிய, ஆனந்தம்—சாக்காடு.]

பேரன்பு பற்றி நிகழும் மரணமென்பது பொருள். நாயகனும் நாயகியும் ஓருயிரும் ஈருடலுமாயிருந்தாலன்றி இவ்வாறு ஒருங்கு உயிர் நீங்குந் தன்மை நிகழாது. இவ்வாறு கணவனிறந்த பொழுதே உயிர் துறந்த உத்தமபத்தினி ஒருத்தி சிலப்பதிகாரத்துட் காணப்படுகின்றாள். ஆரியப் படை தந்த நெடுஞ்செழியன் என்னும் பாண்டியன், கோவலன் என்ற வணிகனைத் திருடனென்று கருதி அநியாயமாகக் கொலைசெய்வித்தபோது, கண்ணகி பாண்டியன் முன் சென்று வழக்காடி அப்பாண்டியனது கொடுங்கோன்மையை அவனுக்குத் தன் சிலம்பைக் கொண்டு மெய்ப்பித்தனள். தான் செய்தது தவறென்றுணர்ந்த பாண்டின் சிங்காசனத்திலிருந்தபடியே சோர்ந்து உயிர் விட்டான். அப்போது அவன் தேவியான பெருங்கோப் பெண்டு ஒரு கலக்கமுமின்றித்தானும் உயிர் துறந்தாள். சூர பதுமன் போரில் அழிவுற்ற செய்தி கேட்டவுடன் அவன்தேவிபதுமகோமளை உயிர் துறந்தனள் எனக் கந்தபுராணத்துள் கச்சியப்பர் கூறுவர். விதவைநோன்பினர், கணவனிறந்தபின்உயிர் தங்கிநின்று, மறுபிறவியில் தம்நாயகருடன் வாழ்தற்குநோற்றுப் பட்டினி முதலியவற்றால் உடம்பை வருத்துவோராவர்.

இதனை 'நளி யெரி புகா அராயின் அன்பரொடு—உடனுறை வாழ்க்கைக்கு நோற்று உடம்புஅடுவோர்' என்பதனால் அறிக. இவர்கள் இலை கிடந்த நீர்ச் சோற்றையும் எள்ளரைத்தவி ழுதையும் புளி கூட்டிச் சமைக்கப்பட்ட வேளையிலையை யும் உணவாகக் கொண்டு கல்லழுந்தும்படி தரையிற் பாயின்றிப் படுத்து, உலக இன்பங்களை ஒழித்தவர்.

## மதுபானம்

அந்தணர், வேளாண் மக்கள் என்னும் இரு பகுப் பினரை ஒழிந்த ஆண்களே யன்றிப் பெண்களும் மது வருந் தினர். பனை தென்னைகளிலிருந்து இறக்கப்படும் கள்ளு, வறியோர், தொழிலாளர், போர் மறவர், பாணர் முதலியோ ரால் பானஞ் செய்யப்பட்டது. பழச்சாறு, அரிசி, தாதகி மலர் முதலியவற்றி லிருந்து இறக்கப்பட்ட வாசனையோடு கூடிய மதுவர்க்கங்களைச் செல்வர் அருந்தினர். யவன தேசத்தினின்றும் கப்பல் மார்க்கமாகக் கொண்டுவரப்பட்ட உயர்ந்த மதுவினை அரசர் பருகினார்கள். காரம் ஏறுதற் பொருட்டு கள்ளினை மிடாக்களிற் பெய்து நிலத்துட் புதைத்து வைப்பது முன்னுள்ளோர் மரபு. மதுபானஞ் செய்தல் இழிதகவாக முன்னுள்ளோர் மதித்திலர்

"தேட் கடுப்பன்ன நாட்படு தேறல்" என்றும்

"அரவு வெகுண்டன்ன தேறல்" என்றும் கார மேறிய கள்ளின் தன்மை புற நானூற்றிற் சொல்லப் பட்டது.

"பொற்றொடி மடந்தையர் புதுமணம் புணர்ந்து
செம்பொன் வள்ளத்துச் சிலதிய ரேந்திய
வந்தீந் தேறன் மாந்தினர் மயங்கி"

(சிலப்பதிகாரம்)

" யவனர் நன்கலந்தந்த தண் கமழ் தேறல்
பொன்செய் புனைகலத் தேந்தி நாளு
மொண்டொடி மகளிர் மடுப்ப மகிழ்சிறந்
தாங்கினி தொழுகுமதி யோங்குவாண் மாற "
(புறம்)

'யவனரால் நல்ல குப்பிற் கொடுவரப்பட்ட குளிர்ந்த நறு நாற்றத்தையுடைய தேறலைப் பொன்னாற் செய்யப்பட்ட புனைந்த கலத்தின்கண்ணே யேந்தி நாடோறும் ஒள்ளியவளையையுடைய மகளிரூட்ட மகிழ்ச்சி மிக்கு இனிதாக நடப்பாயாக' என்பது இதன் உரை.

" சிறியகட் பெறினே எமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே
யாம்பாடத் தான் மகிழ்ந் துண்ணுமன்னே "

என ஔவையார் அதியமானைப் பாடுகின்றமையின் அரசர் மாத்திரமல்ல புலவர்களும் கள்ளருந்துவதில் மிக்க விருப்புடையவர்கள்போல விளங்குகின்றது. கள் என்பதிலிருந்தே களிப்பு என்னும் சொல் எழுந்தது.

## உணவு

அக்காலத்து அந்தணர், வேளாண் மக்கள் என்னும் இருபிரிவினரை நீக்கி ஏனோர் ஊனைப் பெரிதும் விரும்பிப் புசித்தார்களெனத் தெரிகின்றது. பெரும்பாணாற்றுப் படையில் " பார்ப்பாருடைய இல்லங்களைக் காண்பீர்கள். பசுக்கள் பசும்புற்றறைகளைத் தேடி மேயச்செல்ல அவற்றின் செழிய கன்றுகள் பந்தர்க் கால்களிற் கட்டப்பட்டு நிற்கும். கோழி, நாய், முதலியன அவ்வில்லங்களைச் சேரமாட்டா. வீடுகள் சாணியினால் மெழுகப்பட்டிருக்கும். வழிபடு தெய்வங்களின் உருவங்கள் அங்கே காணப்பெறும். கிளி

கள் வேதம் படிக்கும். அருந்ததியைப்போன்ற சிறந்த கற்பும் நல்லொழுக்கமும் வளையலணிந்த கைகளுமுடைய பார்ப்பனப் பெண்கள் நல்ல சுவையுள்ள உணவுகளைச் சமைப்பார்கள். அவ்வில்லங்களை அடைந்தால் இராசான்னமென்னும் சோற்றினையும் மாதுளங் காய்களை பில்லைகளாக அரிந்து மிளகு தூள்பெய்து கருவேப்பிலை கூட்டி நெய்யில் வெதுப்பிய பொரியல்களையும் மாங்காய் ஊறுகாய் முதலியவற்றையும் உண்ணும்படி பெறுகுவிர் (பெரும்பாண் 297-310) எனக்கூறப்படுவதால் அந்தணர் ஊன் புசிப்பவர்களெனப் புலப்படவில்லை. 'உப்புக் கண்டம் பறிகொடுத்த பார்ப்பினி' 'நோய் கொண்டாற் பார்ப்பாரும் உண்பருடம்பு' என்னும் முதுமொழிகளும் பார்ப்பார் ஊன் மிசையாதவர்கள் என்பதையே புலப்படுத்துகின்றன.

"மீன்திரளும் விலங்கின்திரளும் செருக்கி வலையாற் பிடிப்பாரையும், கொன்று இறைச்சி விற்பாரையும் தமக்குப் பகையாய்க் கருதியஞ்சாதே வலைஞர் முற்றத்தே அம்மீன் பிறழ்ந்து திரியும்படியாகவும், வலைஞர் குடியிலே அவ்விலங்குகள் கிடக்கும்படியாகவும், முற்படக் கொலைத் தொழிலை அவர்களிடத்தினின்றும் போக்கியும், பின்னர் களவுகாண்பாரிடத்துக் களவைப் போக்கியும், தேவர்களை வழிபட்டும், யாகங்களைப் பண்ணி, அவற்றான் ஆவுதிகளை அவர் நுகரப் பண்ணியும், நல்ல பசுக்களோடு எருதுகளைப் பரிகரித்தும் அந்தணர்க்குண்டாம் புகழ்களைத் தாங்கள் அவர்க்கு நிலை பெறுத்தியும், பெரிதாகிய புண்ணியங்களைத் தாங்கள் பண்ணி அவற்றைச் செய்ய மாட்டாதார்க்குத் தானம் பண்ணியும்...........வளைந்த மேழியால் உழவுத் தொழிலை நச்சு தலுடைய உழவர்" (பட்டினப்பாலை 196—206) என்னும் பட்டினப்பாலையால் வேளாண் மாக்கள் ஊன் உணவு அருந்துபவரல்லர் என்பது வெளிப்படை.

அந்தணராகிய கபிலர்

" புலவு நாற்றத்த பைந்தடி
பூநாற்றத்த புகை கொளீஇ யூன்றுவை
கறிசோறுண்டு வருந்து தொழிலல்லது
பிறிது தொழிலறியா வாகலி னன்று
மெல்லிய பெரும" (புறம்)

" மட்டுவாய் திறப்பவு மைவிடை வீழ்ப்பவு
மட்டான் றுணக் கொழுந்துவை யூன்சோறும்
பெட்டாங் கீயும்." (புறம்)

எனப்பாடியிருத்தல் கொண்டு தமிழ்நாட்டந்தணர் புலா லுண்ணும் இயல்பினர் எனச் சிலர் கூறுவர்.

"புலவர் முதலியோர் தங்களை அரசர்களாற் பெரிதும் விரும்பப்படும் பாணர் கூத்தர்போல் வைத்துச் செய்யுட் செய்தல் அக்காலத்து மரபாகலின்...........இங்ஙனமே சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் பண்ணனைப் பாடிய 173-ஆம் புறப்பாட்டில் தன்னைப் பாணனாகக்கூறிக் கொள்ளுதலையும், கபிலர் முதலிய புலவர் பெருமக்களும் புறத்தில் தத்தம் பாடலுள் இங்ஙனமே கூறியிருத்தலையும் ஈண்டைக்கு நோக்கிக் கொள்க.' (நல்லிசைப் புலவர் பக். 60).

" இவராற் சுட்டப்பட்டுள்ள கள்ளுண்டல், ஊனுண்டல் முதலிய வழக்குகள் இவர் காலத்துப் பெரிதுந் தீதென ஓதுக்கப் பட்டவையல்ல வெனினும் அவரைப் பேருட் புலமைவாய்ந்த இவரது ஒழுக்கமெனக் கொள்ளற்க." (ஷை பக் 175).

கபிலர் ஒளவையார் முதலாயினோர் தம்மைப் பாணர் பவ ரிசையில் வைத்து அரசரைப்பாடினமையின் பாண்குலத்துக் குரிய ஒழுக்கங்களைத் தமக்குரியனவாக வைத்துப்பாடி

னரே யன்றி அவர் உண்மையில் கள்ளும் ஊனும் புசிப்பவர்க ளல்லரெனவும் கருதற் பாற்று.

## உடை

தமிழர்கள் பழைய நாளில் அணிந்திருந்த உடைகளைப் பற்றிச் சங்க நூல்கள் தெரிவிக்கின்றன. உடை அவ்வவ் வகுப்பாரின் செல்வத்துக்கும் தொழிலாதிய வற்றுக்கும் பொருந்தப் பலவகைத்தாயிருந்தது. செல்வரும் வறிஞரு மல்லாத நடுவகுப்பைச் சேர்ந்த ஆடவர்கள் தலையிலொன் றும் இடுப்பிலொன்று மாக இரண்டு உடைகளை அணிந்து கொள்வர். மயிரை வெட்டாது வளர்த்து உச்சியிலோ கன்னத்திலோ கொண்டையாக முடிந்து கொள்வர். செல் வர்கள் நீலச் சங்கு மணிகள் கோத்தபட்டிழைகளால் கொண்டையை அவிழாது பிணித்து விடுவர். இவ்விழை களின் இருதலைப்புகளும் குஞ்சங்கள் போலவுந் தொங்கும். போர்வீரர் பெரும்பாலும் இவ்வாறு கட்டுவர். கொண் டையில் மயிலிறகுகளைச் செருகுகின்ற வழக்கமும் இருந் தது. சிங்களவர் பழைய தமிழரிட மிருந்து தான் கொண் டை முடியும் முறையைக் கற்றுக் கொண்டார்களென் பதற்கு அவர்களுள்ளும் குடுமிக்கு 'கொண்டை' என்னும் தமிழ்ச்சொல்லே வழங்கிவருகின்றமை போதிய சான்று. மதுரைக்காஞ்சியில் செல்வரைப்பற்றிக் கூறுமிடத்து, "சிவந்து நுண்ணிதாகும் வடிவாலே கண்களைமருட்டி சிந்தி விழுமாறு போன்ற ஒள்ளிய பூத்தொழிலையுடைய சேலை களை, பொன்னிட்ட உடைவாளோடே அழகுபெறக் கட்டி தோழிலே சால்வைகிடந்தசைய" எனக் கூறப்பட்டிருக் கின்றது. சட்டைதரித்தல் அரசரிடத்தில் சேவகஞ்செய் யும் தாழ்ந்த வருக்குரியதாயிருந்தது. அவர்கள் கஞ்சுகமாக் கள் எனப்பட்டனர்.

பெண்கள் பெரும்பாலும் அரைக்குமேல் உடை இல் லாதிருந்தனர். "கடா அக் களிற்றின் மேற் கட்படா மாதர்; படா—முலை மேற்றுகில்"; என்னும் குறளால் முதல் வகுப் பினர் முலைக்கச்சு அணிந்தார்கள் என விளங்குகின்றது. அக்காலத்து முலைக்கச்சு இக்காலத்து இறவக்கை போல்வ தன்று. முலைகளை மாத்திரம் இறுகக்கட்டும் நீண்டகச்சுக் களேயாம். குங்குமம் சந்தனம் முதலிய பூச்சுக்களால் தமது மார்பை மறைத்தல் அக்காலத்துப் பெண்களுக்கியல்பு. கடைத்தரமானோர் மார்பில் சங்குமணி யணிந்திருந்தனர். அமராவதிச் சித்திரங்களும் பழைய கோபுரங்களிற் காணப் படுகின்ற உருவங்களும் அக்காலத்துப் பெண்கள் அரைக்கு மேல் ஆடை அணியும் வழக்கமில்லை என்பதையே தெரிவிக் கின்றன. மலையாள தேசத்தில் இன்றும் இவ்வழக்கம் காணப்பெறுகின்றது. "சீர் நாடு மாதர் தனக்குடந் தேடித் திரிவாற்கு—வார்நாடுந் தடை தீர்ந்த மலை நாடு வாய்ந்த துவே" என்னும் திரிகூடராசப்பகவிராயர் பாடலாலும் இதனுண்மை ஓர்க. பெண்கள் ஒருவகைக் குழம்பினால் முலையில் தொய்யிலும் தோழில் கரும்பும் எழுதுவர்.

"தோண்மேற்—கரும்பெழுது தொய்யிற்குச்
செல்வ வீங்காக" (கலி 116)
"தொய்யில் பொறித்த வனமுலையாய்" (கலி)

"இந்துக்கள் கோவிற் சுவர்களிலும் மாடங்களிலும் கோபுரங்களிலும் மத சம்பந்தமான விக்கிரகங்கள் காணப் படுகின்றன. அவ்விக்கிரகங்களைப் பரிசோதித்தால் அக் காலமாந்தரது மனநிலை, ஒழுக்கம், நாகரிகம் முதலிய வற்றை நாம் அறிந்து கொள்ளலாம். உதாரணமாக மாமல்லபுரத்திலுள்ள விக்கிரகங்கள் அக்கால மாந்தர் ஆண் பெண் யாவரும் இடுப்பிற்குக் கீழேமட்டுந்தானே உடை

உடுத்தா ரென்பதையும் அவ்வுடையும் நாபிக்கு மூன்று அங்குலத்திற்குக் கீழேதான் உடுத்தார்க ளென்பதையும் விளக்கும் (செந்தமிழ் ** 5.—Dr. G. Jouvean Dubrenie).

பெண்க ளணிவகை

கால்விரலணி—மகரவாய் மோதிரம், பீலி, கான் மோதிரம் முதலியன. காலணி—பாதசாலம், சிலம்பு, தண்டை கிங்கிணி, தொடையணி, குறங்கு செறி. தோளணி மாணிக்கவளை, முத்துவளை. கையணி—சூடகம், பொன் வளை, நவரத்தினவளை, சங்கவளை, பவழவளை முதலியன. கைவிரலணி—வாளைப் பகுவாய் மோதிரம் (முடக்கு மோதிரம்) இரத்தினங்கட்டின அடுக்காழி. கழுத்தணி—வீரசங்கிலி, நேர் சங்கிலி, நுழைவினை நுண்ஞாண் சவடி, சரப்பளி, முத்தாரம். பிடர் அணி--கொக்குவாய் (முத்தாரமாகச் செய்ததில் நவரத்தினங்களைக் கோத்து முதுகு நிறைய விடும் பிற்றுலி) காதணி—நீலக் குதம்பை, மகரக்குழை, தாளுருவி, வல்லிகை, தோடு. தலையணி-சீதேவியார், வலம்புரிச் சங்கு, பூரப்பாளை, தென்பல்லி, வடபல்லி, புல்லகம், பொன்னரிமாலை, மகரப்பகுவாய், முஞ்சகம். அரையணி மேகலை காஞ்சி, விரிசிகை, கலாபம், பருமம்.

குறிஞ்சி நிலப் பெண்கள் இலைகுழைகளையே ஆடை ஆபரணங்களாகப் பூண்டனர். இது மக்கள் சீர்திருத்த முறாத காலத்தே யாகும். அக்காலத்து மரம்செடி கொடிகளிற் பிடுங்கி அணிந்த அரசிலை, குழைஓலை, கொந்திள வோலை, சீர்திருத்தகாலத்து ஆபரணங்களாக மாறிவந்தன வென்பது கவனிக்கத் தக்கது. பழைய தமிழரது பூவாபரணம், சாந்துப் பூச்சு என்பனவற்றின் ஞாபகம் இந்து சமயக் கோவில்களிலே 'பூவங்கிக் கோலம்' 'சந்தனக் காப்பு' 'குங்குமார்ச்சனை' என்னும் கருமங்களிலே இந்

நாள்வரையுங் காக்கப்பட்டு வருகின்றது. பெண்கள் தலைமயிருக்குப் பரிமள மூட்டுவர். மயிரை ஐந்து பிரிவாக வகுத்துப் பின்னி ஒன்றாக முடிந்து தொங்கவிடும் வழக்கம் அவர்களுக்குள் இருந்தது. இருபாலாரும் பரிமள வர்க்கங்களையும் தேகத்திற் பூசுவோராயிருந்தனர். பெண்கள் கண்ணுக்கு மை யெழுதுவர்.

## ஆடவர் அணிகவகை

தலையணி - முடி, தோளணி - பதக்கம், வாகுவலயம். காதணி-குண்டலம். கையணி - கங்கணம் வீரவளை. அரையணி - அரைஞாண். காலணி - வீரக்கழல், வீரகண்டை. விரலணி - மோதிரம். கலித்தொகை 85-ம் பாட்டில் ஓர் தலைவனின் மகன் அணிந்திருந்த ஆபரணங்களைப்பற்றிக் கூறப்படுகின்றது. அவை காலிற் பொன்னாலாய வாய் பிளந்த சதங்கையும், அரையிற் பொன்மணிகளை யுடைய வடமும் அதன்மேல் பவழவடமும் அவற்றின்மேல் ஐதாய் கழல்கின்ற ஒரு பூந்துகிலும், கையில் ஞெண்டின் கண் போல அரும்பு வேலை செய்த கோற்றொழிலவிர்கின்ற தொடியும், இடையில் வெட்டாத வாளும் மழுவும் தொங்கவிடப் பட்ட இடபத்தையுடைய பூணும், மார்பில் கருமுத்தும் மணியும், சேர்ந்தமுத்து வடம், அதின்மேலே நிலமணியாற் பண்ணின கண்டார் மருளும் மாலையும் என மிவ்வாபரணங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

## அரசன்

அரசன் வலிமையுள்ளவனா யிருந்தான். அவன் கையிலே வீரவாளையும் காலிலே வீரக் கழலையு மணிந்திருந்தான். அவனது சிங்காசனம் யானைத் தந்தத்தினாலும் பொன்னினாலும் நவமணிகள் குயிற்றிச் செய்யப்பட்டு ஒரு

செய்கைச் சிங்கத்தின் தலையால் தாங்கப்பட்டது. அதன் மேல் வெண்கொற்றக்குடை விளங்கியது. அவன் யவன மெய் காப்பாளராலும் பரிசனங்களாலும் சூழப்பட்டுக் காட்சிக் கெளியனு யிருந்தான். விசேஷ காலங்களில் மாத்திரம் அரசி அரசனுடன் இடம்பெறுவாள். ஆனால் அவள் ஒருபோதும் முடிசூடுவதில்லை. அரண்மனையின் அந்தப்புரத்து உயர்குடும்பப் பெண்கள், கூன், குறள் ஊமர் முதலியோர்க்கு மாத்திரம் இடமுண்டு. ஆண்கள் அங்கு நுழைதல் கூடாது. புலவர்களிடத்தில் அரசன் மிக வன்பாக விருந்தான். அரண்மனைப் புலவன் அவன் பக்கலில் எப்போதும் இருப்பான். நியாயம் வீரம், கொடை என்னும் மூன்றும் அரசனுக்குப் பெருமை யளித்தன. இம்மூன்றினையும் குறிப்பிட மூன்று வகைப்பட்ட முரசுகளிருந்தன. அரசனைச் சூழ்ந்து எண்பேராயமும் ஐம்பெருங் குழுவு மிருந்தன. அமைச்சர், புரோகிதர், சேனுபதியர், தூதுவர், சாரணர் என்னும் ஐவரும் ஐம்பெருங் குழுவிலடங்குவர். இவர்களன்றிக் கரும வினைஞர், கணக்கியல் வினைஞர், தரும வினைஞர், தந்திர வினைஞர், பெருங்கணி என அரசியல் வகிக்குந் தலைவருமிருந்தனர். கரும வினைஞரென்போர் தேசத்தின் ஆட்சியை நடத்துவோ ரென்றும், கணக்கியல் வினைஞரென்போர் தேசத்தின் வரி வருவாய்களைக் கவனிக்கு மறிஞரென்றும்; தரும வினைஞர் நாட்டினறங்களைப் பாது காப்போ ரென்றும், தந்திர வினைஞராவார் படைகள் சம்பந்தமாக தலைமை வகிப்போரென்றும், பெருங்கணி அரசனது காரியங்கட்குரிய காலங்களையும் நிமித்தங்களை யும் கணித்துரைப்போன் என்றும் அறியப்படுகின்றனர். கரணத்தியலவர் (கணக்கர்) கரும விதிகள் (ஆணைநிறை வேற்று மதிகாரிகள்) ' கனகச் சுற்றம் (பண்டாரம் வகிப்

போர்) கடைகாப்பாளர் (அரண்மனை காவலர்) நகரமாந்தர் (நகரத்திலேயுள்ள பெரியார்) படைத்தலைவர், யானைவீரர், குதிரை வீரர் என்போர் எண்பேராயத்துள் அடங்குவர்.

## புறநானூற்றிற் காணப்படும் சில பழக்க வழக்கங்கள்

"அஞ்ஞான்றினர் மிகவும் நெடிய ஆயுளுடைய வர்கள். வயதால் முதிர்ந்தும், உடல் தளர்ந்தும், நடமாடச் சத்தியற்றும் உயிர் துறவாமலிருக்கும் கிழவரை மட்பாண்டங்களில் வைத்து வழிபட்டு வருவார்கள். அப்பாண்டங்களை முதுமக் கட்டாழியென்பர். எளியவராயினும் இழிகுலத்தோராயினும் கற்றவரை மிகவும் போற்றி மரியாதை செய்வர். கற்றவர்கள் யாண்டும் முதன்மை பெற்றுச் சபையேறுவதற்குச் சாதி வேற்றுமை முதலிய குறைகள் தடைசெய்வனவல்ல. யுத்த முனையிலே புற முதுகிட்டுப் பின்வாங்காமல் போர்புரிந்திறப்பவர்கள் சுவர்க்கம் புகுவார்களென்ற நம்பிக்கை யிருந்தமையால் அரசர்கள் அதிபதிகளானோரில் யாவரொருவராயினும் அவ்வகைமடியாமல் பிணி மூப்பு முதலியவற்றாலிறந்தால் அவரின் பிரேதத்தைத் தருப்பைமேற் கிடத்தி நெஞ்சைவாள் கொண்டு பிளப்பர். அங்ஙனஞ் செய்வதால் உயிர் சுவர்க்கம் புகுமென்பதே அவர்கள் கருத்து. மற்றவர் பிரேதங்களைத் தாழி என்றும் ஈமத்தாழி யென்றும் வழங்கப்பட்ட பாண்டத்திலிட்டுத் தகனஞ் செய்வர். தலைவர்கள் துஞ்சுங்கால் அவரோடு தீமூழ்கி உயிர்விடல் மனைவியர்க்கியல்பாயிருந்தது. நிரை கவர்தலும், போர்புரிந்து அவற்றை மீட்டலும் அடிக்கடி நிகழும். யுத்தத்திற் கைவந்த வீரர்களை யாண்டுங் கனஞ் செய்து போற்றி வழிபடுவர். அன்னவரி லொருவர் மடியுங்கால் அவர் பொருட்டு ஒரு கற்சிலையை நட்டு அவரின் நாமத்தையும் கீர்த்திப் பிரதாபங்களையும்

அதன் கட்டீடட்டிப் பந்தரிட்டுக் கொடி விதானித்துப் பூமாலைகளையும் மயிலிறகுகளையுந் தூக்கிப் பலிமுதலியன செலுத்தி வழிபடுவார்கள். ஆயுதங்களுக்கு நெய் பூசிப் பூமாலை சாத்திப் பூசனை புரிவர். மாற்றவரின் அரண்களை யுடைத்துத் தகர்த்துத் தரைமட்டமாக்கிக் கழுதை பூட்டி ஏர்கொண்டுழுது காட்டு வித்துக்களைவிதைப்பார்கள். அரசர்கள் துயில்நீத் தெழும்புமாறு சங்கம் முழக்கி எக்காளமூதுவர். மலை சார்ந்த குறிஞ்சி நிலத்தார் நட்ட பயிருக்கிசைய மழை கூடவும் குறையவும் வேண்டிப் பலி செலுத்தித் தெய்வதம் பரவுவார்கள். வினைப்பயனே பிறவிக்குக் காரணமென்றும், வேதாகமப் பொருள்கள் மெய்ப் பொருள்க ளென்றும் கடவுளொருவருள ரென்றும், நம்பி ஒப்புக்கொள்ளாதவர்களை மிகவும் இகழ்ந்து அருவருத்து யாண்டும் புறக்கணிப்பர். செல்வழிகளில் சிவாலயங்கள் கண்ணெதிர்ப்படின், அரசர் தாமும் வாகனமிழிந்து தங்கள் வெண்கொற்றக் குடைகளைச்சாய்த்து வணங்கிச் செல்வார்கள். அரசர்கள் தம்பொருட்டுமாத்திர மன்றித் தம்பிரசைகளின் சுய நலங்களைக்குறித்தும் அடிக்கடி பற்பல வேள்விகளையும் யாகங்களையுஞ் செய்வார்கள். அங்ஙனஞ் செய்துழி அந்தணர் பாவலர்கள் முதலோரும் பலதிசை மன்னர்களுங் கூடிக்குழுமிக்களிப் பெய்துவர். ஈகையே தருமங்களெல்லாவற்றினும் மிகச் சிறந்ததென்று யாண்டும் பாவலர் வியந்துகூறுவர். செய்குன்றியற்றி, கழங்காடிப் போதுகொய்து புனல் விளையாடிப் பொழுது போக்குவர். ஆடவரைப்போற் பெண்களுங் கள்ளருந்திக் களிகூர்வர். கள்ளின் காரமேறும்படி அதனை வேய்ங்குழல் முதலியவற்றிலடைத்தும் மட் பாண்டங்களிற் பெய்தடக்கியும் வைப்பார்கள்.

(தமிழ் வரலாறு பக். 83-84).

## பொழுது போக்கு

பெண்களுக்கு வீட்டில் கிளிப்பிள்ளைகளைப் பேசப் பழக்குதல், வள்ளை அம்மானை என்னும் பாட்டுகளைப் பாடுதல், கழங்கு அன்றேல் பந்து விளையாடுதல். முதலியன சிறந்த பொழுது போக்குகளாகும்.

"கந்தாடு மாலியானைக் கார்வண்ணன் பாவை
கருமேகக்குழன் மடவார் கைசோர்ந்து நிற்பக்
கொந்தாடும் பூங்குழலுங் கோதைகளு மாடக்
கொய் பொலந்துகிலசைத்த கொய்சகந் தாழ்ந்தாட
வந்தாடுந்தேனு முரல் வரிவண்டு மாட
மணிவடமும் பொன்ஞாணும் வார்முலை மேலாடப்
பந்தாடு மாடே தன்பவை நெடுங்கணுடப்
பணைமென் றோணின்றுடப் பந்தாடுகின்றாள்."

(சூளாமணி—சுயம்வரம்).

மாலைக்காலத்தில் செல்வர்கள் குதிரைகள் பூட்டப் பட்ட தேர்களை வீதிவழியே செலுத்திச் செல்வர். உப்பரிகைகளினின்று வெளியே நோக்கும் அவர் மகளிரிடத்திருந்தும் வரும் நறுமணம் வீதிகளில் வீசும். அழகாக உடுத்திய வாலிபர் அழகிய ஆபரணங்களையும் பூந்தாரையும் அணிந்த பரத்தையருடன் வீதிவழியே உலாப்போவர். ஆடவர் பரத்தையருடன் நட்புக்கோடல் இழிவாகக் கருதப் படவில்லை. பரத்தையிற் பிரிதல் எல்லார்க்கு முரித்தே, என்பர் தொல்காப்பியர். சேவல்கவுதாரி கிடாய் முதலியவற்றை போர்க்கு விடுதலும் அக்காலப் பொழுது போக்குகளாகும்.

## சிறுவரின் பொழுது போக்கு

சிறுர், தச்சராற் செய்யப்பட்டுச் சிறிய குதிரைகளை விழுக்கப்படும் தேர்களிற்செல்லும் இன்பத்தை எய்தாராயினும் தமது கைகளினல் விளையாட்டுத்தேரை இழுத்து இன்புறுவர்,

> " தச்சன் செய்த சிறுமா வைய
> மூர்ந்தின் புறுஅ ராயினுங் கையி
> னீர்த்தின் புறாஉ மிளையோர்" (குறுங்—61)

சிறிய பெண்கள் கடலிலே நீராடும்போது மணலிலே சிறு வீடுகள் இமைத்து விளையாடுவர் (ஷை—326) வயிர உலக்கையினல் அவலிடிக்கும் பெண்கள் உலக்கையை எறிந்துவிட்டு வண்டலில் விளையாடுவார்கள் (ஷை—238.)

ஊஞ்சல் (உஞ்சால்) ஆடுவதும் சிறுவர்களின் பொழுது போக்காகும்.

> " பெருங்கயிறு நாலு மிரும்பனம் பிணையற்
> பூங்கணுய மூக்க " (நற்—90).

பள்ளிக்குப் போகாதசிறுர், வேப்ப நீழலில் கோடுகள்கீறி நெல்லிக்காய் கொண்டு கழங்காடுவார்கள்.

> " வெம்பின் புள்ளி நீழற்
> . கட்டளையன்ன வட்டரங் கிழைத்துக்
> கல்லாச் சிறுஅர் நெல்லி வட்டாடும்"

பெண்கள் வீட்டின் முற்றத் திலுள் (நற்—3).
ளமணலில் கழங்காடுவார்கள் (நற்—79).

சிறார் குளங்களில் குதித்து ஆழ்ந்து கல்மண் முதலிய வற்றை எடுத்து விளையாடுவார்கள். தாயம் ஆடுதல் பெரும்பாலார் பொழுது போக்காகும். "ஈரைந்து பெற்றான் உள்ளம் போல்" (கலி).

## பெண்கள் கல்வி

தமிழ் இலக்கியங்களில் பல பாடல்களைச் செய்தவர்கள் பெண்புலவர்களாகக் காணப்படுகின்றனர். ஆடவரைப் போலப் பெண்களும் கல்வியிற் சிறந்து விளங்கினார்கள். போர்க்கோலங் கொண்டு செல்லும் படைகளிலும் 'விறலியர்' என்னும் பெண்கள் இருந்தாரெனில் பெண்கள் கல்வி நிலை மிக ஏற்றம் பெற்றிருந்ததென்றே சொல்ல வேண்டியிருக்கின்றது.

காவற்பெண்டு, பேய்மகள், இளவெயினி, மாசாத்தியார், பூங்கணுருத்திரையார், பொன்முடியார். ஔவையார் முதலியோர் புறநானூற்றில் சிலபாக்களைச்செய்தவர்களாவர்.

## தாலி தரித்தல்

பழைய நாளிற் குறிஞ்சி நிலத்து இளைஞர் புலியை எய்துகொன்று தமது வீரச்செயலைக்காண்பித்துமலைவாணர் மகளிரை வதுவை செய்வர். புலியைக்கொன்ற ஆடவன் தனது வீரத்துக்கு அடையாளமாக புலியின் பற்களை நாணிற்கோத்துப் பெண்ணின் கழுத்தில் அணிவான். இவ் வழக்கமே நாளடைவில் தாலி தரிக்கும் வழக்கமாக வந்தது. இது தமிழ் நாட்டுக்கே உரியது.

## மனைகள்

வறியவர் வீடுகள் மண்ணினால் எடுக்கப்பட்ட சுவர்களுடையன ; புல்லினால் அல்லது தென்னங்கீற்றுகளினால் வேயப்பட்டன. வீட்டின் முன்புறத்தில் பந்தர் இருக்கும்.

அதனைத் தலைவாயில் என்று வழங்குவர். சுவர்கள் சிவந்த மண்ணினால் மெழுகப்பட்டிருந்தன. பட்டினங்களில் வீடுகள் செங்கல்லினாற்கட்டப்பட்டு ஓட்டினால் வேயப்பட்டன. அவற்றில் மானின் கண்போன்ற சாளரங்கள் வெளிச்சம் புகுவதற்காக அமைக்கப்பட்டன. சில கோட்டை கொத்தளங்கள் செங்கல்லினாலும் சுண்ணாம்பினாலும் எடுக்கப்பட்டன.

"புல்வேய்குரம்பை" "சில்காற்றிசைக்கும் பல்புழை நல்இல்" "இல்வேய்குரம்பை" எனப் பத்துப் பாட்டில் சொலலப்படுவதை நோக்குக.

## பொறிகள்

எந்திரச் செய்கைகளால் மாட்சிமைப்பட்ட ஊர்திகளும் பிறவும் இருந்தன. கார்நாற்பது 21-ம் பாட்டில் 'பொறிமாண் புனைதிண்டேர்' எனக் கூறப்படுதல் காண்க. இதனால் குதிரை முதலியவற்றால் இழுக்கப்படாது இயந்திரத்தினால் இயக்கப்படும் தேர் இருந்ததென விளங்குகிறது. பொறிகளால் நீர் வற்றவும் நிறையவும் செய்யப்படும் கிணறுகளும் வாவிகளுமிருந்தன. அவை, 'ஏந்திரக் கிணறு' 'ஏந்திரவாவி' என்னும் பெயர்களால் அறியப்பட்டன. பெருங்கதையில் பல பொறிகளின் விபரம் காணப்படுகின்றது. அவைகளாவன "காளைகளின்றி விரைந்து செல்லும் எந்திரவண்டியும், பல வீரர்களை ஆயுதங்களுடன் தன்னுள்ளடக்கிக் கொண்டு உயிருள்ளதுபோல் நடந்து சென்று மயக்கும் யானைப்பொறியும், ஏற விரும்பியவர்களைத் தன்னுள் ஏற்றிக்கொண்டு பார்க்கவேண்டிய இடங்களை அவர்கள் பார்க்கும்படி ஆகாய வழியே செல்லும் விமானமும், காலத்தைக் காட்டும் எந்திரமும், கடிகையாரமும் (கடி

காரமென இக்காலம் வழங்கும்) கழுத்தில் மாலையா யணிதலின் ஆரமெனப்பட்டது (கடிகை + ஆரம்) நாண் மீன் முதலியவற்றின் தோற்றத்தையும் அத்தமித்தலையும் புலப்படுத்தும் பொறிமண்டிலத்தை உள்ளே பெற்று அரசமங்கையர் ஏறுதற் குரித்தாயிருந்த வண்டியும், பிடிகையும் (இப்போதுள்ள ஈருருளி) (Bicycle போன்றது) இன்னும் இவை போன்ற பல விசித்திரப் பொருட்களுமாம்.''

## படுக்கை

"சிங்கக் கான்மேல் தைத்த தூங்கு கட்டிலின் இலங்கும் மாட்சிமை விளங்கும் அன்னத்தூவியாற் செய்த மெல்லிய படுக்கை'' என கலித்தொகை 13-ல் ஓர் தலைவனின் படுக்கையின் விபரங்காணப்படுகின்றது. நெடுநல்வாடையில் யானைக் கொம்பினுற் செய்யப் பட்டதும், நாடாவினுர் பின்னப்பட்டதும் பல்வேறு மெத்தைகள் போட்டு பூக்களினிதழ் பரப்பித் துகிலின் தூமடி விரிக்கப்பட்டதுமாகிய கட்டில் என்றும், கட்டிலின் மேல் விதானத்தில் திங்களும் ரோகிணியும் எழுதப்பட்டிருந்தன வென்று கூறப்படுகின்றது.

"புலிவடிவமைந்த காலையுடைய கட்டிலில் எலிமயிராற் செய்யப்பட்ட பூத்தொழிலையுடைய போர்வையை விரித்து, கப்பலிலே வந்தபல வகைபான படுக்கைகளில் ஆராய்ந்து படுத்து.'' எனப்பெருங்கதையில் கூறப்படுகின்றது. இவை செல்வர்களுக்குரிய படுக்கைகளாகும்.

ஆயர் தடிகளினுல் வரிந்துகட்டப்பட்ட கட்டிலில் ஆட்டுத்தோலைப் பாயாகக் கொண்டு உறங்குவார்களென்றும், எயிற்றியர் மான்றோலைப் படுக்கையாகக் கொள்வார்களென்றுஞ் சொல்லப்படுகிறது.

## விளக்குகள்.

வறியோர் மண்ணினால் செய்யப்பட்ட விளக்குகளை உபயோகித்தனர். ஏனையோர் இரும்பு, செம்பு, வெண்கலம் முதலியவற்றாற் செய்யப்பட்ட விளக்குகளைப் பாவித்தனர். யவனர்களாற் கொண்டுவரப்பட்ட அன்ன விளக்கு பாவை விளக்கு முதலியனவும் உபயோகிக்கப்பட்டன.

'யவன ரோதிம விளக்கு' (பெரும்பாண்)
'பாவை விளக்கிற் பரூஉச் சுடர் அழல' (முல்லைப்பாட்டு)
'யவனப் பாவை அணி விளக்கு' (பெருங் கதை)

## பட்டங்கள்

இக்காலம் அரசரால் அளிக்கப்படும் பட்டங்களைப் போல தமிழ் அரசர் போர் வீரருக்கும் பிறருக்கும் பல பட்டங்களை அளித்தனர். எட்டிப் பட்டம்—இது எட்டிப் பூவைப் போல் பொன்னாற் செய்து வணிகருக்குக் கொடுக்கும் பட்டம். ஏனாதிப் பட்டம்—சேனாபதியர் முதலாயினோர்க்கு அரசனால் அளிக்கப்படும் பட்டம். காவிதிப்பட்டம்—உழுவித்துண் போர்களிற் சிறந்தோர் அரசனாற் பெறும் பட்டப் பெயர். ஏனாதிப் பட்டத்துக்கு மோதிர மளித்தல் வழக்கு "ஏனாதி மோதிரஞ் செறிக்குந்திருவுடையா னொருவன்" என்பது இறையனாரகப் பொருளுரை.

## வெள்ளணி நாள்

அரசர் தாம் பிறந்த நாளில் வெள்ளணி அணிந்து கொண்டாடுவர். அவர் முடி சூட்டுந் தினத்தையும் பெரு நாளாகக் கொண்டாடுதல் மரபு. இந்நாளில் அரசன் சிறைக் கோட்டத்துள்ளோரை விடுதலை செய்வான்.

பாண்டிநாடு முத்துக்குப் பேர் போனது. 'மாக்கோ போலோ' என்பவர் முத்துக் குளிப்பைப்பற்றிக் கூறிய வரலாறு உண்மையா யிருக்கிறது. "சுந்தரபாண்டி தேவருடைய நாட்டில் முதற்றரமான பெரிய முத்துகள் காணப் படுகின்றன. அவை எப்படி எடுக்கப்படுகின்றன என்பதைப்பற்றிச் சொல்லுகிறேன். முத்துக்குளிப்போர் பெரிதும் சிறிதுமாகிய மரக்கலங்களைக் கொண்டு இலங்கைத் தீவுக்கும் இந்தியாவுக்கும் இடையிலுள்ள குடாவுக்குச் செல்கிறார்கள். அவர்கள் முதலில் பெத்திலார் (Bettelar) என்னும் ஓர் இடத்தை அடைகிறார்கள். பின்குடாவுக்குள் அறுபதுமைல் தூரம் செல்கின்றனர். இங்கே அவர்கள் தோணிகளை நங்கூரமிட்டு சிறிய வள்ளங்களில் ஏறிக்கொள்கின்றனர். அங்கே வியாபாரிகள் பல கூட்டங்களாகப் பிரிந்து செல்கின்றனர். அவர்கள் முத்துக் குளிப்பவர்களை சித்திரை மாசந் தொடக்கம் வைகாசி மாசம் வரைக்கும் சம்பளத்துக்கு அமர்த்திக் கொள்கின்றனர். அங்கு கிடைக்கும் முத்துக்களில் பத்திலொன்றை அரசனுடைய காணிக்கையாகக் கொடுத்துவிடல் வேண்டும்; முத்துக்குளிப்போரை பெரிய மீன்கள் துன்பஞ் செய்யாதிருத்தற் பொருட்டு அவற்றை மந்திரத்தால் கட்டுகின்றவர்களுக்கு இருபதில் ஒன்று கொடுக்கவேண்டும் மற்சங்களை மந்திரங்களாற் கட்டுபவர்கள் பிராமணர்களாவர். அவர்களுடைய மந்திர வலி பகல்நேரத்தில் மாத்திரம் பலிக்கும். இரவிலே மற்சங்கள் தங்கள் எண்ணப்படி திரியும்பொருட்டு மந்திரத்தை அவிழ்த்துவிடுகிறார்கள். முத்துக்குளிப்போர் சிறிய வள்ளங்களில் ஏறியவுடன் நாலுமுதல் பன்னிரண்டு பாகத் தண்ணீருள் குதித்துச் சுளியோடி அடியிற்சென்று மூச்சடக்

கக் கூடியவரையில் தங்குகிறார்கள். கீழே காணப்படும் முத்துச் சிப்பிகளைப் பொறுக்கி அரையிலே கட்டியிருக்கும் வலைபோன்ற ஒரு பைக்குட் போட்டுக்கொண்டு மேலே வந்து மறுபடியும் கீழே செல்கின்றார்கள். இவ்வகையாக பெருந் தொகையான சிப்பிகள் எடுக்கப்படுகின்றன. இச் சிப்பிகளிலிருந்து உலகம் முழுமைக்குஞ்செல்கின்ற முத்துக்கள் எடுக்கப்படுகின்றன. முத்துக்குளிப்பினால் அரசன் பெருந் தொகையான வருவாயடைகிறான். அரைசாக்கியோ (Saggio) நிறைக்கு மேற்பட்ட முத்துக்களை ஒருவராவது அவனது தேசத்துக்கப்பால் கொண்டுபோதல் கூடாது. அவ்வகையான முத்துகளைத் தான் பெற விரும்பியே அரசன் அவ்வகையான சட்டத்தை உண்டாக்கியிருக்கிறான். அவனிடத்திலுள்ள முத்துகள் எண்ணிக்கை யில்லாதன. பெரிய முத்துகள் அல்லது இரத்தினங்கள் வைத்திருப்பவர்கள் அவற்றைத் தன்னிடத்துக்குக் கொண்டு வந்தால் அது பெறும் விலையில் இரு மடங்கு தான் கொடுப்பதாகவருடத்துக் கொருமுறை நாடு முழுமையும் அறிவிக்கிறான். அவ்வகையான முத்துகள் இரத்தினங்களை வைத்திருப்போர் அவற்றை அரசனிடத்தில் கொடுத்து விலையைப் பெற்றுக் கொள்கின்றனர்.

முத்துகளைத் தவிர வேறு விலை உயர்ந்த பொருட்களையும் அரசன் வைத்திருக்கிறான். அவன் பலவகை இரத்தினங்கள் பதித்த ஆரங்களைக் கழுத்தில் அணிந்திருக்கிறான். 104 பெரிய முத்துகளும் இரத்தினங்களும் கோக்கப்பட்ட ஒரு பட்டு நூல் அவன் மார்பிலே தொங்குகின்றது. அவன் காலையிலும் மாலையிலும் 104 துதிகளை கடவுளுக்குச் சொல்லவேண்டியிருப்பதால் இங்ஙனம் அணிந்திருக்கிறானென்று சொல்லப்படுகின்றது. இவ்வகையாகவே இவனது

முன்னோரும் செய்து வந்தார்கள். முன்னோர் வைத்திருந்த ஆரத்தையே இவன் பெற்றான்.

முத்துகள் அழுத்திச் செய்யப்பட்ட மூன்று பொன் வளையல்களை அரசன் புயத்திலே பூண்டிருக்கின்றான். அவைபோன்ற வளையல்களைக் காலினும் அணிந்திருக்கின்றான். கால் விரலில் அவைபோன்ற மோதிரங்களையு மணிந்திருக்கின்றான்.

இங்ஙனம் அரசன் அணிந்திருக்கும் அணிகளின் விலை ஒரு நாட்டின் வருமானத்தினும் கூட இருக்கும். இவ்வகையான பொருட்கள் அவனிடத்திற் பல உண்டு'' என மாக்கோபோலோ கூறியிருக்கின்றான்.

அவனிறக்கும்போது அவனுடைய பிள்ளைகள் களஞ்சியத்தைத் தீண்டமாட்டார்கள். 'எங்கள் தந்தை எவ்வளவு சேகரித்திருக்கிறாரோ அவ்வளவு நாங்களும் தேடி வைத்திருக்க வேண்டுமெனச் சொல்லுகிறார்கள். வாசிவ் (Wassaf) என்னும் மகமதிய சரிதாசிரியர் கூறுவதிலிருந்து மார்க்கோபோலோ பாண்டியர்கள் திரட்டி வைத்திருந்த பொருள் நிலையை சரியாக அறிந்திருந்தா னென்பது விளங்குகின்றது. குலசேகரனது கருவூலம் பொருளால் நிறைந்தது. அவனது கருவூலம் 12,000 (Crores) உள்ளதா யிருந்தது. இதைவிட முத்துப் பவழம் இரத்தினம் முதலிய பல பொருட்கள் இருந்தன. அவனுடைய செல்வத்தை அளவிட்டுக் கூற மொழி இடங்கொடாது' என அவன் கூறுகின்றான். மார்க்கோபோலோ அரசனையும் அவனது சபையையுங் குறித்துக் கேட்பதற் கின்பமாகிய செய்திகள் கூறுகின்றான். 'இந்த அரசன் ஐஞ்ஞூறு மனைவியரை உடையவனா யிருக்கிறான். அவனுக்குப் பல பிள்ளைகளுண்டு. அரசனைச் சூழ்ந்து பல பிரபுக்கள்

இருக்கிறார்கள். அவர்கள் அவனுடன் கூடச் சவாரி செய்கிறார்கள். அவர்கள் எப்பொழுதும் அரசனுக்குச் சமீபத்தில் இருக்கிறார்கள். அரசாங்கத்தில் அவர்களுக்குப் பெரிய அதிகாரமுண்டு. அவர்கள் 'ஆபத்து உதவிகள்' என்று அழைக்கப்படுவார்கள். அரசன் இறந்து எரியில் கொளுத்தப்படும்போது அவ்வாபத்துக் குதவிகளும் பிரேதத்தைச் சூழ்ந்து தீயில் விழுந்து இறந்துபோகின்றார்கள். இம்மையில் அரசனுக்குதவியாயிருந்த தாம் மறுமையிலும் அவனுக்கு உதவியா யிருக்கவேண்டுமென்று அவர்கள் சொல்லிக் கொள்கின்றனர்.

மார்க்கோபோலோ பொது சனங்களின் சீவியத்தைக் குறித்துக் கூறுகின்றார். அவர்களுடைய நடை உடை முதலியன அவரை ஆச்சரியமுறச் செய்தன. 'மாபார்' (Between Quilon and Nellore) என்னும் மாகாணத்திலுள்ளவர்கள் அரைக்குமேல் நிருவாணிகளாகவே யிருந்தனர். அதனால் அங்கே தையற்காரர்கள் காணப்படவில்லை. அரசன் முதல் வறியவர்கள் ஈறாக எல்லோரும் அரையில் ஓர் ஆடைமாத்திரம் தரித்துக்கொள்வர்'

அக்காலத்தில் 'சதி' (உடன்கட்டை ஏறும் வழக்கம் இருந்ததென்றும் கொலைக்குத் தீர்க்கப்பட்ட குற்றவாளிகள் தமது விருப்பத்தின்படி யாதேனுமொரு கோயிலுக்குத் தம்மைப் பலியாகக் கொடுத்துவிடலாமென்ற பிரமாண மிருந்ததென்றும், சனங்கள் பசுக்களை வணங்கினார்களென்றும் மாட்டு மாமிசம் அக்காலத்திற் புசிக்கப்படவில்லை யென்றும் மார்க்கோப்போலோ கூறுகின்றான்.

இந்நாட்டிலே உள்ளவர்கள் வீடுகளைச் சாணியால் மெழுகுவார்கள். பெரியவர்களும் சிறியவர்களுமாகிய எல்லோரும் தரையிலேயே இருப்பார்கள்.

இந்நாட்டவர் வெறும் மேனுடனேயே சண்டைக்குச் செல்கின்றனர். அவர்கள் ஈட்டியும் கேடயமும் வைத்திருப்பார்கள்.

ஆண்களும் பெண்களும் தினம் இருமுறை குளிப்பார்கள். அப்படிச் செய்யாதவர்கள் தாழ்வாகக் கருதப்பட்டார்கள். அவர்கள் வலது கையால் உணவை எடுத்துச் சாப்பிடுவதே யன்றி இடதுகையாற் றீண்டமாட்டார்கள். இவ்வாறே நீர் பருகுகிறார்கள். ஒவ்வொருவரும் தனித்தனி ஒவ்வோர் பாத்திரம் வைத்திருக்கின்றனர். அவர்கள் நீர் அருந்தும்போது பாத்திரம் உதட்டில் முட்டுவதில்லை. எக்காரணத்திலாவது அவர்கள் நீரருந்தும் பாத்திரத்தைஉதட்டில் முட்டவிடமாட்டார்கள். அன்னிய னொருவன் நீரருந்துவதற்குப் பாத்திரம் வைத்திராவிட்டால் அவன் உண்ணும்படி நீரைக் கையில் ஊற்றுவார்கள்.

அவர்கள் குற்றவாளிகளுக்குத் தண்டனை இறுப்பதில் மிகவும் கவனஞ் செலுத்தினார்கள். அவர்கள் மது உண்பதில்லை. மது பானஞ் செய்பவர்கள் நம்பிக்கையுள்ளவர்கள் (Sureties) ஆகக்கருதப்படமாட்டார்கள் என்று சட்டஞ் செய்திருந்தார்கள். கடன் கொடுத்தவன் கடன்காரனைப் பலமுறையும் பணத்தைக் கேட்க அவன் கொடாவிட்டால், அல்லது பலதவணைகள் சொன்னால் அவன் ஒரு வட்டங் கீறி கடன் காரனை அதற்குள் நிறுத்தலாம். கடன் பட்டவன் கடன் கொடுத்தவனைத் திருப்திப் படுத்தியபின் அல்லது அவனுக்குத் தகுந்த பொறுப்புச் செய்த பின் தான் அவ்வட்டத்தினின்றும் விலகலாம். அவன் இவ்வாறு செய்யாது வட்டத்தின் வெளியே செல்வானாயின் அவனுக்குக் கொலைத்தண்டம் விதிக்கப்படுகின்றது.

அவர்களில் சாமுத்திரி காலட்டணம் அறிந்தவர்கள் பலர் உண்டு. சகுனம் பார்ப்பதில் அவர்களுக்கு மிகுந்த நம்பிக்கை. பிள்ளை பிறந்தவுடன் அது பிறந்த மாதம் தேதி நாழிகை முதலியவற்றை எழுதிவைக்கிறார்கள். அவர்கள் செய்யும் கருமம் ஒவ்வொன்றும் சோதிட சம்பந்தமா யிருப்பதாலேயே இங்ஙனம் செய்கிறார்கள்.

"இந்த நகரத்திலுள்ள சனங்களும் இந்தியாவின் மறு இடங்களிலுள்ள சனங்களும் 'டெம்புல்' (Tembul) என்னும் ஒருவகை இலையை எப்பொழுதும் வாய்க்குள்வைத்து மெல்லுகின்றார்கள். அவர்கள் அவ்விலையை மென்று உமிழ் நீரை வெளியே துப்பி விடுகின்றனர். அரசர்களும் செல்வர்களும் கர்ப்பூரம் முதலியன கலந்தவாசனைப்பொருட் களுடன் அதனை உபயோகிக்கிறார்கள். இவ்வழக்கம் சுகத் துக்கு மிகவும் நல்லதெனச் சொல்லப்படுகிறது.

இங்கு குதிரைகள் கிடைப்பதில்லை. இதனால் பிறநாடு களிலிருந்து குதிரைகள் வாங்குவதில் இந்நாடு பெருந் தொகைப் பணத்தைச் செலவிட்டது. கிஸ்(Kis)ஹோர்ம்ஸ் (Hormes) டோவர் (Dofar) சோஏர் (Soer) ஏடின் முத லிய நாட்டவர்கள் இந்த நாட்டு அரசனுக்கும் அவனது நாலு சகோதரருக்கும் விற்கும்படி குதிரைகள் கொண்டு வருவார்கள். ஒரு குதிரையின் விலை 500 சக்கி (Saggi) பொன்னாகும். அது 100 வெள்ளி மார்க்ஸ் (Marks) க்குச் சரி.

'வாசிவ்' பின்வருமாறு கூறுகிறார்.

"குதிரைகள் இங்கு வந்ததும் பச்சைவாளி கொடுப் பதற்குப் பதில் வறுத்த வாளியையும், தானியங்களையும் நெய்யுடன் கலந்து கொடுக்கிறார்கள். குடிப்பதற்கு காய்ச் சிய பசுவின் பாலைக் கொடுக்கிறார்கள். அவர்கள் 40 நாட்

களுக்கு அவைகளை கயிறுகளால் லாயத்திற் கட்டிக் கொழுக்கும்படி விடுகிறார்கள். இந்திய போர்வீரர் அவற்றின்மீது துட்ட தேவதைகளைப் போலச் சவாரி செய்கிறார்கள் சிறிது காலத்துக்குப்பின் வேகமுள்ள குதிரைகள் பலமற்றனவாய் உபயோகமற்றுப் போகின்றன. இதனால் வருடா வருடம் புதிய குதிரைகள் வாங்க நேர்கின்றது.

(Pandian Kingdom).

*மார்க்கோபோலா கி. பி. 1254 முதல் 1324 வரையில் வாழ்ந்தவன்.*

## பெரும்பாணாற்றுப்படை

(இதில் பழந்தமிழரின் பழக்க வழக்கங்கள் நன்று கூறப்பட்டிருக்கின்றன.)

இளந்திரையன்பாற் சென்று பரிசில் பெற்றானொருவன், பரிசில் பெறுதற்கு விரும்பிய பெரும்பாணனொருவனை எதிர்ப்பட்டு அவ்வரசன்பால் ஏகுமாறு அவனை ஆற்றுப்படுத்தி இளந்திரையனின் இராசதானியாகிய காஞ்சிபுரத்துக்குச் செல்லும் மார்க்கத்தினைக் கூறுகின்றான்.

அவனுடைய நகரில் வழிப்போக்கர் அலறும்படி வெட்டி அவர் பொருள்களைக் கொள்ளை கொள்ளும் தீயோரில்லை. அவனுடைய காட்டில் இடியேறும் இடியாது; பாம்புகளும் தீண்டா; புலி முதலிய விலங்குகளும் தீங்கிழையா. அவ்வகையான காட்டகத்தே நீ பயமின்றி இளைப்பாறிச் செல்லலாம். அக்காட்டில் கவர்பட்ட பல வழிகள் உண்டு. அவ்வழிகளால் உமணர் உப்பேற்றிய வண்டிகளை ஓட்டிச் செல்வர். இருமுனைகளிலும் உருளைகள் மாட்டப்பெற்ற மத்தளம்போன்ற வண்டிகளின் அச்சு மரங்களின் ஊடே ஏணிக் கால்கள் போன்ற இரண்டு தடிகள் கடாவப்

பெற்று, அவற்றில் நாட்டப்பெற்ற தடிகளின்மேல் குடில் போல் பாயினுல் வேயப்பட்டிருக்கும். வண்டிகளின் முன் புறத்தே கோழிக் கூடுகள் காணப்படும். உரல்போன்ற உறிகள் வண்டிகளின் முன்புறத்தே உயரக் கட்டப்பட்டு அதன்மேல் நெல்லிக்காய், புளியங்காய் முதலியன ஊற விட்ட பானைகள் வைக்கப்பட்டிருக்கும்.

உமணப் பெண் கையிலே வேப்பிலையையும் பிள்ளையை யும் உடையவளாய் வண்டியின் முன்புறத்தே யிருந்து எருத்தை முதுகிலே அடித்தோட்டுவாள். பல சிறு துளை களையுடைய நுகத்திலே கட்டப்பட்ட எருதுகள் வண்டி யைத் திருகாமலும் அச்சு முறியாமலும் பக்கத்தே காத்துக் கொண்டு களைத்தாற் பூட்டுவதற்குப் பல எருதுகளை ஓட்டிக் கொண்டு தழையினுற் கட்டப்பட்ட மாலையை அணிந்த உமணர்கள் உப்பின் விலையைக் கூறிக்கொண்டு கவர்பட்ட வழிகளாற் செல்வர்.

பிற நாடுகளினின்றும் வந்த வியாபாரிகள் மாணிக்கம், முத்து சந்தனம் முதலியவற்றை எங்கும் திரிந்து விற் பார்கள். அவர்களுடைய மார்புகள் அம்புகளாற் கிழிக்கப் பட்டு ஆறிய தளிம்புகளுடையன. தம்மை எதிர்ப்போரைத் தாக்குவதற்கு கையிலே வேல் பிடித்திருப்பர்; யானைத் தந் தத்தால் கடைந்தெடுத்த உறையிலே இட்ட வாளை வரிகளை யுடைய சீலையிலே கோத்து- தோளின் ஒரு பக்கத்தே தொங்கவிட்டு சட்டையிட்டு செருப்புத் தொட்டு ஒத்த கனமாகச் சேர்த்த மிளகு பொதிகளை கவர்பட்ட வழி களால் சுமந்து செல்லும் கழுதைகளின் பின் செல்வார்கள். இவ்வாறு சகடங்களும், கழுதைகளும் செல்கின்ற கவர் பட்ட வழிகள் சந்திக்கின்ற இடத்தில் அரசனுல் நியமிக்கப்

பட்ட சுங்கங்கொள்வோர் விற்படையுடன் காத்திருப்பார்கள்.

அக்காட்டிலே எயினர்களுடைய சிறு குடிசைகள் காணப்பெறுகின்றன. அவை அணிலும் எலியும் நுழையாதபடி ஈந்தின் ஓலையினால் வேயப்பட்டு முட்பன்றியின் முதுகுபோன்ற புறத்தினை யுடையனவாயிருக்கும்.

பிள்ளையைப் பெற்ற எயிற்றியர் அக்குடிசைகளின் ஒருபுறத்தே மான்றோல்களில் முடங்கிக்கிடக்க,மற்றவர்கள் பாரையினால் கரம்பை நிலத்தைக் கிளறி எறும்பு சேர்த்து வைத்த புல்லரிசியை எடுத்துவந்து *பார்வைமான் கட்டப்பட்ட விளவின் நிழலையுடைய முற்றத்திலே தோண்டப்பட்ட நில உரலிலே பெய்து வயிர உலக்கையினால் குற்றி, ஆழ்ந்த கிணற்றில் உவர் நீரை மொண்டுவந்து, பழைய ஓறுவாய் போன பேழையிலே உலையை வார்த்து, முரிந்த அடுப்பிலே வைத்து ஆக்குவார்கள். அவர் குடிசைகளை அடைந்தால் இவ்வாறு சமைக்கப்பட்ட சோற்றை உப்புக் கண்டத்துடனே தேக்கிலையில் உண்ணும்படி கொடுப்பார்கள்.

இக்குடிசைகளைக் கடந்து சென்றால் எயினர் அரணைக் காணலாம். அங்கு மதில்களை யுடையனவும் ஊகம் புல்லினால் வேயப்பட்டனவுமாகிய வீடுகள் உண்டு. அவற்றுள் பகைவரைக் குத்தியதால் கூர்மழுங்கிய வேல்கள் மணிகட்டின பரிசைகளோடு விற்களிற் சாத்தப் பெற்றிருக்கும்

* வேட்டையாடுவோர் மிருகங்களையோ பட்சிகளையோ தங்கள் தொழிற்கிசைந்து நடக்குமாறு பழக்கி வலை முதலியன கட்டுமிடத்தில் விடுவார்கள். இவற்றால் நம்பிக்கைகொண்டு இவற்றின் இனங்கள் வந்து கண்ணியில் மாட்டிக்கொள்ளும். இவற்றுள் பட்சியைப் பார்வைப் பட்சியென்றும் மிருகத்தைப் பார்வை மிருகமென்றுங் கூறுதல் மரபு.

தலைவாயிலின் திரண்ட கால்களில் அம்புக் கட்டுகளும் துடியும் தூங்கும். சங்கிலியிலே கட்டப்பட்ட நாய்கள் வீட்டைக் காவல் காத்து நிற்கும். வீட்டைச் சுற்றி முள்வேலியும் அதனைச் சூழ்ந்து காவற்காடும் காணப்படும். வாயிலின் உட்கதவுகள் திரண்ட மரங்களால் தாள் போடப்பட்டிருக்கும். இவ்வகையான எயினர் அரண்களில் தங்கினால் நாய்கள் கடித்துக்கொண்டுவந்த சங்குமணி போன்ற முட்டைகளையுடைய உடும்பின் பொரியலாலே மறைக்கப்பட்ட சோற்றைவீடுகடோறும் பெறுவாய்.

அப்பாற் சென்றால் குறிஞ்சி நிலத்தை அடைவாய். அங்கே வாட்டொழிலைச் செய்யும் குடியிற் பிறந்த புலியின் மீசையைப் போன்ற தாடியையுடைய குறவர் தலைவன் கொடிய வில்லையுடைய காவலருடனே காவலையுடைய பகை வராது முல்லை நிலத்தை அடைவான். விடியற்காலையிலே அவர்கள் பசுக்களை ஓட்டிக்கொண்டு போய் கள்ளுக்கு விலையாகக் கொடுப்பான். பின் தனது வீட்டிலே நெல்லாற் செய்த கள்ளை உண்டு 'ஆட்டுக் கிடாயை முற்றத்தில் அறுத்து உண்டு மத்தளங் கொட்ட நடுவே நின்று இடத் தோளை வலப்பக்கத்தே வளைத்து பகற்பொழுதிலே மகிழ்ந்து ஆடுவான்.' இவ்வகையினதாகிய குறிஞ்சி நிலத்தைக் கடந்தபின்பு முல்லை நிலத்தை அடைவீர்கள்.

அங்கே வீடுகள் குறுகிய கால்களிற் கட்டப்பட்டன. அக்குறுகிய கால்களில் ஆட்டு மந்தைகள் தின்பதற்கு தழைகள் கட்டப்பட்டிருக்கும். வீட்டின் வாயில்களில் சிறிய பற்றைகள் உண்டு. கதவுகள் கயிற்றினால் வரியப்பட்டன. கயிற்றினால் வரியப்பட்டு வரகு வைக்கோல் பரப்பப்பட்ட படுக்கையில் கிடாயின் தோலைப் படுக்கையாகவுடைய முதியோன் காவலாகத் துயிலும் பல குடிசைகள் அங்கு காணப்

படும். முற்றத்திலே அறையப்பட்டிருக்கின்ற முளைகளில் தாமணிகளையுடைய கயிறுகள் கட்டப்பட்டிருக்கும். சீழ்க்கை அடிக்கையினாலே இடையர் மடித்த வாயையுடையவர்களாயிருப்பார்கள்.

விடியற் காலத்திலே மாமை நிறத்தையும் தாழுருவி அசைகின்ற காதினையுமுடைய ஆய்மகள் மத்து ஆரவாரிக்கும்படி தயிரைக் கடைந்து வெண்ணெயை எடுப்பார்கள். பின்புள்ளியாகத் தயிர் தெறித்த மோர்ப்பானையை பூவாற் செய்த சும்மாட்டின்மேல் வைத்து மோரை விற்பார்கள்; விற்றதினாற் கிடைத்த நெல் முதலியவற்றைக் கொண்டு போய் தனது சுற்றத்தாரை உண்ணப்பண்ணுவாள். அவள் தான் நெய்யை விற்றவிலைக்குக் கட்டியாகிய பசும்பொன்னை வாங்காளாய், பாலெருமையையும், நல்ல பசுவினையும், எருமை நாகினையும் கொள்ளுவாள். இவ்வகையின தாகிய ஆயர் குடியிருப்புகளிற் தங்குவாயாயின் தினையரிசியாலட்ட சிலுத்த சோற்றைப் பாலுடனே பெறுவாய்.

அப்பால் முல்லை நிலத்து ஊர்களை அடைவீர்கள். அங்கு வீடுகளின் முற்றத்தில் வரகு முதலியன போட்டு வைக்கும் கூடுகள் (குதிர்) காணப்படும். வரகு திரிகைகள் தலைவாயிலில் நடப்பட்டிருக்கும். கொட்டில் வீடுகள் வரகு வைக்கோலினால் வேயப்பட்டிருக்கும். அவ் வீடுகளின் ஒரு புறம் அடுப்பெரித்ததினால் புகைசூழ்ந்திருக்கும். வீடுகளின் சுவர்களில் வண்டிற் சில்லுகளும் கலப்பைகளும் சார்த்தி வைக்கப்பட்டிருக்கும். அங்கே தங்கினால் வரகு சோற்றைப் பெறுவாய்.

முல்லை நிலத்தைச் சார்ந்த மருதத்தில் வீடு நிறைந்த உணவினையுடைய உழவர் வயல்களை விதைப்பார்கள். அறுக்கும் பருவத்தில் அதன் கட்டங்கும் குறும்பூழ் (காடை)

யறக்கலாற்ருத இளைய பிள்ளைகளைக் கூட்டிக்கொண்டு முல்லை நிலத்தே செல்லும். வயல்களிலுள்ள தேனூறுகின்ற பூவை மாலையாகக் கட்டிச்சூடி அதனை வெறுத்த தொழில் செய்வாருடைய பிள்ளைகள் முள்ளியின் கரிய பூவைப் பறித்து கோரையைப் பல்லாலே மென்று கிழித்த நாராற் கட்டிய மாலையை ஈருடைய தலையிலே யணிந்து கடம்பின் தாதை மார்பிலே அப்புவார்கள். அவர்கள் பழஞ்சோற்றை வெறுத்து பன்றி முதலிய காத்தற்கு வரம்பிலே கட்டப் பட்ட புதியவைக்கோலால் வேய்ந்த சிறிய குடிலின் முற்றத் தே அவலிடிப்பார்கள். அவலிடிக்கும் உலக்கையிேைசை கிளிகளை வெருவச் செய்யும். வளைந்த கதிரினையுடைய வயலினிடத்து விளைந்த நெல்லை யறுப்போர் சிலந்தியினது நூல்கள் பக்கத்தே சூழ்ந்த போர்களின் அடியை எடுத்து விரிப்பார்கள். பின் ஏர் கடா விடுவார்கள். வைக்கோலையும் கூளத்தையும் அதனின்றும் நீக்கி மேல்காற்றிலே தூவித் தூற்றின பொலிமலைபோலத் தோன்றும். இவ்வகையான மருதநிலஞ் சேர்ந்த குடியிருப்புகளில் வீட்டின் பக்கத்தே தறிகளில் நெடிய தாம்புகளில் கன்றுகள் கட்டப்பட்டு நிற்கும். ஏணி எட்டாத உயரத்தையுடையதும் தலை திறந்து உள்ளே சொரியப்பட்ட பழைய நெல்லினையுடையதுமாகிய தானியக் கூடுகள் வீடுகளில் உண்டு. தச்சச்சிறூர் செய்த சிறு தேர்களைப் பிள்ளைகள் உருட்டிச் சென்ற களைப்பாலே செவிலித்தாயருடைய பாலை நிறைய உண்டு படுக்கையிலே துயில்வார்கள். இவ்வகையான வறுமை தெரியாத குடியிருப் பினையுடைய ஊரிலே நல்ல நெற் சோற்றினை கோழிச் சேவலின் சமைத்த பொரியலோடே பெறுவாய்.

அங்கே புகைசூழ்ந்த கொட்டில்களில் கருப்பஞ் சாற்றைக் காய்ச்சுவார்கள். அக் கொட்டில்களை அடைந்

தால் முன் கருப்பஞ் சாற்றைக் கொடுத்துப் பின் கட்டியை உண்ணும்படி தருவார்கள்.

அப்பாற் சென்றால் வலைஞர் குடியிருப்பை அடைவீர்கள். அவர் வீடுகள் காஞ்சி வஞ்சி முதலிய மரங்களின் கொம்புகளை கைகளுக்கு நடுவே தூணாக நட்டு மூங்கிற்றடிகளை வரிச்சாக நிரைத்து தாழை நாராற் கட்டி தருப்பைப் புல்லால் வேய்ந்த பதிந்த இறப்பையுடையன வாகும். மீன்களை வாரி எடுக்கும் வலைகள் முற்றத்திலே காணப்படும் தலை வாயிலின் கூரையில் படர்ந்துள்ள சுரைக் கொடியில் காய்கள் தொங்கும். இளையவர்களும் முதியவர்களும் தலைவாயிலிடத்தில் கூடியிருந்து பின் இறாவும் கயலும் பிறழும். ஆழ்ந்த குளங்களில் பிள்ளைகளோடே யுலாவி மீன்களைப் பிடிப்பார்கள். அவர்கள் குடியிருப்பில் தங்கினால், குற்றாத கொழியலரிசியை கழியாகத் துழாவியட்ட கூழை அகன்ற வாயையுடைய தட்டுப்பிழாவிலே உலர வாற்றி பாம்புகிடக்கின்ற புற்றும் பழஞ் சோற்றினை யொக்கும் புறத்தினையுடைய முளையினை யிடித்துச் சேர அதிலே கலந்து சாடியின் கண்ணே முற்றின, விரலாலே அலைத்து அரிக்குந் தன்மையையுடையதாகிய வெவ்வியகள்ளை மீன் சூட்டுடன் பெறுவாய். நீர்த் துறையிலே விளையாடி மகளிர் போகவிட்டுப் போன குழையினை நீலநிறமுள்ள சிச்சிலிப் பறவை தனக்கு இரையென எடுத்துக்கொண்டு பட்சிகள் நிறைந்திருக்கும் பனையிற் போகாது அந்தணர்யாகசாலையில் நட்டயூபத்தின்மேலிருக்கும். அது சோனகர் பாய்மரத்தின் மேலேற்றிய அன்னவிளக்கைப் போலவும் விடிவெள்ளி போலவும் ஒளிவிட்டுத் தோன்றும்.

கடற்கரை, மேற்றிசைக் கண்ணுள்ள குதிரைகளையும் வடதிசைக் கண்ணுள்ள பொருட்களையும் கொண்டுவந்து

தரும் மரக்கலங்கள் சூழப்பெற்றது. மணல் மிகுந்த தெருக்களில் தொழிலாளராற் காக்கப்படும் பண்டசாலைக ளும் பரதவர் வாழும் வானளாவிய மாளிகைகளும் உண்டு. வீடுகளில் விளைபொருட்கள் தேங்கிக் கிடக்கும். உழு கின்ற எருதுகளுடன் பசுக்கள் நெருங்காதபடி ஆட்டுக் கிடாய்களும் நாய்களும் சுழன்று திரியும். உயர்ந்த மாடத் துறையும் பேரணி கலன்களையுடைய மகளிர் பசிய மணி கள் கோத்த வடங்களையுடைய அல்குலினிடத்தே கிடக் கின்ற மெல்லிய துகிலசைய மலையிலே ஆரவாரிக்கின்ற தோகை மயில்போல் உலாவுவார்கள்; காலிடத்தேயுள்ள பொற்சிலம்புகள் ஒலிக்க நூலினால் வரிந்து செய்யப்பட்ட பந்தினை அடித்து விளையாடுவார்கள். முத்தையொத்த வார்ந்த மணலில் மெத்தென மெத்தென கையிற்றரித்தவ ளைகள் அசையும்படியாக பொற்கழங்கு கொண்டு விளையா டுவார்கள்.

கள்ளுண்பார் பலரும் புகுகின்ற வாயிலில் பசிய கொடி கள் அசையும்படி கட்டப்பட்டுள்ளன. முற்றத்திலே தெய்வத்துக்குத்தூவின சிவந்த பூவாடல்கள் இருக்கின்றன. அங்கே கள்ளைச் சமைக்கின்ற மகளிர் வட்டில் கழுவிய நீர் வடிதலின் நிலஞ்சேறாயிருக்கும். அச்சேற்றில் புரளுகின்ற பெண் பன்றியுடனே புணர்ச்சிக் கருத்தால் போகாமல் குழியிலே நிறுத்தி நெல்லை இடித்த மாவாகிய உணவி னால் ஆண்பன்றி வளர்க்கப்படுகின்றது. இவ்வகையான பட்டினத்தில் தங்குவாயாயின் அப்பன்றியின் தசையோடு கள்ளை உண்ணும்படி பெறுவாய். துறைமுகத்தின்கண்ணே ஆகாயத்தை முட்டும்படி உயர்ந்ததும் கற்றை முதலியவற் றால் வேயாததுமாகிய கலங்கரை விளக்கம் உண்டு. இது மரக்கலங்கள் தாம் சேரும் இடத்தை யறிந்து செல்லும்

படி நிறுவப்பட்டது. இதனைக் கடந்துசென்றால் தென்னங் கீற்றுகளால் வேய்ந்த வீடுகள் இருக்கின்றன. இவ்வகை யான வீடுகளிலே தங்கினால் பலாப்பழத்தையும் இளநீரை யும், வாழைப்பழத்தையும், பனையினது நுங்கோடே வேறு பண்டங்களையும் முற்றினவள்ளி முதலிய கிழங்குகளையும் உண்ணும்படி பெறுவாய்'.

அப்பாற்சென்றால் காந்தள் வளருகின்ற மலையில் யானை படிந்தாற்பால திருவெஃகாவில் பாம்பிலே துயில்கொள்ளும் திருமாலைக் காண்பாய். திருவெஃகாவைக் கடந்து சென் றால் காஞ்சி நகரை அடைவாய். அங்கே சோலைகளுள் பரிக் கோலைக் கையிலே உடைய யானைப்பாகர் கவனமில்லாதிருக் கும்போது யானைகளுக்கு நெய்யுடன் கலந்து வைக்கப் பட்ட அரிசியைச்சூலுடையமந்தி திருடிக்கொண்டுசென்று உண்ணும். தேரோடுதலினால் தெருக்கள் தாழ்ந்திருக் கின்றன.

கடவுள் உறைவதும் சீதேவி வாழ்வதுமாகிய அவ்வா சனின் வியநகரை யடைந்து அவனைப் பலநன்மொழிகளாற் புகழ்ந்துயாழ் வாசிப்பின் அவன் அதனைக் கேட்டு மகிழ்ந்து உன்னுடைய அரையிற் கிடந்த கொட்டைப் பாசியின் வேரையொத்த கிழிந்த சீலையைப்போக்கி பாலாவியை யொத்த விளங்குகின்ற நூலாற்செய்த துகில்களை உனது கரிய பெரிய சுற்றத்தாரோடே உடுக்கப்பண்ணி, வளைந்த அரிவாளைக்கொண்ட கையினையுடைய மடையன் ஆக்கின இறைச்சியிற் கொழுவிய தசைகளையும் செந்நெல் அரிசியாலாக்கிய சோற்றையும், இனிய சுவையுடைய கண்ட சருக்கரை முதலியவற்றுடனே ஊட்டி சிறியவும் பெரியவு மாகிய வெள்ளிக் கலங்களை உங்கள் பிள்ளைகளுக்கிடையே பரப்பி, தான் ஆசையுடனே அவர்களை உண்ணப்பண்ணி

பொற்றாமரையை நீண்ட மயிரிடத்தே அழகுபெறச் சொருகி, நான்கு குதிரைகள் பூட்டிய தேரையும் பசிய பொன்னாற் செய்த சேணத்தையும் பரிசிலாகத் தருவான்.

## சில பிரதான திகதிகள்

| | |
|---|---|
| கி. மு. 450 | ...வடிம்பலம்ப நின்ற பாண்டியன் |
| கி. மு. 350 | ..நிலந்தரு திருவிற் பாண்டியன் |
| கி. மு. 25 | ...பல் யாகசாலை முதுகுடுமிப் பெரு வழுதி (ஆகஸ்டஸ் சீசருக்குத் தூதனுப்பிய பாண்டியன் இவ னாகலாம்) |
| கி. மு. 4-ம் நூற்றாண்டு | ...கார்த்தியாயனர் |
| கி. பி. 50—250 | ...திருக்குறள், பத்துப்பாட்டு. சிலப் பதிகாரம், மணிமேகலை, எட்டுத் தொகையிற் பெரும்பாலன |
| கி. பி. 125 (கி.பி. 50 வரையில் எனக் கொள்வாரு முளர்) | ..உக்கிரப்பெருவழுதி |
| கி. பி. 150 | ...நெடுஞ்சேழியன் |
| கி. பி. 175 | ...வெற்றிவேல் இளஞ்சேழியன் |
| கி. பி. 3-ம் நூற்றாண்டு | ...மாணிக்கவாசகர் (இவர் சுந்தர ருக்குப் பின் 9-ம் நூற்றாண்டில் அல்லது 10-ம் நூற்றாண்டில் விளங்கியவ ரெனக் கூறுவாரு முளர். தேவாரம் பாடியவர் கள் சிற்சில விடங்களில் மாணிக்க வாசகர் பொருட்டு இறைவன் நிகழ்த்திய திரு விளையாடலைக் குறிப்பிடுகின்ற மையின் அவர் தேவாரம் பாடி யவர்களுக்குப் பிந்தியவ ரல்லர். இதுவே ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவ லரவர்கள் கருத்துமாகும்.) |

| | |
|---|---|
| கி. பி 250 | ..சேரன் செங்குட்டுவன் |
| கி. பி. 250—500 | ...பழந்தமிழ்ப் பாக்கள் தொகுத்து முடிந்தது |
| கி. பி. 470 | ...வச்சிரநந்தி |
| கி. பி. 7-ம் நூற்றாண்டு | ..அதிவீரராம பாண்டியன் |
| கி. பி. 7-ம் ” | ...புறப்பொருள் வெண்பாமாலை |
| கி. பி. 735 | ...அரிகேசரி பாராங்குசன் |
| கி. பி. 7-ம் நூற்றாண்டு | ...சம்பந்தர் |
| கி. பி. 7-ம் ” | ...திருநாவுக்கரசர் |
| கி. பி. 750 | ...நாலடியார் |
| கி. பி. 8—9-ம் நூற்றாண்டு | ...ஆழ்வார் |
| கி. பி. 906 | ...பராந்தகசோழன் |
| கி. பி. 9-ம் நூற்றாண்டு | ...திருத்தக்கத்தேவர் |
| கி. பி. 9-ம் ” | ...சுந்தரர் |
| கி. பி. 9-ம் ” | ...பாரத வெண்பா |
| கி. பி. 10-ம் ” | ...பட்டினத்தடிகள் |
| கி. பி. 1110—1118 | ...கலிங்கத்துப்பரணி |
| கி. பி 1118—1143 | ...ஒட்டக்கூத்தர் |
| கி. பி. 1145—1205 | ...கம்பன் |
| கி. பி. 12-ம் நூற்றாண்டு | ...பொய்யாமொழிப்புலவர் (தஞ்சைவாணன் கோவை) |
| கி. பி. 12-ம் ” | ...ஔவையார் |
| கி. பி. 12-ம் ” | ...மெய்கண்டார் |
| கி. பி. 12-ம் ” | ...சத்திமுற்றப்புலவர் |
| கி. பி. 1134 | ...இராமானுசாரியர் |
| கி. பி. 1135 | ...சேக்கிழார் |
| கி. பி. 1025 | ...நம்பியாண்டார் நம்பி |
| கி. பி. 1075 | ...வீரசோழியம் |
| கி. பி. 11-ம் நூற்றாண்டு | ...கந்தபுராணம் |
| கி. பி 12-ம் ” | ...இளம்பூரணவடிகள் |
| கி. பி. 13-ம் ” | ...பவணந்தி |
| கி. பி. 12-ம் ” | ...நாற்கவிராச நம்பி |

| | |
|---|---|
| கி. பி. 12—1500 | ...உரையாசிரியர்கள், சித்தாந்த சாத்திரங்கள் |
| கி. பி. 14-ம் நூற்றூண்டு | ...தமிழெழுத்து மாறியது |
| கி. பி. 1453 | ...காளமேகப்புலவ |
| கி. பி. 13-ம் நூற்றூண்டு | ...புகழேந்தி |
| கி. பி. 15-ம் ,, | ...அருணகிரிநாதர் |
| கி. பி. 15-ம் ,, | ...வில்லிபுத்தூரர் |
| கி. பி. 16-ம் ,, | ...சூடாமணிநிகண்டு |
| கி. பி. 16-ம் ,, | ...பரஞ்சோதி திருவிளையாடல் |
| கி. பி. 17-ம் ,, | ...குமரகுருபரர் |
| கி. பி. 1680—1746 | ...வீரமாமுனிவர் |
| கி. பி. 1608—1644 | ...தாயுமானசுவாமிகள் |
| கி. பி. 1785 (தெய்வீகம்) | ...சிவஞானமுனிவர் |
| கி. பி. 1836—1884 | ...மாம்பழக் கவிசிங்கநாவலர் |

## ஒழிபியல்

### நால்வகை எழுத்து

“ சீன பாஷையில் ஒவ்வோர் எழுத்தும் ஒவ்வோர் கருத்தைக் குறிப்பதாய் இன்றளவும் பல்லாயிரம் எழுத்துகளை உடைய பாஷையாயிருக்கிறது. தமிழ்மொழி எழுத்துக்களின் ஆதி சரிதமும் அவ்வாறே. அவ்வாறெனச் காட்டுமுறைகள் பல தமிழ்ப்பூர்வ இலக்கணங்களுட் காணலாம். யாப்பருங்கல விருத்தியில் ‘தேர்பத முதலிய நால் வகையெழுத்து ’ உக்கிரவெழுத்து, முத்திறவெழுத்து கதியெழுத்து, யோனியெழுத்து சங்கேத வெழுத்து, முதலியன வாய பலவித எழுத்துக்களின் பெயர்கள் கூறப் பட்டுள்ளன.

திவாகரம் பிங்கலந்தை முதலிய நூல்களில் :—
'பெயரெழுத்து முடிவெழுத்து வடிவெழுத்துத் தன்மை
எழுத்தென வெழுத்தின் பெயரியம் பினரே (திவாகரம்).

'வடிவு பெயர் தன்மையுண் முடிவு நான்கா
நடைபெறு நாவலர் நாடிய வெழுத்தே'
(இலக். கொத்).

'உருவே யுணர்வே யொலியே தன்மை
எனவீரெழுத்து மீரிருபகுதிய...........'
(இலக். கொத்).

இவற்றுள் 'வடிவெழுத்தென்றது சித்திரக்குறிகளேயாம். மனிதனை மனிதனின் உருவத்தையேனும் அவனின் பாக மாகிய தலையையேனும் சித்திரித்துக் காட்டல் பெய ரெழுத்தென்றது சங்கேதக்குறி. போரைக் குறிக்க மனித னின் புயங்களைக் காட்டுவது. தன்மை யெழுத்தென்றது குணம், சக்தி முதலியவற்றைக்காட்ட வரையும் அடையா ளங்கள். விவேகத்துக்குக் கண், வெற்றிக்குக் கருடன் முதலியனவரைதல். முடிவெழுத்தென்றது வினை நிகழ்ச் சியை உணர்த்தும் வாக்கியங்களைக் குறிக்க வழங்கிய வாக்கியங்கள்' என்றார் செந்தமிழ்ப் பத்திராசிரியராகிய ஸ்ரீ மு. இராகவ ஐயங்காரவர்கள். தமிழில் ஆராய்ச்சி மிக்குடையராய்த் 'திராவிட விவகாரத்தில் தெளிந்த சில விஷயங்கள்' என்னும் வியாசமெழுதிய எப். ஜெ. ரிச்சர்ட்ஸ் பண்டிதர், 'ஆதித்தமிழ் எழுத்து சித்திரவுருவமாகவே உண்டாயிருக்கவேண்டும்' எனக் கூறி அதற்குச் சார்பாய்ப் பல்லாரியில் மயில் மலையில் பொறித்திருக்கும் சில சித்திரங் களையும் படம் பிடித்து அச்சேற்றி வெளியிட்டனர்"
(தமிழ் இலக்கியம் ப. 18-19).

## மடலேறல்

"மடலேறலாவது, ஒருவன் ஒவ்வாக் காமத்தால் பனங் கருக்காற் குதிரையும், பனந்தருவி னுள்ளனவற்றால் வண்டில் முதலானவுஞ் செய்து அக்குதிரையின்மேலேறுவது. மடலேறுவான் திகம்பரனாய் உடலெங்கும் நீறுபூசிக் கிழி ஓவியர் கைப்படாது தானே தீட்டிக்கிழியின் தலைப்புறத்தில் அவன் பெயரை வரைந்து கைப்பிடித்து, ஊர் நடுவே நாற்சந்தியில் ஆகார நித்திரையின்றி, அக்கிழிமேற் பார்வையுஞ் சிந்தையுமிருத்தி, வேட்கை வயத்தனாய் வேறுணர்வின்றி, ஆவூரினும், அழல் மேற்படினும் அறிதலின்றி, மழை வெயில் காற்றான் மயங்காதிருப்புழி, அவ்வூரிலுள்ளார் பலருங்கூடி வந்து நீ மடலேறுதியோ? அலேலைத் தருதும், சோதனை தருதியோ? என்றவழி இயைந்தானாயின், அரசனுக் கறிவித்து, அவனேவலால் அவன் இளைந்துநையத்தந்து மடலேறென்றவழி, ஏறுமுறைமை—பூளையெலும்பு, எருக்கு இவைகளாற் கட்டிய மாலையணிந்து கொண்டு அம்மாவிலேற, அவ்வடத்தை வீதியி லீர்த்தலும், அவ்வுருளை யுருண்டோடும் பொழுது, பனங்கருக்கு அறுத்த விடமெல்லாம் இரத்தந் தோன்றாது வீரியந் தோன்றின் அப்போது அவனை அலங்கரித்துக் கொடுப்பது. இரத்தங் கண்டுழி அவனைக் கொலை செய்துவிடுவது. இவை புலவரால் நாட்டிய வழக்கென் றுணர்க."

(தஞ். கோவை—உரை)

"மாவென மடலு மூர்ப பூவெனக்
குவிமுகி ழெருக்கங் கண்ணியுஞ் சூடுப
மறுகி னார்க்கவும் படுப
பிறிது மாகுப காமங் காழ்க்கொளினே.

(குறுந்—17)

"விழுத்தலைப் பெண்ணை விளையன் மாமடன்
மணியணி பெருந்தார் மார்பிற் பூட்டி
வெள்ளென பணிந்துபிற ரெள்ளத் தோன்றி
யொருநாண் மருங்கிற் பெருநா ணீக்கித்
தெருவி னியலவுந் தருவது கொல்லோ
கலிங்கவி ரசைநடைப் பேதை
மெலிந்தில ளும்விடற் கமைந்த தூதே."
(ஷை—182.)

"சிறுமணி தொடர்ந்து பெருங்கச்ச நிறீஇக்
குறுமுகி ழெருக்கங் கண்ணி சூடி
யுண்ணு நன்மாப் பண்ணி யெம்முடன்
மறுகுடன் திரிதருஞ் சிறுகுறு மாக்கள்"
(நற்றிணை—220)

## கிராம பரிபாலனம்

"செங்கற்பட்டு ஜில்லாவில், உத்தரமல்லூரில், வைகுண்ட பெருமாள் ஆலயத்தில் கி. பி பத்தாவது நூற்றாண்டின் தொடக்கத்தில், பரகேசரிவர்மன் என்ற சோழன் ஏற்படுத்திய ஒரு சிலாசாஸனத்தில், உத்தரமல்லூரைச் சேர்ந்த கிராமபரிபாலன விதிகளைச் சீர்திருத்திய விபரம் கண்டிருக்கிறது. அதில் சபையாரை நியமித்தலான ஒழுங்கு விளக்கியிருக்கிறது. பெரியரும் சிறியருமான கிராமவாசிகள் ஓரிடத்தில் கூட்டங் கூடவேண்டும். ஆலயங்களின் அர்ச்சகர்கள் யாவரும் கூட்டத்தில் வந்திருக்க வேண்டும். சபையாக நியமிக்கத்தக்கவர்கள் பெயர்களை ஒவ்வொரு ஓலைநறுக்கில் எழுதி அந்தந்த நத்தம் வாரியாத் தனித்தனி கட்டுகளாகக் கட்டிவைக்கவேண்

டும். அர்ச்சகர்களில் வயது முதிர்ந்தவர் வெறுங்குட மொன்றைக் கையிலெடுத்துக்கொண்டு கூட்டத்தின் மத்தியில் நிற்கவேண்டும். ஓலைக்கட்டுகளை ஒவ்வொன்றாகக் குடத்தைக் குலுக்கி ஒன்றுமறியாத ஓர் சிறுவனை அழைத்துக் குடத்தில் கையிட்டு ஓர் நறுக்கை எடுக்கச் செய்து அதை மத்தியஸ்தர் கையிற் கொடுக்கவேண்டும். அந்த நறுக்கிலுள்ள பெயரை மத்தியஸ்தன் வாசித்தபிறகு மற்ற அர்ச்சகர்கள் ஒவ்வொருவரும் வாசித்துக் காட்டவேண்டும். அதன்மேல் அந்தந்த பெயர் எல்லாருக்கும் அங்கீகாரமாகும். இங்ஙனம் நத்தத்துக் கொவ்வொருவராகக் கிராம பரிபாலன மகாசபை ஏற்படுத்துவதென்று மேற்படி சாஸனத்தில் கண்டிருக்கிறது."

(செல்வக்கேசவராய முதலியார்.)

Pon, a gold coin valued at Rs 2-8-0 each (Tamil Studies P. 260).

## சங்க நூல்கள்

பத்துப்பாட்டு எட்டுத் தொகை பதினெண்கீழ்க் கணக்கு முதலியன சங்கநூல்களென வழங்கப்படுகின்றன. பதினெண்கீழ்க் கணக்கிலுள்ள நூல்களுட் பெரும் பாலனசங்ககாலத்துக்குப் பிறபட்டன.

பத்துப்பாட்டிலுள்ள நூல்கள் :—

"முருகு பொரு நராறு பாணிரண்டு முல்லை
பெருகு வளமதுரைக் காஞ்சி—மருவினிய
கோலநெடு நல்வாடை கோல் குறிஞ்சி பட்டினப்
பாலை கடாத்தொடும் பத்து"

திருமுருகாற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும் பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக் காஞ்சி, நெடு நல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலை படு கடாம் எனபன பத்துப்பாட்டில் அடங்கிய நூல்களாம். எட்டுத் தொகையில் அடங்கிய நூல்கள் :—

"நற்றிணை நல்ல குறுந்தொகை யைங்குறு நூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தார் சொல்லுங் கலியோ டகம்புறமென்
றித்திறத்த வெட்டுத் தொகை."

புறநானூறு, பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு, கலித் தொகை, பரிபாடல், அகநானூறு, புறநானூறு குறுந் தொகை என்பனவாம்.

## பதினேண்கீழ்க் கணக்கு நூல்கள்

"நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுங் கோவை பழமொழி—மாமூல
மெய்ந்நிலைய காஞ்சியோ டேலாதி யென்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு."

நாலடியார், நான்மணிக்கடிகை, இனியவைநாற்பது, இன்னா நாற்பது, கார்நாற்பது, களவழி நாற்பது, திரி கடுகம், ஆசாரக்கோவை, பழமொழி, சிறு பஞ்சமூலம், முதுமொழிக்காஞ்சி, ஏலாதி, ஐந்திணை ஐம்பது, திணை மொழி ஐம்பது, ஐந்திணை எழுபது, திணை மாலை, திருக் குறள் என்பனவாம்.

கடைசியிற் கூறப்பட்ட ஆறு நூல்களைப் பற்றிப் பல் வேறு அபிப்பிராயங்கள் உள்ளன.

"கடைச்சங்க நூல்களில் பெயர் வழங்கும் புலவர் கிட்டத்தட்ட ஐந்நூற்றுவர் எனக்கூறப்பட்டது. இவருள் பெரும்பாலார் இன்னாரென அறிதற்கிடமில்லை. ஒருவாறு இன்னாரென அறியக்கிடந்தவர் இருநூறு புலவரே. இவருள் வேளாளர் ஐம்பத்தொருவர் பெண்பாலார் முப்பத்தறுவர், அந்தணர் இருபத்தொன்பதின்மர், நாகர் பதினெழுவர், எயினர் பதின்மூவர், கம்மாளர் எழுவர், வணிகர் எழுவர், மள்ளர் ஐவர், ஆயர் மூவர், குயவர் ஒருவர், பரதவர் ஒருவர் வள்ளுவர் ஒருவர். பாண்டிய மன்னர் பதின்மூவர், சேர மன்னர் எழுவர், சோழமன்னர் ஒருவர், தொண்டைமான் ஒருவர்"

(தமிழ் இலக். ப. 66).

## ஐம்பெருங் காப்பியங்கள்

சிலப்பதிகாரம், சிந்தாமணி, மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி.

## ஐஞ்சிறு காப்பியங்கள்

சூளாமணி, உதயணன்கதை, நீலகேசி, யசோதர காவியம், நாககுமார காவியம்.

## திருக்குறள்

திருக்குறள் உக்கிரப்பெருவழுதிகாலத்தில் தமிழ்ச் சங்கத்தில் அரங்கேற்றப்பட்டதென்பது கன்ன பரம்பரை. இலங்கையை யாண்ட ஏளாறன் (ஏலேல சிங்கன்) காலத்தவர் இவர் எனச் சிலர் கூறுவர். அப்படியாயின் அவர் காலம் கி. மு. 204 ஆகும். திருவள்ளுவர் செய்துள்ள நூல் எல்லாச் சமயத்தாராலும் எச் சாதியாராலும் கொண்

டாடப்பட்டு வருகின்றது. திருவள்ளுவர் தமது நூலிற் கூறியுள்ள சமயமே தமிழர்கள் சமயம் என்று பலர் அபிப்பிராயப்படுகின்றனர். திருவள்ளுவர், மனுநூலிலோ சாணக்கியர் செய்த அர்த்தசாத்திரத்திலோ விருந்து தமது நூலுக்கு வேண்டிய ஆதாரங்களைப் பெற்றார் என்று ஒரு சிலரும், அற்றன்று, ஃஃ நூல்களிலுள்ள பலவற்றையே மொழிபெயர்த்துள்ளாரென்று வேறு சிலருங் கூறுவர். சந்திரகுப்தனுக்கு மந்திரியாயிருந்த சாணக்கியர் (கௌடலியர்) அர்த்த சாஸ்திரம், காமசாஸ்திரம், தர்ம சாஸ்திரம், மோட்ச சாஸ்திரம் முதலிய பல நூல்களை வடமொழியில் செய்துள்ளார் என்றும் அவர் தமிழ் நாட்டினா என்றும் அறிகின்றோம். சாணக்கியர் தமிழ் நாட்டில் அறியப்பட்டதும் வடநாட்டில் அறியப்படாததுமாகிய பொருள்களைப்பற்றிய நூல்களை இயற்றினமையால் அந்நூல்கள் வடநாட்டில் மிகவும் புகழ்பெற்று விளங்க ஏதுவாயின. சாணக்கியர் செய்துள்ள நூல்களுக்கு ஆதாரம் தமிழிலேயே இருந்திருத்தல்வேண்டுமென்பது வெளிப்படை. தமிழகத்தில் நூல் வழக்கிலோ செவி வழக்கிலோ உள்ள பொருள்களை ஆதாரமாகக் கொண்டு நூல் இயற்றிய சாணக்கியர் திருவள்ளுவர் என்னும் இருவர் நூல்களிலும் ஒரோ ரிடங்களில் ஒருமைப்பாடு காணப்படுதல் சகசமே. ஆகவே வள்ளுவர் சாணக்கியர் நூலிலிருந்து சிலவற்றை எடுத்து மொழி பெயர்த்துக் கொண்டார் எனக் கூறுதல் இயைபுடையதாகாது. மனு நூலுக்கும் திருக்குறளுக்கும் உள்ள வித்தியாசம் அணுவுக்கும் மாமேருவுக்கும் உள்ளதாகும். இதன் வேற்றுமையை ஆசிரியர் சுந்தரம் பிள்ளையவர்கள் "வள்ளுவர் செய்திருக்குறளை வழுவற நன்குணர்ந்தோர்—உள்ளுவரோ

மனுவாதி ஒரு குலத்துக்கொரு நீதி" என்று நனிவிளக்கி யுள்ளார். விளையாட்டுச் சிறுரால் மணலிற் கீறப்பட்ட கோடுகளிலும், நத்தை ஊட்டிலுள்ள கீறுகளிலும் ஓரோ விடத்து அக்கர வடிவம காணப்படுவதுபோல மனுநூலி லுள்ள ஏதோ ஒரு வாக்கியம் திருக்குறளிலுள்ள யாதானு மொரு பொருளோடு ஒற்றுமைப்படுமாயின் முன்னதின் மொழி பெயர்ப்பே பின்னது என்று வாதாடுதல் அபிமா னப் பற்றியதாகும்.

## திருவள்ளுவமாலை

திருவள்ளுவரையும் அவர் நூலையுஞ் சிறப்பித்துப் பாடப்பட்ட வெண்பாக்கள் திருவள்ளுவமாலை என வழங் கும். இப்பாடல்கள் கி. பி. எட்டாம் நூற்றாண்டுவரையில் யாரோ ஒரு புலவரால் பாடப்பட்டதெனச் சில அறிஞர் அபிப்பிராயப் படுகின்றனர்.

" திருவள்ளுவமாலை செய்தது குறள் அரங்கேற்றிய காலத்தென்றுவது, அதில் நாமகள் இறையனர் முதலிய வர்கள் பாடியனவாகக் காணப்படும் செய்யுள்கள், மெய்மை யாக அவர்களாற் பாடப்பட்டன வென்றுவது கொள்ளற் கிடமின்மையால், மேற்கூறிய மாமூலனர் பாட்டென்பது வள்ளுவரை இழிகுலத்தானென்பதற்குத் தக்க ஆதார மாகாது. திருவள்ளுவமாலை செய்தது குறள் அரங்கேற்றிய காலத்தன் றென்பதற்குக் காரணம் என்னை என்பீராயின், அசரீரியும், நாமகளும் பாட்டுப் பாடுவது அனுபவ விரோத மும் அசம்பாவித மாதலுமேயாம். மற்றையோர்களாற் பாடப்பட்டனவாகக் காணப்படும் பாட்டுகளுட் பெரும் பாலன மெய்யாக அவர்களாற் பாடப்பட்டனவல்ல. எங்ஙன மெனின், ஒரு நூலுக்குப் பாயிரஞ் சொல்லவோ, அன்றி அதனை எடுத்துப் புகழவோ புக்கார் அந்நூன் முழுவதையும்

பற்றிப் பேசுவரேயன்றி அதன் ஒருபாகத்தை மாத்திரம் பற்றிப் பேசார். திருவள்ளுவமாலையிலோ அறத்துப்பாலைப் பற்றி

"பாயிர நான்கில்லற மிருபான் பன்மூன்றே
தூய துறவறமொன் றூழாக—ஆய
அறத்துப்பால் நால்வகை யாராய்ந் துரைத்தார் நூலின்
திறத்துப்பால் வள்ளுவனார் தேர்ந்து"

என்று எறிச்சலூர் மலாடனாரும், பொருட்பாலைப் பற்றி

"அரசிய லையைந் தமைச்சிய லீரைந்
தரு வல்லரணிரண்டொன்றொண் கூழ்—இருவியல்
திண்படை நட்புப்பதினேழ் குடி பதின்மூன்
றெண்பொரு ளேழா மிவை"

என்று போக்கியாரும், காமத்துப் பாலைப்பற்றி

"ஆண்பாலேழா றிரண்டு பெண்பாலடுத்தன்பு
பூண்பாலிருபா லோராறாக—மாண்பாய
காமத்தின் பக்கமொரு மூன்றாகக் கட்டுரைத்தார்
நாமத்தின் வள்ளுவனார் நன்கு"

என்று மோசிகீரனாரும் கூறினதாக வருகின்றது. இம் மூன்று பாடலும் குறளிலுள்ள ஒவ்வோரியலின் தொகையையும் அதிகாரத்தின் தொகையையும் கூறுகின்றன வன்றிக் குறளின் சிறப்பை அல்லது அதன் அருமை பெருமைகளை எடுத்துரைக்கவில்லை; அன்றிச் செய்யுளழகு வாய்ந்தனவாயுமில்லை. இவைகளை இயற்றுவதற்கு மூன்று சங்கப் புலவர்கள் வேண்டியதில்லை; காரிகைகற்றுக் கவிபாடும் ஒருவர் போதும். இங்ஙனமே இவை மூன்றும் குறளின் இயலும் அதிகாரமும் இத்தனையென்று கணக்கிட விரும்பிய ஒருவராலேயே இயற்றப்பட்டனவாதல் வேண்டும்.

திருவள்ளுவமாலை குறள் அரங்கேற்றப்பட்ட காலத்துச் செய்யப் படவில்லை என்பதற்கு மற்றொரு நியாயமுங் கூறுதும். அம்மாலையில் உக்கிரப் பெருவழுதியார் பாடினதாக வரும் செய்யுளில் 'நான் மறையின் மெய்ப் பொருளை முப் பொருளா நான்முகத்தோன் தான் மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த நூல்' என்றும், காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனார் பெயர் கொண்ட செய்யுளில் 'ஐயாறு நூறு மதிகார மூன்றுமா, மெய்யாய வேதப்பொருள் விளங்கப்—பொய்யாது, தந்தானுலகுக்குத்தான் வள்ளுவனாகி, அந்தா மரை,மே லயன்' என்றும் வள்ளுவரைப் பிரமதேவனின் அவதாரமாகக் கூறப்பட்டுள்ளது. இவ்வாறு வள்ளுவரைப் பிரமதேவனின் அவதாரமாகக் கூறவந்தது அவர் உயிரோடிருந்த போதன்று. உயிரோடிருக்கும்போதே ஒருவரைக் கடவுளின் அவதாரமாகக் கொண்டாடுவது எங்குமில்லை. ஒருவர் இறந்தபின் பல வருடங்கள் சென்று காலம் நீடிக்க நீடிக்கத்தான் அவருடைய பெருமை வளர்ச்சியுற்றுத் தெய்வத்தன்மையடையும். அப்போதுதான் அவர் கடவுளின் அவதாரமாகக் கருதப்படுவார். அங்ஙனமே வள்ளுவரின் அறிவின் பெருமையைக் கண்டு அவரை ஒரு கடவுளின் அவதாரமாகக் கொண்டாட வந்தது அவர் குறளியற்றிப் பலவருடங்கள் சென்றபின்பேயாம். அப்படிச் சிறிது காலஞ்சென்று வள்ளுவர் பிரமதேவனுடைய அவதாரமென்ற கொள்கை வேரூன்றியதன் பின்னரே இந்தப்பாட்டுக்கள் பாடப்பட்டிருத்தல் வேண்டும். இங்ஙனம் இப்பாடல்கள் பாடப்பட்டது குறள் இயற்றி வெகு காலத்துக்குப்பின்பானால், அவற்றை அடக்கியுள்ள திருவள்ளுவமாலை குறளரங்கேற்றப் பட்டகாலத்து இயற்றப்பட்டதாகாது.

இனி இறையனார்களவியலுரையில் கடைச் சங்கப் புலவர் எண்மர் பெயர் கூறப்பட்டிருக்கின்றன. இவ்வெண் மருள் திருவள்ளுவமாலையில் மூவர் பெயர் மாத்திரம் காணப்படுகின்றன; ஐவர் பெயரில்லை. அன்றியும் சிலப் பதிகாரத்தில் மகா மகோபாத்தியாயர் சாமிநாத ஐயரவர் களால் எடுத்துக் காட்டப்பட்ட பழைய அகவலொன்று கடைச்சங்கப்புலவரில்இருபத்தெழுவர்பெயர் கூறுகின்றது. அவற்றில் பதினேழு பெயர் திருவள்ளுவ மாலையில் இல்லை. இதனால் திருவள்ளுவமாலை பாடினவர் கடைச்சங்கப் புலவர் கள என்று சொல்வதற்கிடமின்றாகின்றது.

மேற்கூறியவற்றால் திருவள்ளுவமாலை கடைச்சங்க காலத்து நூலன்றென்பதும் அதிலுள்ள பாட்டொன் றேனும் அங்கே கூறப்பட்ட புலவராலேயே இயற்றப்பட்ட தென்பதற்குத் தக்க ஆதாரம் இல்லை என்பதும் நன்கு போத ரும். ஆயின் திருவள்ளுவமாலை எக்காலத்து யாரால் இயற்றப்பட்டதெனின், காலந்தோறும் திருக்குறளைப் பற்றிப் பல பாட்டுக்கள் பல புலவராலியற்றப்பட்டனவாக, பிற்காலத்து வந்த புலவரொருவர் அவற்றை யெல்லாம் அன்றேல், அவற்றுட் சிறந்தவற்றை மாத்திரம் ஒருங்கு சேர்த்து ஒழுங்குபடுத்தி ஒருநூலாக்கி யிருத்தல்வேண்டும். அவர் தாமும் சிலபாட்டுக்கள் பாடிச் சேர்த்திருக்கலாம். அல்லது நூன்முற்றையும் ஒரு புலவரே செய்து மிருக்கலாம். வள்ளுவமாலையில் வரும் பாட்டுக்கள் ஏறக்குறைய ஓரேவித மான நேரிசை வெண்பாவாக விருத்தலும், அசரீரி சொன்னதாக வரும் பாட்டு அசரீரியே நேரே சொன்னதா யில்லாமல்

"'திருத்தகு தெய்வத் திருவள்ளுவரோ
டுருத்தகு நற்பலகை யொக்க—இருக்க

உருத்திர சன்ம ரெனவுரைத்து வானில்
ஒருக்கவோ வென்றதோர் சொல்'

என அசரீரி சொன்னதாக மற்றொருவரால் பாடப்பட்டிருத்தலும் இந்தக் கொள்கைக்குத் தகுந்த துணையாகும்.

இன்னும் இந்தப் பாட்டு மதுரையில் தெய்வத்தன்மை பொருந்திய சங்கப்பலகை ஒன்றிருந்ததென்பதைக் குறித்தலினாலும், அந்தப் பலகையில் திருவள்ளுவரோடொக்க விருத்தற்கு உருத்திரசன்மரே ஏற்றவரென்பதனால் குறளரங்கேற்றிய காலத்தில் சங்கப் புலவர் நாற்பத்தெண்மரும் திருவள்ளுவரோடொக்க விருக்கத் தகுதியற்றவராய்ப் பொற்றாமரை வாவியுள் வீழ்ந்து முழுகினரென்னுங் கதைக்குத் தோற்றுமிடமா யிருத்தலினாலும் இது குறள் தோன்றி வெகுகாலத்துக்குப்பின் இயற்றப்பட்டிருக்க வேண்டுமென்பது தேற்றம். சங்கப் பலகையிலேற்றிய இந்தக் கதை கட்டுக் கதை. இதுபோன்றதொரு கதை சடகோபரியற்றிய திருவாய் மொழியைப்பற்றியும் வழங்குகின்றது.''

(திருக்கோணமலை வித்துவசிரோமணி,
த. கனகசுந்தரம் பிள்ளை, B. A.)

"Thiruvalluvamalai or the garland of Thiruvalluvar like every other account relating to this famous moralist is a strange mixture of doubtful traditions and absurd fictions written by some later Dravidian author of the 9th century to popularize the celebrated work of Thiruvalluvar."

(Tamil Studies, p. 247).

## மகளிரைச் சிறை பிடித்தல்

முன்னாளில் ஓர் அரசன் பிறனோர் அரசனோடு பொருதுவென்றால் அவன் நாட்டிலுள்ள மகளிரை சிறை பிடித்து வந்து அவரைக் கற்பழித்தும் மான பங்கஞ் செய்தும் வருத்தாமல் பாதுகாத்துக் கோயில்களில் கடவுளைத் தொழுதுகொண்டு அங்கு கடவுட்டிருப்பணி செய்யும்படி இருத்துவான்.

## கடற்போர்

சேரலாதன் கடலிடத்தே தீவொன்றில் வசித்த தன் பகைவர்மேற் கப்பற்படையுடன் சென்று அவரது காவன் மரமான கடம்பை வெட்டி யெறிந்து அவனைப் போர் தொலைத்தான். இவ்வரலாறு பதிற்றுப்பத்தில் கூறப்படுகின்றது.

## தமிழரசர் மாலைகள்

பாண்டியன் — வேம்பு, சேரன் — பனை, சோழன் — ஆத்தி. "போந்தை வேம்பே ஆரெனவரூஉம் மாபெருந் தானையர்" (தொல்.)

## படைகளின் அணி வகுப்பு முதலியன

அணி, உண்டை, ஒட்டு, ஆக்கம், கொடிப்படை, தார், தூசி, நிறை, கூழை.

## அகழிகள்

சில அகழிகள் 40 அடித்தாழ்வு இருந்தன. கி. பி. 781-லும் 977-லும் எழுதப்பட்ட சில சிலாசனங்கள் இதைக் குறிப்பிடுகின்றன.

(Studies in Tamil Literature and History, p. 23).

## போர் முரசு

செங்குட்டுவன் கனகவிசயருடன் யுத்தத்துக்குப் புறப்பட்டபோது கொடும்பறை, நெடுவயிர், முரசம், பாண்டில், மயிர்க்கண்முரசம் முதலியன ஒலிக்கப்பட்டன என்று சிலப்பதிகாரத்திற் கூறப்பட்டுள்ளது.

## இலவந்திகைப்பள்ளி

அரசன் அரண்மனையில் வாசஞ்செய்வது மாத்திரமல்லாமல் சோலைகளின் மத்தியில் அமைக்கப்பட்டுள்ள குளிர்ச்சி பொருந்திய மாளிகையிலும் கோடைகாலங்களில் வசித்தான். அம்மாளிகை இலவந்திகைப்பள்ளி என்று வழங்கப்பட்டது. அதன்கண் காற்று வசதியும் நீர் வசதியும் பொருந்த அமைக்கப்பட்டுள்ள மண்டபம் 'நிராழி மண்டபம்' எனப்பட்டது.

## அரசனைத் தெரிவு செய்யும் நூதனமுறை

ஓர் அரசனின் மரணத்துக்குப் பின் இராச்சியபாரம் ஏற்பவர் இல்லாத பொழுதும், இராச்சியத்தின் உரிமைக்குப் பலர் வாதாடும்பொழுதும் பட்டத்துயானை வாயிலாக அரசனைத் தெரிவு செய்தலும் முன்னாள் வழக்கு என்பது

" கழுமலத் தியாத்த களிறும் கருவூர்
விழுமியோன் மேற்சென் றதனால்—விழுமிய
வேண்டினும் வேண்டாவிடினும் உறற்பால
தீண்டாவிடுதல் அரிது " (பழமொழி 62)

என்னும் பழமொழி வெண்பாவால் அறியக் கிடக்கின்றது.

## அரச தண்டனைகள்

களவு, வியபிசாரம், இராச துரோகம் முதலியவற்றுக்குத் தகுந்த தண்டனை ஏற்படுத்தப்பட்டிருந்தது.

உறுப்புகளை வெட்டிதல், சிறையில் அடைத்தல், கொலை செய்தல் எனத் தண்டம் மூன்று வகைப்பட்டது. இராச துரோகத்துக்குக் கொலையும், வியபிசாரத்துக்கு கால் குறைத்தலும் முறையாக விருந்தன.

" காணிற் குடிப்பழியாங் கையுறிற்
கால் குறையும் (நாலடி 84)
" கொலையிற் கொடியாரை வேந் தொறுத்
தல்பைங்கூழ்—களை கட்டதனோடு நேர்
(குறள்—550)

## கிராமச் சங்கம்

கிராமகாரியங்களை வயதின் முதியவர்கள் ஊர் நடுவி லுள்ள மரங்களின் கீழ்கூடி முடிவுசெய்தார்கள். அங்ஙனம் கூடும் சங்கம் மன்றம் அல்லது பொதியில் என்று அறியப் பட்டது. இம்மன்றங்கள் பெரும்பாலும், ஆல், விளா, பலா, வேம்பு முதலிய மரங்களின்கீழ் கூடின. மரத்தைச் சூழ்ந்து நாற்புறமும் திண்ணை அமைக்கப்பட்டிருந்தது.

## துறவிகள் தோற்றம்

மரவுரியை உடையாகச் செய்த உடையினர். அழகா லும் வடிவாலும் நிறத்தாலும் வலம்புரிச்சங்கையொக்கும் நரைமுடியினர். எக்காலத்தும் நீராடுதலின் அழுக்கில்லாமல் விளங்கும் மேனியர். அடிக்கடி விரதமிருந்து பட்டினிகிடப் பதால் தசையில்லாத மார்பின் எலும்புகளின் கோவை வெளிப்படத்தோன்றி உலவும் உடம்பினையுடையவர். எப் பொருளுந் நுகர்வதற்கு நன்றாகிய பகற் பொழுதுகள் பல சேரக்கழிந்த வுணவினையுடையார். நெடுங்காலம் மனதில் தங்கக்கூடிய கோபத்தைப் போக்கிய மனத்தினர். பல வற்றையும் கற்ற பெரும் கல்விமான்களும் சிறிதும் அறிய

மாட்டாத இயல்பான அறிவுடையவர். பலவற்றையும் கற்றோர்க்குத், தாம் எல்லையாகிய தலைமையை யுடையவர். ஆசையோடே கடிய சினத்தையும் போக்கின அறிவினை யுடையவர். தவத்தால் உடலுக்கு வருத்தம் இருப்பது உண்மையெனினும் தங்கள் மனதினால் வருத்தம் சிறிதுமறியப்படாத இயல்பினையுடையவர்.

(திருமுருகாற்றுப்படை).

## மகளிர் அழகு

ஓர்பாடினியின் அழகின் விபரம்பொருநராற்றுப்படையில் கூறப்படுகின்றது. அது வருமாறு:—கூந்தல் வார்ந்த ஆற்றின் கருமணல் போன்றது, நெற்றி பிறைபோன்றது, புருவம் விற்போன்றது, குளிர்ச்சிபொருந்திய கண் அழகிய கடையையுடையது, வாய் இலவிதழ்போன்றது, பற்கள் வெள்ளிய முத்துக்கள்போன்றன, காதுகள் கத்திரிகை போன்றன, அவை மகரக்குழை அணியப்பெற்று அசையுந் தன்மையுடையன, தோள்கள் மூங்கில்போற் பெருமை யுடையன, முன்கைகள் ஐதாகிய மயிரினையுடையன, விரல்கள் காந்தள்மலர் போன்றன, நகங்கள் கிளியினது வாய் போன்றன, முலைகள் ஈர்க்கிடைபோகாது பணைத்தன, கொப்பூழ் நீர்ச்சுழி போன்றது, இடை சிறுமையை யுடையது, அல்குல் பல மணி கோத்த மேகலை அணியப் பட்டது, குறங்கு பிடியினது கைபோன்றது, அடிகள் ஓடி இளைத்த நாயினது நாக்குப் போன்றன, கொண்டை வாழைப்பூப்போன்றது.

## தமிழர் வியாபாரம்

"Ancient Tamil literature and the Greek and Roman authors prove that in the first two

centuries of the Christian era the ports of the Coromandel or Chola Coast enjoyed the benefits of active commerce with both the West and the East. The Chola fleets did not confine themselves to coasting voyages, but boldly crossed to Bay of Bengal to the mouths of the Ganges and Irrawaddy and the Indian ocean to the Islands of Malay Archipalago." (Vincent Smith.)

நகர் காவலர்

*இவர் புலிபோலுநர் துயில் கொள்ளாத கண்ணர். அஞ்சாநெஞ்சர். களவு தொழில் தந்திரங்களைக் கண்டறியும் நுண்ணிய அறிவினர். குறிதப்பா அம்பினர். தெருக்களில் மழை நீர் பெருக்கெடுத்தோடும் காரிருள் கவிந்த யாமங்களிலும் இவர் இளைப்பின்றி ஊர் சுற்றி வருவார்: கறுத்த உடலினராய்க் கருஞ்சேலை யுடுத்து வாள்கைக் கொண்டு மென்னூலேணி அரையிற் சுற்றி விழித்த கண் இமைக்கு முன் மறைந்தோடும் வலியுடைய கள்வரையும் கடிதிற் பிடித்துக்கொணரும் ஆற்றலுடையவர்.*

(மதுரைக்காஞ்சி.)

இன்ன புலவர் இன்ன பாவில் திறமையுடையாரென்பது

*"வெண்பாவிற் புகழேந்தி பரணிக் கோர்*
*சயங் கொண்டான் விருத்த மென்னு*
*மொண்பாவி லுயர்கம்பன் கோவையுலா*
*வந்தாதிக் கொட்டக் கூத்தன்*
*கண்பாய கலம்பகத்திற் கிரட்டையர்கள்*
*வசைபாடக் காளமேகம்*
*பண்பாய பகர் சந்தம் படிக்காச*
*லாதொருவர் பகரொணாதே."*

## தமிழ் ஆராய்ச்சி (Tamil studies) என்னும் நூலிற் காணப் படும் சில கவனிக்கத் தக்க குறிப்புகள்

The existence of pure Tamil words like எழுத்து, சுவடி etc., before they (Aryans) came to south disproves the theory Agastya brought the alphabet with him from Upper India. (P. 122).

"They had and still have their own terms pertaining to agriculture, anatomy, architecture, astronomy, commerce, domestic economy, family relations, fauna and flora, language and literature, medicine, minerals, politics, religion, war, weight and measures etc., all of course in their primitive stage. நாறு, செய், ஞாயிறு, திங்கள், கை, கால், மாறு, கொள், நெல், பால், முற்றம், [illegible]ச்சு, தாய், அப்பன், தெற்கு, தாழை, புலி, பூசை, எழுத்து, சொல், பா, திணை, நோ, வலி, வெள்ளி, பொன், இறை, ஊர், கடவுள், அம்பு, வில், மா, கழஞ்சு are all pure Tamil words."

" நாடு, கூற்றம், கோட்டம் as administrative division of a country நெல்லாயம், கார்த்திகைப் பச்சை, சின்மை, தறியிறை, செக்கிறை மகன்மை etc., as names of public taxes. அமாத்தியம், வாரியம், காவிதிமை, சம்பிரிதி etc., as official terms, குறுணி, பதக்கு, தூணி, முந்திரி, காணி, கழஞ்சு and other words of native weight and measures............ காசு, பணம், துட்டு, வராகன் and other denomination of old coinage."

## ஏறு தழுவுதல்

ஏறு தழுவுதல் ஆயருக்கே உரியதாயிருந்தது. பிறைபோன்ற கோட்டினையுடைய ஏற்றின் வலியை அடக்கிய சிறவருக்கு ஆயர் தம் மகளிரை வதுவை சூட்டினர். ஏறு தழுவுங்கால் அவ்வேறுகள் தங்கூர்ங்கோடுகளால் சிறுவர்களின் வயிற்றைப் பிளந்து அவரைக் கொல்வது முண்டு. இதன் விபரம் முல்லைக் கலியில் நன்கு கூறப்பட்டுள்ளது.

“அவ்விடத்து ஏறுகளைத் தழுவிப்போக்கும் படியை உட்கொண்டு வந்து வந்து திரண்டு மழைமுழக்கென்ன இடியென்ன நடுவானிலத்தின் முன்னே ஆரவாரமெழப் புகையோடு புகையெழ ஏறு தழுவினர்க்குக் கொடுத்தற்கு நல்ல மகளிர் திரண்டு நிற்ப நீர்த் துறையினும் ஆலமரத்தின் கீழும் வலியினையுடைய மராமரத்தின் கீழும் உறையுந் தெய்வங்கட்குச் செய்யும் முறைமைகளைப் பரவித் தொழுவிலே பாய்ந்தார்.

“எருதினது நோக்கை அஞ்சாளுய் அதின்மேல் பாய்ந்த இடையனைச் சாவக் குத்திக் கொம்பிடத்தே எடுத்துக்கொண்டு உடலைக் குலைக்கின்ற தோற்றரவைக்காணுய்; அழகிய தலைமயிரினையுடைய மனமசைந்த இயல்பினையுடையளாகிய துரோபதையது துய்யகூந்தலிலே கையை நீட்டிய துச்சாதனனுடைய நெஞ்சைப் பிளந்து போகட்டுப் பகைவர் நடுவே தான் சொன்ன வஞ்சினத்தை வாய்க்கச் செய்த வீமசேனனைப்போலும்.” (கலி. 101)

“ஏறுகிய எருமையை யேறுகின்ற கூற்றுவனுடைய நெஞ்சை வடிம்பாலே பிளந்து போகட்டுச் சினத்தோடே அரிய உயிரை வாங்கின அஞ்ஞான்றை யிறைவன் இத்தன்

மையை உடையவன் கொலென்று கூறும்படியாகக் காற்றின் விசைபோல ஓடிவந்து விரைந்து ஏறுகிய காரிய தனைப் பலரும் வந்து சேர்தலையுடைய களத்தேவலியடங் கத் தழுவி வருத்தி அதன்மேலே தோன்றி நின்ற பொது வனது அழகைப் பாராய்; அதனைக கண்டு என் நெஞ்சு உட்கிற்றுக் காணென்றாள்.'' (கலி . 103)

## பழைய மண முறை

சோறு நெய்யுடன் முதியோருக்கு அளிக்கப்பட்டது. பட்சிகள் நன்னிமித்தங் காட்டின. பெரிய வானம் களங்க மின்றி யிருந்தது. சந்திரன் குற்றமில்லாது ரோகிணியுடன் பொருந்தியிருந்தான். மணப்பந்தல் அலங்கரிக்கப்பட் டது. தெய்வத்தை வழிபட்டார்கள். பெரிய முழவு ஒலித்தது. நீராட்டி அலங்கரிக்கப்பட்ட மணப்பெண்ணை ஏனைய பெண்கள் இமைகொட்டாது நோக்கினார்கள். கழு வப்பட்ட பூவிதழ்களாற் செய்யப்பட்ட வணங்குதற்குரிய தெய்வ வடிவம் வாகைப்பூவின் மேலும் அறுகம்புல்லின் மேலும் வைக்கப்பட்டது. அது பூ மொட்டுகளாலும் வெண்ணூலாலும் அலங்கரிக்கப்பட்டு புனிதமாகிய உடை தரிக்கப்பட்டது. மழைத்துளிகள்போன்ற மணல் சிந்தப் பட்ட பந்தலின் கீழ் தலைவி வீற்றிருந்தாள். ஆபரணப் பொறையினால் சோர்வடைந்த மணப்பெண்ணின் வியர்வை காயும்படி சுற்றத்தார் விசிறியினால் வீசி அவளைத் தலை வனுக்கு அளித்தார்கள் (அகம்-136).

பலர் உண்டபின்னும் உழுந்துடன் சமைக்கப்பட்ட சோற்றுக்குவியல் இருந்தது. நிரைத்த கால்களின்மேற் கட்டப்பட்ட பந்தலின்கீழ் புதிய மணலைப் பரப்பினார்கள். வீட்டில் விளக்குகள் ஏற்றப்பட்டன. தலைவனும் தலைவி யும் பூமாலைகளால் அலங்கரிக்கப்பட்டார்கள். நட்சத்திரங்

கள் தீய பலனைக்கொடாத நல்ல வளர்பிறைப் பக்கத்தே விடியற்காலையில் சில பெண்கள் குடங்களைத் தாங்கவும், மற்றவர்கள் புதிய அகன்ற குடங்களை ஒவ்வொருவராக மாறவும், வயசின் முதிர்ந்த பெண்கள் பெரும் ஆரவாரஞ் செய்தார்கள். புதல்வரைப் பயந்த அழகிய ஆபரணங்களையணிந்த பெண்கள் பூவிதழும் நெல்லும் இடப்பட்ட நீரை மணப்பெண்ணின கரிய கூந்தல் பிரகாசிக்கும்படி பெய்து, 'கற்பு நெறியில் நின்று கணவனுக்குத் துணையாய் வாழ்வாயாக' என்று வாழ்த்தினர். மணச் சடங்கு நிறைவேறிய இராக்காலத்திலே அயலிலே உள்ள பெண்கள கூடி மணமகளை புதிய ஆடை முதலியவற்று லலங்கரித்துத் தலைவனிடத்துய்க்க அவள் நாணத்தொ லொடுங்கினள்

(அகம். 86).

## பேய் மகள்

காய்ந்த மயிரினையும், நிரை ஒவ்வாத பல்லினையும், பெரியவாயினையும், கோபத்தாற் சுழலுகின்றகண்ணினையும், கொடிய பார்வையினையும், பிதுங்கிய கண்ணையுமுடைய கூகையோடே கடிய பாம்பு தூங்குகையினாலே பெரிய முலையை வருத்துகின்ற காதினையும், குறைபாடுடைய உடலினையும், கண்டார் அஞ்சும் நடையினையுமுடைய வெருவருந் தோற்றத்தையுடைய பேய் மகள் உதிரத்தையளைந்த கூரிய உகிரினையுடைய கொடிய விரலாலே கண்களைத் தோண்டி உண்ணப்பட்ட மிக்க முடை நாற்றத்தையுடைய கரிய தலையை ஒளி பொருந்திய வளையலணிந்த கையிலே எடுத்து வெற்றிக் களத்தைப்பாடி தோளையசைத்து நிணத்தைத் தின்கின்ற வாயளாய் துணங்கைக் கூத்தாடுவாள்.

## சில நம்பிக்கைகள்

காகங்கரைவது விருந்தினர் வருவதற்கறிகுறியெனக் கருதப்பட்டது. புட்கரைதல் அல்லது அவை பறக்குந் திசைகள் தாம் உன்னிச் செல்லும் கருமங்களுக்கு அநுகூலம் அல்லது பிரதிகூலம் ஏற்படுவதை உணர்த்தும் என நம்பப்பட்டது. தக்க பரிசில் பெறுவிடத்துப் புலவர்கள் புள்ளையும் பொழுதையும் பழிப்பார்கள் (புறம்-204) பேய்கள் மரங்களிலும் இடுகாடு சுடுகாடுகளிலும் உறைவார்கள். பேய்மகளிர் போர்க்களங்களிற் சென்று இறந்தவர்களின் காயங்களில் விரல்களை அளைந்து அவற்றால் தங்கள் தலையினைக் கோதிச் செந்நிறமாய் விளங்கினார்கள். அவர்கள் பிணங்களைத் தழுவிப் புலாலினைப் புசித்தார்கள். பேய்களை ஓட்டுவதற்கு வெண்கடுகைப் புகைப்பித்தல் முன்னுள்ளோர் வழக்கு. பேய்மகளிர் மனித நிணத்திலும் இரத்தத்திலும் விருப்புள்ளோராவர். ஆகவே அவை புண்பட்ட போர் வீரரைச் சூழ்ந்து திரியும். அவை புண்ணைத் தீண்டினால் புண் ஆறாது புண்பட்டோன் இறந்துவிடுவான். தனது கணவனின் புண்ணைப் பேய் தீண்டாதபடி அவனது மனைவி வேப்பிலை இரவம் இலைகளை வீட்டின் இறப்பில் செருகி யாழ் முதலிய இசைக் கருவிகளை ஒலிப்பித்து வெண்கடுகு சிதறி காஞ்சிபாடி வாசனைப் பொருட்களைப் புகைப்பிப்பாள்.

"தீங்கனி யிரவமொடு வேம்புமனைச் செரீஇ
வாங்கு மருப்பியா ழொடு பல்லியங்கறங்கக்
கைபயப் பெயர்த்து மையிழுதிழுகி
யையவி சிதறி யாம்ப லூதி
யிசை மணி யெறிந்து காஞ்சிபாடி
நெடுநகர் வரைப்பிற் கடிநறை புகைஇ"

(புறம்—281)

## தலைக்கோல்

பொன் உறையிட்டு முத்துக்களும் நவமணிகளும் அழுத்தி அலங்கரிக்கப்பட்ட மூங்கிற்கோல் ஒன்று அரங்கின் மத்தியில் வைக்கப்பட்டிருந்தது. இம் மூங்கிற்கோல் பெரும்பாலும் பகை அரசனின் வெண்கொற்றக் குடையின் காம்பாக விருக்கும். அது அரண்மனையின் ஓர் அறையில் வணக்கத்துக் குரியதாக வைக்கப்படும். கூத்து நிகழும் நாளில் அது பொற் குடங்களில் நிறைக்கப்பட்ட நீரால் முழுக்காட்டிய பின் பூமாலையாலும் முத்துமாலைகளாலும் அலங்கரிக்கப்பட்டுப் பட்டத்து யானையில் ஏற்றி ஊர்வலஞ் செய்யப்பட்டு அரங்கின் மத்தியில் நாட்டப்படும். ஆட்டந் தொடங்குமுன் கூத்தியர் தலைக்கோலை வணங்குதல் மரபு. தலைக்கோல் கூத்தியர்க்கு அளிக்கப்படும் பட்டமுமாம்.

## பரத்தையர்

பட்டினங்களில் பரத்தையர் சேரிகள் இருந்தன. கலித்தொகையில் ஏறுதிப்பாடி என ஓரிடத்திற் கூறப்படுகின்றது. இது ஏறுதிப் பட்டம்பெற்ற ஒருவனால் ஏற்றப்பட்ட பரத்தையர் சேரியென அதனுரையால் விளங்குகின்றது. பரத்தையர் ஆடல்பாடல்களிற் சிறந்து கண்ணுக்கு மையெழுதிக் கண்டார் மயங்கும்படி தம்மை அலங்கரித்து விளங்குவார்கள். அவர்கள் ஆடவரைத் தம்முடன் ஏரிகளிலும் பொய்கைகளிலும் ஆடும்படி தூண்டுவார்கள். குறுந்தொகையில் ஓர் பரத்தையின் கூற்றாகக் கூறப்படுவது வருமாறு :—

நாங்கள் ஆம்பலின் தழையைச் சூடி நீராடச் செல்வோம். அவள் (மனைவி) எங்களிடத்தில் அச்சங்

கொள்வாளாயின் தானும் தனது சுற்றத்தாரும் எழினியின் படையைப்போல் அவனைக் காத்துக் கொள்ளட்டும். (குறுந்—80) விழாக்காலங்களில் அவர்கள் ஆடவரை மயக்குவதற்குக் கூடினார்கள். "ஆம்பல் இலையினால் அல் குலை அழகு பெற அலங்கரித்து விழாவுக்குச் செல்வேன். இந்தச் செழுமை மிக்க நாட்டின் தலைவன் காண்பானாயின் என்னை வரிக்காமல் விடுதல் அரிதாகும்." (நற்—390). மனைவியர் தங் கணவரைப் பரத்தையர் மயக்கிக்கொண்டு செல்லாதபடி காத்தார்கள்.

"மடக்கண் டகரக் கூந்தற் பணைத்தோள்
வார்ந்த வாலெயிற்றுச் சேர்ந்து செறி குறங்கிற்
பிணைய லந்தழைத் தைஇத் துணையிலள்
விழவுக் களம் பொலிய வந்து நின்றனளே
எழுமினோ வெழுமி னெங்கொழு நற்காக்கும்"
(நற்—170)

"அப்போதரவு பார்த்திருந்த பரத்தையர் குழலூதியா மொழீஇத் தண்ணுமை யியக்கி முழவியம்பித் தலை மகனை இங்குக் கூத்துண்டென்பது அறிவிப்ப; என்னை

'குழலெழீஇ யாழெழீஇத் தண்ணுமைப் பின்னர்
முழவியம் பலாமந்திரிகை'

என்று கூத்து நூலுடையாருஞ் சொன்னாரென்பது அவ்வகை அறிவிக்கப்பட்ட தலைமகன் நாம் இதனை ஒரு கால் நோக்கிப் போதுமென்று செல்லும். சென்றக்கால் அவர்கள் தங்கண் தாழ்விப்பரென்பது.

(இறை—அகப்பொருளுரை.)

பத்துப்பாட்டில் அறியப்படுவன :—

அறுகம்புல்லாற்றிரித்த பழுதையைத்தின்ற செம்மறிக்கிடாயினது இறைச்சி, இரும்புக் கம்பியில் கோத்துச் சுட்ட இறைச்சி, பகலுமிரவும் இறைச்சியைத் தின்று பற்கள் முனை மழுங்குதல், நாலு குதிரைபூட்டிய தேர், ஏழடி பின் செல்லல், தேனூறிய நெய்யோடே கிழங்கையும் விற்றவர்கள் மீனினது நெய்யோடே நறவையும் கொண்டு போதல், வாழைப்பூவெனப் பொலிந்தவோதி, உமணரோடு வந்த மந்தி சிறுபிள்ளைகளோடு கிலு கிலு விளையாடுதல், அமிழ்துவிளை தீங்கனி யௌவைக்கீந்த அதிகன், அரவு வெகுண்டன்ன நறவுல் நல்கல், ஆய் பாம்பு கொடுத்த நீலப் பட்டாடையை ஆலமர்செல்வர்க்குக் கொடுத்தது, கற்றோய்த் துடுத்தபடிவப்பார்ப்பான், பாவைவிளக்கு, பெரிய கொடிபாய் மரத்திலே யாடுகின்ற மரக்கலம். புலி கூட்டிலே அடைக்கப்பட்டிருத்தல், மாறுபாட்டையேற்றுக் கோறற்றொழிலையுடைய ஏற்றினது செவ்வித்தோலை மயிர் சீவாமற்போர்த்தமுரசம் ஒலித்தல், இலங்கு இழைமகளிர் பொலம் கலத்து ஏந்திய மணங்கமழ் தேறல் மடுப்ப மகிழ்ந்துண்டல், இரும்பு செய்விளக்கு, கஞ்சிதோய்த்த துகில், நடுநிசியில் வேப்பிலையைத் தலையிலே கட்டின வேலையுடைய வேந்தன் பாசறையிற் புண்பட்டோரைப் பரிகரித்தல், காரி உண்டி கடவுள்.

அகநானூறு லறியப்படுவன :—

நடுகல் வழிபாடு (51), புலி, தான் கொன்ற யானை இடப்பக்கம் வீழ்ந்ததால் மானத்தினால் அதனை உண்ணாமை (29), மகளிர் குறிஞ்சிப் பாட்டைக் கேட்டுத் தினை மேய வந்த யானை உறங்குவது (12), வேங்கைமலர் கொய்யும் மகளிர் புலி புலி என்ற ஒலியைக் கேட்டுப் புலியை ஓட்டு

வதற்கு ஆடவர் வில்லுங் கொம்பும் எடுத்துக் கொண்டு வந்து புலியைக் காணுமல் வெள்கிப் போதல் (92), தலைவன் பரத்தையோடு காவிரியில் நீர் விளையாடுதல் (166), கணவர் வரவைக் கருதிச் சுவரிற்கோடிட்டு நாள் எண்ணுதல் (51), பெண் ஆமையீன்ற முட்டையை ஆண் ஆமை பாது காத்தல்.

குறுந்தொகையில் அறியப்படுவன :—

ஆவின் கழுத்தில் மணி யணிதல், மகளிர் வண்டலயர் தல், குறச்சிறுர் குறிசொல்லுதல், சிறு பிள்ளைகள் சிறு தேருருட்டி விளையாடுதல், புலிப் பற்ருலிசிருர்க் கணிதல், பெண்கள் துணங்கைக் கூத்தாடுதல், வண்ணாத்தி கஞ்சிப் பசை போடுதல், விளையாட்டு மகளிர் மணல் வீடுகட்டுதல், நுளைச்சியர் நெல் பெற்று உப்புத்தருதல், பரதவர் கட்டு மரத்திலிருந்து மீன் பிடித்தல், அலவன் தனது பெடையை நீராட்டுதல், அன்றில் பனைமடலிற் கூடுகட்டுதல், குயில் மூங்கிலிற்றுங்குதல், சூல் மகளிர் புளிப்பை விரும்புதல், வாளை மீனுக்குக் கொம்பிருத்தல், கிளி வேப்பம்பழத்தைக் கவ்வுதல், யானை தனக்குச் செய்த தீங்கை மறவாமை, யானை வாழைத்தண்டால் மதமழிதல், துயரால் வருங்கண்ணீர் வெப்பமாதல்.

நற்றிணையி லறியப்படுவன :—

காதலி சுவரிலே கோடிட்டுப் பிரிந்த தலைமகன் வரு நாள் எண்ணுதல், காலாற் பந்து விளையாடுதல், காதலன் வரவைப் பல்லி கூறுதல், இரும்பு காய்ச்சிய உலையிலே கொல்லன் பனைமடலினுள்ள நீர் தெளித்து நெருப்பை அணைத்தல், எருமை மேய்ப்பான் அதன் மேல் ஏறிச் செல்லல்.

கலித்தொகையிற் காணப்படும் பழைய செய்திகள் முதலியன :—

முக்கண்ணான் மூவெயிலை எரித்தது (பாலை-2), எறித்தரு கதிர் தாங்கியேந்திய குடை நீழலுறித்தாழ்ந்த கரகமு முறைசான்ற முக்கோலு நெறிப்படச் சுவலசை இவேறோரா நெஞ்சத்துக்குறிப் பேவல் செயன்மாலைக் கொளை நடை' யந்தணர் (பாலை-9), பல்கலைச்சில் பூக்கலிங் கத்தள் (குறி-56), "தை நீராடிய தவம் (குறி-59), ஒத்துடை யந்தணன் எரிவலஞ் செய்வான் போல்" (மரு-60), 'கிளர்மணியார்ப்பச்சர அய்ச்சா அய்ச் செல்லுந்தளர் நடைச்சிறார் (மரு-80), ஆலமர் செல்வன் அணிசால் பெருவிறல் (81), ஆலமர் செல்வனணிசால் மகன் விழா (83), சுருவெழுதினமோதிரம் (மரு.84) தேரைவாய்க்கிண்கிணி (மரு.86), முகம் குதிரை முகமும் உடல் மக்களுடலுமாகி இரண்டு அழகுக்குப் பொருந்திய சூரபன்மாவைக் கொன்ற சிவந்த வேலையுடைய முருகன் (93), குறும்பூழ்ப்போர் (95), தொய்யில் பொறித்த வனமுலை (மரு.97), மீன்பூத் தவிர் வருமந்திவான் விசும்பு போல்—வான் பொறிபரந்த புள்ளி வெள்ளையுங்—கொலைவான் சூடிய குழவித்திங்கள்போல்—வளைபுமலிந்த கோடணி சேய் (103), பெரும்பெயர்க் கணிச்சியோன் மணிமிடற் றணிபோல் (105), நெருப்புக்கை தொட்டவர்போல விதிர் விதிர்த்திட்டு (115), தம்புகழ் கேட்டார் போற்றலை சாய்த்து (119), முக்கோல் கொளந்தணர் முதுமொழி நினைவார் போல் (126), உண் கடன் வழி மொழிந்திரங்குங்கான் முகனுந்தாங்—கொண்டது கொடுக்குங் கான் முகனும் வேறுகுதல்—பண்டு மிவ்வுலகத்தியற்கை (22) இராவணன் மலையை எடுத்தல் (38) நூற்றுவர் தலைவனைக் குறங்கறுத்தல் (52), மல்லரை மறஞ்சாய்த்த மால் (134), குங்கிலிய

மெழுதின ஒளிவிரிந்த தொழில்களை யுடையவாகிய வாய்களையுடைய மரத்தாற் செய்த சிறுபாவையாலும் பாவையாலும் சிறு பெண்கள் விளையாடுதல் (59) கொக்குரித்தாற் போன்ற மடிப்பையுடையவன் (64) மரங்களிற் றெய்வமுறைதல் (101), துற்சாதனனை வீமன் கொன்றது (101), சிகண்டி துரோணனைக் கொல்லல் (101), ஆய்ச்சியர் தங் கணவா கைகளைக்கோத்துக் குரவையாடுதல் (106), சுறுவினது மருப்பாற் செய்த பலகையைக் கோத்துப் புறவிதழொடிந்த நெய்தற் பூவை நெடிய நாரிலே தொடுத்து அழகு பெற கட்டிக்கையாலே வாசித்தலையுடைய யாழ் (131).

## சிந்தாமணியிற் காணப்படும் பழைய செய்திகள்

அருந்ததி காட்டல் (2669), ஆவியன்னதுகில் (67), எலி மயிர்ப்போர்வை (2680), ஏறுதி மோதிரஞ் செறித்த சேனுதிபதி (2167), கல்லூரி (395), குதிரையின் துடைகளில் அவற்றின் பிறந்த இடப் பெயரை எழுதுதல் (2215) யானையரசின் வலமருப்பீர்ந்து செய்த சீப்பு (2436), முழந்தாளளவாக வீரருடுக்குமுடை (468), வலம் புரிவடிவச் செப்பு (2475), பொன் செய்நாணிற் குஞ்சியைக் கட்டுதல் (2288).

## பரிபாடலில் காணப்படும் தமிழர் நாகரிகத்தை உணர்த்தும் செய்திகள்

இந்திரன் சாபமேற்றது (19), இம்மையின் பங்குறித்துக் கன்னியர் தை நீராடல் (91), இராகு கேதுகள் காணப்படுவன வல்லவென்பது (12), இளைய மகளிருடைய அழுகை தீர்தற்குத் தாயர் புலி புலி யென்று அச்சுறுத்தல் (14), நகத்திலும் கன்னத்திலும் செம்பஞ்சு எழுதுதல் (6), பழந்தேறற் செய்ததேறல் (16), புண்ணிய நதியில்

நீராடுவோர் பொன் முதலிய வற்றால் செய்வித்த மீன் முதலியவற்றை அதில் செல்லவிடுதல் (16), பொன்னாற் செய்த நண்டு இறவு வாளைகளை ஆற்றில் விடுதல் (10), மகளிர் தேரை மகளிர் ஓட்டுதல் (11), மகளிர் பிடியை ஊர் தல் (10), பரத்தையர் மாவும் பிடியும் ஊர்தல் (10).

## பெருங்கதையில் காணப்படும் அக்கால நாகரிகத்தை உணர்த்துஞ் செய்திகள்

பசு வழிபாடு (1-34-16), பிரச்சோதனனுக்கு தேவியர் பதினாறாயிரவர் (1-34-77), சிதேவி யென்னும் தலைக் கோலம் (1-34-121), பொன்னாலாகிய சிறுபாத்திரம் (1-34-160), தலைக்கோற் பெண்டிர் (1-35-72), பாலாவி போன்ற நுண்ணிய ஆடை (1-36-64), விபூதி (1-36-225), பொற்பூண் கட்டிய பிரம்பு(1-37-9), பேய்பிடித்தாடுவோரின் பின் பறைகொட்டிச் செல்லல் (1-37-246), கடிகையாரம் (1-38-123), பொறியொற்று (முத்திரை) (1-38-286), மான் கண்போன்றசாளரம் (1-40-9), எட்டிப்பட்டம் பெற்ற அரசகுமரன் (1-40-116), கொடிவடிவமெழுதின மார்பு (1-40-143), முலைக்கச்சு, (1-40-144), பஞ்சகௌவியம்(1-40-266), அரசனுக்குப் பிழைசெய்தோர் தம்முடைய அளவுள்ள பொற்பாவையொன்றைச் செய்வித்து அவன் சினத்தைப்போக்குதல் (1-40-371,4), நெற்கதிரை மகளிர் சூடுதல் (1-42-68), காவிதிப்பட்டத்துக் கறிகுறியாகக் கொடுக்கப்படும் பொற்பட்டம் (1-42-174), கயல்வடிவாகச் செய்த வெற்றிலைப்பை (1-44-229), புலிவடிவம் அமைந்த காலையுடைய கட்டில்(1-47-175),எலிமயிராற்செய்யப்பட்ட பூத்தொழிலையுடைய போர்வை (1-47-179), தென்னங்கள்ளும் தேனாற் சமைத்தகள்ளின் தெளிவும் (2-2-177), அரசன் சிங்காசனத்தில் வீற்றிருந்து முடிபுனையுமிடத்துப்

பட்டத்துக்தேவியும் உடனிருத்தல் (2-4-24), அரசிலைப் போல் பொற்றட்டாற் செய்யப்பட்ட ஆபரணம் (2-7-23); மணிகள் இழைத்த மோதிரம் (2-12-74), தன் பெயரெழுதின மோதிரம் (3-9-70), பவழத்தாற்செய்த குமிழையுடைய பொன்னாலாகிய மிதியடி (3-22-202), சித்திரங்கள் எழுதப் பட்ட உயர்ந்தமாடங்கள் (4-3-35), கணவனைப் பிரிந்துறையும் மகளிர் கூந்தல் புனையாமை (4-7-103), யானைத்தந்தத் தாற் செய்த வெண்பூக் கோவைகள் (4-14-64), புலிமுக மாடம் (4-15-108).

ஐங்குறு நூற்றிலறியப்படுவன :—

இடையர் கரும்பு குணிலாக் கனியுகுத்தல், இள மகளிர் தும்பைமாலை யணிதல், பொய்மைப் புலிகாவலுக்கு வைக்கப்படுதல், குரங்கு மூங்கிலிலேறி விளையாடுதல், சுரஞ் செல்வோர் பலவின் கனியை அருந்திச் செல்லல், பரத்தை யைத் தேரேற்றி வருதல், பரத்தையரோடு தலைமகன் புன லாடல், மகளிர் இடையில் பொற்காசணிதல்; மகளிர் பந்தாடுதல், மகளிர் எரிபுகுதல், முதலைத் தன் பிள்ளையைத் தின்னுதல்.

சிலப்பதிகாரத்திலறியப்படுவன :—

அந்தியில் மகளிர் மலரையும் அறுகையும் நெல்லையும் மங்கலமாகச் சிந்துதல், ஆனைமேற் பறையறைதல், இரண் டாஞ் சாமத்திற் கண்ட கனா எட்டுமாதத்திற் பலிக்கு மென்பது, தேவாசுரயுத்தம் பதினெட்டாண்டிலும், இராம ராவணயுத்தம் பதினெட்டு மாதத்திலும் முடிந்த தென்பது, இறந்தவர்களை உத்தேசித்துத் தானஞ் செய் தல், இறைவன் சூடிய பிறை இரண்டு கலைத்து என்பது, உயிர்ப் பலியுண்ணும் மயிர்க் கண்முரசு, எண்ணெண்கலை யோர் (வேசையர்), எழுநிலை மாடம், கடையில் இன்ன

சரக்கு ஈண்டுள்ளதென்று அறிவிக்கக் கொடிகளெடுத்தல், கலங்கரை விளக்கம், கற்புடைய மகளிர் இருக்கும் நாட்டில் மழை பெய்யுமென்பது, சஞ்சீவி நான்குவகை—சல்லிய கரணி, சந்தான கரணி, சமனிய கரணி, மிருத சஞ்சீவி, சந்திரன் கோயில், சூரியன் கோயில், களவு நூல், தெய்வத்தைப் பூவும் புகையும் சாந்தும் கண்ணியும் கொண்டு வழிபடுதல், நூலேணி, புலிப் பல்லைத் தாலியாகக் கட்டுதல், பொதிகளினமேல் அளவு, எண், நிறை பொறிக்கப் பட்டிருத்தல், யானைப் பிடரியில் மகளிரையேற்றி நகர்க்கு மணத்தை யறிவித்தல்.

## மதுரை

### (2000 வருடங்களுக்குமுன்)

"திருவழுதி நாடென்னுஞ் சிறப்புப்பெயர் பெற்ற பாண்டிமண்டலம் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனப் பெரியோரால் வரையறுக்கப்பட்ட ஐவகை நிலங்களும் பொருந்தி இனிது விளங்கும். குறிஞ்சிநிலத்திலே இஞ்சியும் மஞ்சளும் மிளகும் வெண்சிறுகடுகும் தோரை நெல்லும் ஐவன நெல்லும் வெகுவாய்ப் பல்கி யிருக்கும். குறத்தியர் தினைக் கிளிகடியும் ஓசையும், கானவர் அவரைமேயும் ஆமாவைக்கடிகின்ற பூசலும், பூக்கொய்யும் மகளிர் புலி, புலியென்று கூறுமொலியும் மாறி மாறி ஒலியாநிற்கும். முல்லையின்கண் எள்ளிளங்காயும் வரகின் கதிரும் ஒருபால் முற்றியிருக்கும். ஒருபால் சிறுதினை கொய்வர். அங்கு மிங்கு மாழ்ந்த குழிகளில் இரத்தினங்கள் கிடந்து விளங்கும். பசிய பயிர்களின் இடங்கடோறும் முசுண்டைப்பூவும் முல்லைப்பூவும் உதிர்ந்து பரந்து கிடக்கும். மருதநிலத்தில் கழனிகடோறும் யானை நின்றால் மறையும் படியாக நெற்பயிர் பச்சைப்பசேலென வளர்ந்திருக்கும்.

தடாகங்களில் தாமரையும் நீலோற்பலமும் சேதாம்பலும் மலர்ந்து நறுமணம் வீசும். கழனிகளிலும் குளங்களிலும் மடுக்களிலும் வலைஞர் மீன்களைப் பிடித்து அவைகளைக் கொன்று குவிக்கும் ஆரவாரமும், கரும்பிற்கிட்ட ஆலையிடத் தோசையும், களைபறிப்பிடத் தோசையும், நெல்லரிகின்ற கிணையின் ஒலியும், ஆண்களும் பெண்களும் நீராடுகின்ற இரைச்சலும் ஆகாயத்தே சென்று முழங்கும். நெய்தலாகிய கானலினிடத்தே முத்தும் வளையும் பரதர் தந்த பல்வகைப் பண்டங்களும் விலை செய்யப் படும். யவன முதலிய தேயத்தினர் குதிரை முதலிய வற்றைக் கொணர்ந்து கொடுத்து, வெள்ளுப்பும் தீம் புளியும், கொழுத்த மீன்களைத் துணித்து உப்பிட் டுலர்த்திய கருவாடுகளும் என்றிவை போன்றவற்றைக் கொண்டு போவர். குறிஞ்சிக்கும் முல்லைக்கும் இடை யிலேயுள்ள பாலை நிலத்தில், ஆறலைக் கள்வர் வழிபோவாரை வருத்தா வண்ணம் அரசனால் ஏவப்பட்ட வீரர் இலை வேய்ந்த குடிலில் மான்றோலாகிய படுக்கையுடையராய்ப் பொருந்தி யிருப்பர்.

" இவ்வைந்திணைப் பாங்கும் அழகுறப்பெற்றுப்பாடல் கள் சான்ற நன்னாட்டு நடுவில், திருவாலவாய், திருநள்ளாறு, திருமுடங்கை, திருநடுவூர் என்னும் நான்மாடக் கூடல் எனப் பெயர்பெற்ற மதுரை மா நகரமானது பூமாதின் அழ கிய முகம்போல் பொலிவுற்றிருக்கும். இந்நகரைச் சூழ்ந் திருக்கும் மதில் கற்படைகள் பலவுளதாய் விண்ணுற ஓங்க, அதனைச் சூழ்ந்த அகழியானது நீலமணிபோலும் நீரை யுடைத்தாய் மண்ணுற ஆழ்ந்திருக்கும். நெடிய நிலையினை யும் திண்ணிய கதவினையுமுடைய வாயிலின் மீதமர்ந்த மாடமானது மேகமுலாவும் மலைபோல் ஓங்கியிருக்கும்.

மரந்தரும் மாவும் இடையறுமல் வழங்குதலால் வாயிலானது இடைவிடாதோடுகின்ற வையையாற்றினைப் போன்றிருக்கும். வாயிலைக் கடந்த மாத்திரத்தில், அகன்ற தெருக்களும் அவற்றின் இருபுறத்திலும் சாளரங்கள் பல வமைந்தனவாய் உயர்ந்து தோன்றும் வீடுகளும், ஆறும் அதன் இருகரையும் போல விளங்கும்.

அங்காடித் தெருவிலே, கோயில்களுக்கு விழாக்களை நடத்திக் கட்டின அழகிய கொடிகளும், தண்டத்தலைவர் பெற்ற வெற்றியின் பொருட்டு எடுத்த சயக்கொடிகளும், கட்கடைகளில் கள்ளின் களிப்பு மிகுதியைச் சாற்றுகின்ற கொடிகளும் இன்னும் பலவாய் வேறுபட்ட கொடிகளும் பெரிய மலையிடத்து அருவிகள் அசையுமாறு போல அசையா நிற்கும். யானையுந் தேரும் புரவியும் வீரரும் ஆகிய நாற்பெரும்படைகள் பல்காலும் வருவனவாய் மீள்கையினாலே, பூவிற்பாரும் பூமாலை விற்பாரும் சுண்ணம் விற்பாரும் வெற்றிலையும் பாக்கும் சுண்ணாம்புடனே விற்கின்றவர்களும் தம் இன்னுயிரஞ்சி ஏங்கி யிருந்து, அந்நாற்படையும் அகன்ற பின்னர் வருத்த நீங்கி, மாடமாளிகை கூட கோபுரங்களின் குளிர் நிழலிலே இருந்து இளைப்பாறுவார்கள். கிழப்பெண்டிர் பண்ணியங்களை நறும்பூவுடனே ஏந்திச் சென்று மனைகடோறும் மனைகடோறும் உலாவி விற்பர்.

"மாலைப் பொழுதில் விழாக்காணச் செல்வர்கள் பட்டுடுத்து உடைவாள் தரித்து மாலைதாங்கித் தேர்களின் மீதேறிக் காலாட்கள் புடைசூழ்ந்துவரக் குதிரைகளைச் செலுத்திச் செல்வர். அத்திருவிழாக்களைப் பெண்கள் அரமியத்தலத்தினின்றுங்காண்பர். அங்கேகட்டிய கொடிகளின் மீது மந்தமாருதம் வீசுதலால் அம்மகளிர் முகங்களானவை

மேகத்திலே மறையுஞ் சந்திரனைப்போல ஒரு காற்றேன்றி ஒருகால் மறையும்.

"புத்த மதத்தினராகிய பேரிளம் பெண்டிர் சிறு பிள்ளைகளை எடுத்துக் கொண்டு, தங் கணவரோடு பூசைக்கு வேண்டும் பூவினையும் தூபங்களையும் கைகளில் ஏந்திச் சென்று வணங்கும் பௌத்தப் பள்ளிகள் ஓரிடத்துக் காணப்படும். சிறந்த வேதங்களை ஓதி, யாகாதி கருமங் களைச் செய்து, பிரமந்தாங்களேயாய், வீட்டின்பத்தை இவ்வுலகிலே தானே அடைகின்ற பிரமவித்துக்களிருப் பிடம் ஒருபால் புலப்படும். ஒருபால், முக்கால ஒழுக்க மும் மூவுலகின் செய்தியும் முழுதுணரும் சமணமுனிவர் கள் உறைகின்ற அமணப்பள்ளிகள் கட்புலனும். அப்பால் அறங் கூறவையமும், அமைச்ச ரிருக்கையும் அழகுற விளங்கும்.

"சங்குவளை கடைவாரும் மணிகளைத் துளையிடு வாரும் பொற்கொல்லரும் பொன்வாணிகரும் ஆடை விற் பாரும் சித்திரகாரரும் பிறருங்கூடி அந்திக்கடையில் நெருங்கி நிற்பர். அறக்கூழ்ச்சாலையில் பலாப்பழம் வாழைப் பழம் முந்திரிகைப்பழம் முதலிய பழங்களையும் பாகற்காய் வாழைக்காய் வழுதுணங்காய் முதலான காய்களையும் இலை கறிகளையும் கண்ட சருக்கரைத் தேற்றையும், இறைச்சி களையுடைய சோற்றையும் கிழங்குகளுடனே பாற்சோறு பால் முதலியனவற்றையும் கொண்டுவந்து பசிதாகங் களினல் வருந்துவோர்க்கும் தரித்திரர்க்கும் இடுவார்கள். இக்கூறிய பலவிடங்களினும் எழுகின்ற ஓசையானது அந்திக்காலத்தில் பல்வேறு பறவைகள் கூடிய இடத்து எழுகின்ற ஓசையின் தன்மையதாகும்.

"பொழுது சாய்ந்தபின் ஆடல் பாடல் முதலிய பல் வகைத் துறைகளில் அவ்வவர் பொழுதைக் கழிப்பர். முதல் யாமஞ் சென்றபின் கடைவிற்பார் கடைகளை யடைத்தும் பண்ணியம் விற்பார் அவற்றின் பாங்கரும் படுத்துறங்கத், திருநாளின் கண்ணே கூத்தாடுங்கூத்தர் அஃதொழிந்து துயில் கொள்ள, ஒலிநிறைந்தடங்கின கடலையொக்கப் படுக்கையிலே துயில் கொள்வோர் இனிதாகக் கண்வளர்வர். ...........பின்பு வைகறையாமத்தில், அந்தணர் வேதம். ஓதுவர். யாழோர் நரம்பைஇனிதாகத்தெறித்து மருதத்தை வாசிப்பர். பண்டம் விற்பார் தமது கடைகளை மெழுகுதலைச் செய்வர். கற்புடை மகளிர் துயிலுணர்ந் தெழுந்து

"காட்டுக்களைந்து கலங்கழீஇ யில்லத்தை
யாப்பிநீ ரெங்குந் தெளித்துச் சிறுகாலை
நீர்ச்சால் கரக நிறைய மலரணிந்
தில்லம்பொலிய வடுப்பினுட் டீப்பெய்க"

என்றபடி அக்காலத்து இல்லத்திற் செய்யத் தகுவன வற்றைச் செய்யா நிற்பர். கோழிச் சேவல்கள் விடியற் காலத்தை அறிந்து கூவா நிற்கும். சேவற் பறவைகள் தத்தம் பேடைகளை அழையா நின்று தீங்குரல் செய்யும். கூட்டிலே உறைகின்ற கரடி புலி முதலிய வலிய விலங்குகள் முழங்கா நிற்கும். முதுகு காட்டிப் போந்த வீரரும் வெட்டுண்ட வீரரும் விடுத்த யானைகளும் குதிரைகளும் ஆனிரைகளும், தோல்வியடைந்த அரசர்கள் திறையாகக் கொணர்ந்த கலங்களும், அவைபோன்றன பிறவும் அரண் மனையை நோக்கிச் செல்லும். இங்ஙனம், கங்கையாறு கடலிற் கலந்தாற்போல, உலகிற் பொருள்களெல்லாம் மதுரையை அடையும்.

" இம்மா நகரில் கோயில் கொண்டு செங்கோல் செலுத்தும் பாண்டியன் 'வைகறையாமந் துயிலெழுந்து காலைக் கடனைக் கழித்துச் சந்தனம் பூசி, மார்பிலே மாலை தாங்கி கையிலே வீரவளையுடன் கணையாழியைச் செறித்துக், கஞ்சியிட்ட துகிலையுடுத்து, அதன்மேலணியும் அணிகலன் களை அழகுற வணிந்து, கொலு மண்டபத்திலே வீற்றிருப் பான். இருந்த வளவிலே.ஏனுதிப் பட்ட முதலிய சிறப்புப் பெற்றபடைத் தலைவர் அவனது வெற்றித்திறத்தை வாழ்த்து வர். பின்னர் அரசன், தான் நாடு நகர் பெறும்படியாகவும் தன் வெற்றி சிறக்கும்படியாகவும் உதவிய வீரரை யெல்லா மழைத்துப், பாவலருடனே பாணர் பாட்டியரையும் அழைத்து யானை தேர் என்பன போன்ற பரிசளிப்பான். அங்ஙனம் பல பல பொருள்களைக் கொணர்ந்து கொடுத்த லால் அந்நாட்டில் வாழுங் குடிமக்கள் செல்வம் பெருகி யிருப்பர்." (மதுரைக் காஞ்சி).

## 1800 வருடங்களுக்கு முற்பட்ட தமிழர் என்னும் நூலிற் காணப்படும் கவனித்தற் குரிய சில பொருள்கள்

| | | | |
|---|---|---|---|
| கழாத் தலையார் | ... | கி. பி. | 30—60 |
| முடத்தாமக் கண்ணியார் | ... | ,, | 60—90 |
| கபிலர் | ... | ,, | 90—130 |
| நக்கீரர் | ... | ,, | 100—130 |
| மாமூலனர் | ... | ,, | 100—130 |
| கல்லாடர் | ... | ,, | 100—130 |
| மாங்குடிமருதனர் | ... | ,, | 90—130 |
| திருவள்ளுவர் | ... | ,, | 100—130 |
| கோவூர்கிழார் | ... | ,, | 100—130 |
| இறையனர் | ... | ,, | 100—130 |

| | | |
|---|---|---|
| பரணர் | ... கி. பி. | 100—130 |
| பெருங்கோசிகனர் | ... ,, | 100—130 |
| ஔவையார் | ... ,, | 100—130 |
| இடைக்காடனர் | ... ,, | 100—130 |
| சீத்தலைச் சாத்தனர் | ... ,, | 110—140 |
| இளங்கோவடிகள் | ... ,, | 110—140 |
| அரிசில் கிழார் | ... ,, | 110—140 |
| பொன்முடியார் | ... ,, | 110—140 |
| பெருங்குன்றூர்கிழார் | ... ,, | 120—150 |

கி. பி. 50-க்கும் 150-க்கு மிடையில் செய்யப்பட்ட நூல்களும் அவற்றில் அடங்கிய அடிகளும்.

| | அடிகள் |
|---|---|
| குறள் ... | 2,660 |
| மணிமேகலை ... | 4,857 |
| சிலப்பதிகாரம் ... | 4,957 |
| கலித்தொகை ... | 4,304 |
| இன்னு நாற்பது ... | 160 |
| குறிஞ்சி ... | 261 |
| குறிஞ்சி (கபிலர்-ஐங்குறு நூறு) ... | 400 |
| திருமுருகாற்றுப்படை ... | 317 |
| நெடுநல்வாடை ... | 188 |
| பொருநர் ஆற்றுப்படை ... | 248 |
| பெரும்பாணுற்றுப்படை ... | 500 |
| பட்டினப்பாலை ... | 301 |
| மதுரைக்காஞ்சி ... | 782 |
| மலைபடுகடாம் ... | 583 |

"ரோமர் கி. பி. 226-லும் முசிறியில் 840 முதல் 1200 வீரரையுடைய படை ஒன்று வைத்திருந்தார்களென்றும்,

அவ்விடத்தில் ஆகஸ்டஸ்க்கு ஒரு கோவில் கட்டப்பட்டிருந்ததாக Malabar Manual என்னும் நூல் கூறுவதாக கனகசபைப் பிள்ளை அவர்கள் 1800 வருடங்களுக்கு முற்பட்ட தமிழர் என்னும் நூலிற் காட்டியுள்ளார்.

[ப. 38.]

"It was from the Nagas that the Aryas first learnt the art of writing; and hence Sanskrit characters are to this day known as Deva-nagari.
(Tamils 1800 years ago p. 45)

"At Laboe Toewa, Paros, Sumatra has been found a Tamil inscription dated in the Saka year 1010=AD 1088. It records a gift by a body of persons who are styled 'the one-thousand five hundred'. This epigraph proves that the Tamil language was used in public documents on the Island of Sumatra in the 11th century A. D. accordingly, the influence which the Tamils and their language exercised is much greater than the traditional boundaries would warrant us to believe.

(Rai Bahadur V. Venkayya, M.A.,
Epigraphist to the Government of India)

## அரச பரம்பரை

### சோழ மன்னர்

- முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி
  - வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளி (நெடுஞ்சேரலாதனோடு பொருது துஞ்சியவன்)
  - உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னி (அழுந்தூர் வேளின் மகளை மணந்தவன்)
    - கரிகாற்சோழன் (கி. பி. 50—95) மறு பெயர் திருமாவளவன்; நாங்கூர்வேளின் மகளை மணந்தவன்; இவன் மகள் சோணை (மணக்கிள்ளி) சேரன் செங்குட்டுவனின் தாய்
      - சேரலாதன் = சோணை
        - (வானவர்மன்)
          - செங்குட்டுவன் (மறுபெயர், இமயவரம்பன்)
          - இளங்கோவடிகள் (சிலப்பதிகார ஆசிரியர்)
      - சேட்சென்னி நலங்கிள்ளி (கி. பி. 95—105)
        - கிள்ளிவளவன் (கி. பி. 105—120) (பீலிவளையை மணந்தவன்; குளமுற்றத்துத் துஞ்சியவன்)
        - பெருநற்கிள்ளி (கி. மு. 120—150) (இராச சூயம் வேட்டவன்)
      - மாவளத்தான்
      - நெடுங்கிள்ளி (காரியாற்றிற்றுஞ்சியவன்)

## பாண்டிய மன்னர்

பெருவழுதி

|

மாறன் வழுதி

|

நெடுஞ்சேழியன் (கி. பி. 75—90)

(ஆரியப்படை வென்றவன், சிங்காசனத்திற் றுஞ்சியவன்)

|

வெற்றிவேற்சேழியன் (கி. பி. 75—90)

|

நெடுஞ்சேழியன் II (கி. பி. 90—128)

(தலையானங்கானத்துச் செருவென்றவன் ;

யானைக்கட்சேயைச் சிறை பிடித்தவன் ;

வெள்ளியம்பலத்திற் றுஞ்சியவன்)

|

கீரன்சாத்தன் (குளமுற்றத்துத் துஞ்சியவன்.

|

உக்கிரப்பெருவழுதி (கி. பி 128—140)

(கானப்பேரெயிலை முற்றுகை யிட்டவன்.

பெருநற்கிள்ளியின் ராசசூயத்துக்குச் சமுக மளித்தவன்)

|

நன்மாறன் (கி. பி. 140—150)

இலவந்திப்பள்ளித் துஞ்சியவன்

(கி. பி. 7-ம் நூற்றாண்டு முதல் 9-ம் நூற்றாண்டு வரை)

|

1. கடுங்கோன் பாண்டியாதி ராசா

|

2. ஆதிராசா மாறவர்மன்

3. சேழியன் சேந்தன்

4. மாறவர்மன் அரிகேசரி அசமாசமன்

5. கோச்சடையன் ரணதீரராசா

6. அரிகேசரி பராங்குசன் மாறவர்மன் தேர்மாறன்

7. யாதில நெடுஞ்சடையன் பராந்தகன்
(வேள்விக்குடிச் சாசனம் அளித்தவன்)
(கி. பி. 769—70)

8. ராசசிம்மா II

9. வரகுண மகாராசா

10. சிறீமாற சிறீவல்லப ஏகவீரன்
பராசக்கிர கோலகல பல்லபபான்சன்

11. வரகுணவர்மன் (மாறன் சடையன் கி. பி. 862—863-க்கு மிடையில் அரசாச்சி எய்தியவன்)

12. பராந்தக வீரநாராயண

13. ராசசிம்மா III

(கி. பி. 13-ம் நூற்றாண்டுக்கும் 17-ம் நூற்றாண்டுக்கு மிடையில்)

| | | |
|---|---|---|
| 1. | யதவர்மன் குலசேகரன் | 1190—1214 |
| 2. | மாறவர்மன் சுந்தரன் பாண்டியன் I | 1216—1235 |
| 3. | மாறவர்மன் சுந்தரன் பாண்டியன் II | 1238—1251 |
| 4. | யாதவர்மன் சுந்தரன் பாண்டியன் | 1251—1261 |
| 5. | வீரபாண்டியன் | 1252—1267 |
| 6. | மாறவர்மன் குலசேகரன் | 1268—1308 |
| 7. | சடாவர்மன் சுந்தரா | 1275—1290 |
| 8. | மாறவர்மன் குலசேகரன் | 1314—1321 |
| 9. | மாறவர்மன் பராக்கிரம பாண்டியன் | 1334—1352 |
| 10. | சடாவர்மன் பராக்கிரம பாண்டியன் | 1357—1372 |
| 11. | பராக்கிரம—பாண்டிய தேவன் | 1365 |
| 12 | பராக்கிரம பாண்டிய | 1384 |
| 13. | யதவர்மன் குலசேகரன் | 1395 |
| 14. | அரிகேசரி பராக்கிரம பாண்டியன் | 1422 |
| 15. | மாறவர்மன் வீரபாண்டியன் | 1422 |
| *16. | அழகன் பெருமாள் குலசேகரன் | 1430 |
| 17. | வீரபாண்டியன் | 1437 |
| 18. | ,, | 1475 |
| 19. | பராக்கிரம பாண்டியன் குலசேகர தேவன் | 1479 |
| 20. | பராக்கிரம பாண்டியன் | 1516 |

* 14-வதின் இளைய சகோதரன்

| | | |
|---|---|---|
| 21. | ஜதில வர்மன் ஸ்ரீவல்லப அல்லது அபிராமபராக்கிரமா | 1533 |
| 22. | மாறவர்மன் சுந்தர பாண்டியன் | |
| 23. | குலசேகர அல்லது பெருமாள் | 1543 |
| 24. | வீரபாண்டியன் | |
| 25. | கோண் எறின்மைக் கொண்டான குலசேகர தர்ம பெருமாள் | 1550 |
| 26. | ஸ்ரீவல்லப ஆதிவீரராமன் | 1562 |
| 27. | குலசேகர பராக்கிரம அழகன் சொக்கன் | 1572 |
| 28. | அபிராம வரதுங்கராம | 1586 |
| 29. | வீரபாண்டிய | |
| 30. | சிவலமாறன் | 1615 |

## நாயக்க அரசர்

| | |
|---|---|
| விசுவநாதன் | 1559 |
| குமர கிருஷ்ணப்ப | 1563 |
| கிருஷ்ணப்ப (மறுபெயர்) பெரிய வீரப்ப விஸ்வநாத II | 1573 |
| லிங்கைய (மறு) குமாரகிருஷ்ணப்ப (மறு) விஸ்வநாத—III | 1595 |
| முத்து கிருஷ்ணப்ப | 1602 |
| முத்து வீரப்ப | 1609 |
| திருமலை | 1623 |
| முத்து அழகதிரி அல்லது முத்துவீரப்ப | 1659 |
| சொக்கநாத அல்லது சொக்கலிங்க | 1662 |
| ரங்க கிருஷ்ணமுத்து வீரப்ப | 1682 |
| மங்கம்மாள் | 1689 |
| விசயரங்க சொக்கநாத | 1704 |
| மீனாட்சி | 1731—1736 |


சேரமன்னர்
உதியஞ்சேரலாதன் = வேள்மாள் நல்லினி
நெடும் சேரலாதன் இமயவரம்பன்
(கி. பி. 40—55) வேள்மான் அவைக் கோவின் மகள்
பதுமன்தேவியை மணந்து 58-வருடம் அரசுபுரிந்தான்
பல்யானை செல்கெழுகுட்டுவன்
ஆட்சிபுரிந்தகாலம் 28 ஆண்டு
முடிச் சேரலாதன்—II (கி. பி. 55—90)
(மறு நாமங்கள் வானவரம்பன் :
செல்வக்கடுங்கோ) மணக்கிள்ளியை
மணந்து 25 ஆண்டு அரசுவீற்றிருந்தான்
அடுகோல்பாட்டுச் சேரலாதன்
38 ஆண்டு அரசுபுரிந்தான்
செங்குட்டுவன் (கி. பி. 90—125)
(இராசசூயம் வேட்டவன் ;
ஆரிய மன்னரைச் சிறைபிடித்தவன்
இளங்கோவடிகள்
செல்வக்கடுங்கோ (யானைக்கட்சேய்)

செல்வக்கடுங்கோ (யானைக்கட்சேய்)
(இ. பி. 125—135)

பெருஞ்சேரல் இரும்பொறை
(இ. பி. 135—150)
(அதிகமான் எளினியைக் கொன்று தகடூரைக் கைப்பற்றியவன்)

குடக்கோ சேரலிரும் பொறை
(பெருங்குன்றூர் கிழார் இவர் அரண்மனைப் புலவர்
16-வருடம் அரசுபுரிந்தவன்)

சேரமான் மாவெண்கே
(பாண்டியன் உக்கிரப்பெருவழுதி ராசசூயம்
வேட்ட பெருநற்கிள்ளி முதலானோர் இவர் காலத்தவர்)

"மலைமேன் மரங் கொணர்ந்து மாண்புடைத்தாய்ச் செய்த
நிலையொத்த வீதி நெடுமாடக் கூடல்
விலைத் தயிர் கொள்ளீரோ வென்பாண் முலையிரண்டுஞ்
சோழனுறந்தைக் குரும்பையோ தொண்டைமான்
வேழஞ்சேர் வேங்கடத்துக் கோங்கரும்போ வீழ்த்துத்
தச்சன் கடைந்த வினைச் செப்போ வச்சுற்று
என்னமோ வாய்மயிலோ வாரஞர் நோய் செய்தானை
யின்னந் தெரிகிற்றிலம்

(யாப்—விருத்தி—மேற்கோள்)

மேற்காட்டிய செய்யுள் ஈழத்துத் தச்சர் கைவினையிற் சிறந்தவர்கள் எனப் புலப்படுத்துகின்றது. இராவணன் மயன் புதல்வியாகிய மந்தோதரியை மன்றல் புரிந்த வரலாறும் உற்று நோக்கற்பாலது.

அரசாட்சி

" திருக் கொண்டு பெருக்க மெய்திவீற் றிருந்து
குற்றங் கெடுத்து விசும்பு தைவரக்
கொற்றக் குடையெடுப் பித்து நிலநெளிய
படைபரப்பி யாங்காங்குக் களிறியாத்து
நாடுவளம் பெருகக் கிளைகுடி யோம்பி
நற்றாய் போல வுற்றது பரிந்து
நுகத்துக்குப் பகலாணி போலவும்
மக்கட்குப் கொப்பூழ் போலவும்
உலகத்துக்கு மந்தரமே போலவும்
நடுவு நின்று செங்கோ லோச்சி
யாறில்வழி யாறு தோற்று வித்துக்
குளனில் வழி குளந்தொடு வித்து

முயல் பாய்வழிக் கயல் பாயப் பண்ணியும்
களிறு பிளிற்றும் வழி பெற்றம் பிளிற்றக் கண்டும்
களிறார் பலகாற் சென்று தேன்றேயவும்
தண்புனற் படைப்பைத் தாகியும்
குழைகொண்டு கோழி யெறிந்து
இழைகொண் டான்றட்டும்
இலக்கங்கொண்டு செங்காலுரை யெறிந்தும்
உலக்கை கொண்டு வாளை யோச்சியும்
தங்குறை நீக்கியும் பிறர்குறை தீர்த்தும்
நாடாள்வதே யரசாட்சி''

(யாப்பருங்கல விருத்தி—மேற் கோள்)

பைசாச மொழி என்பது பழைய தெலுங்கு மொழி என்பர் தமிழ் ஆராய்ச்சி என்னும் நூலார்.

சதி அல்லது விதவைகளைக் கணவருடன் தீயிலிட்டுக் கொளுத்தும் வழக்கம் குற்றச் சாட்டாக கி. பி. 1829-ல் சட்டம் உண்டாக்கப்பட்டது. கி. பி. 1832-ல் அச்சட்டம் நடபடிக்குக் கொண்டுவரப்பட்டது. இக்காலம் உயிருடன் எரிக்கப்படாது இருக்கும் கைம்மைகள் பிரிட்டிஷ் அரசாங்கத்தாருக்கு வாழ்த்துக் கூறுவார்களாக.

"வாழ்க நம்மன்னவன் வாழ்க வையக
மாழ்கநம் மரும்பகை யலர்க நல்லறம்
வீழ்க தண்புனல் பயிர்விளைக மாநிலந்
தாழ்க மற்றருந்துயர் சாற்றக் கேண்மினே."

முற்றும்

THE ROYAL PRINTING WORKS, MOUNT ROAD, MADRAS.